# பெரியாழ்வார் பாசுரங்கள்

## — ஓர் ஆய்வு.

சென்னைப் பல்கலைக்கழக பிஎச்.டி.
பட்ட ஆய்வேடு


பேராசிரியர்

டாக்டர். ஆ. க. பார்த்தசாரதி
M.A., M.Litt., Ph.D.

தமிழ்த் துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30.



பரணி  வெளியீடு

107, ஸ்ட்ராஹன்ஸ் சாலை
சென்னை-12.

முதற் பதிப்பு: 16 மார்ச் 1994

உரிமை: ஆசிரியருக்கு

நூலின் பெயர்: பெரியாழ்வார் பாசுரங்கள் — ஓர் ஆய்வு.

வெளியீடு: பரணி வெளியீடு

பிரதிகள்: 1000

பயன்படுத்திய தாள்: சேஷசாயி டிம்மி 7.3 Kg.

அச்சிட்ட எழுத்து: 10 பாயின்ட் ரோமன்

**விலை: ரூ. 60**

---

**திருமலை திருப்பதி தேவஸ்தான நிதி உதவியுடன் இந்நூல் வெளியிடப்படுகிறது.**

---

நூல் கிடைக்கும் இடங்கள்:

* **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
  165, டி.டி.கே. சாலை, ஆழ்வார் பேட்டை,
  சென்னை-18
* **வானதி பதிப்பகம்,**
  தீனதயாளு தெரு, சென்னை-17.
* **பாரி நிலையம்,**
  184, பிரகாசம் சாலை, சென்னை-108
* **ஐந்திணைப் பதிப்பகம்**
  279, பைகிராஃப்ட்ஸ் சாலை, சென்னை-5
* **தமிழ்ப் புத்தகாலயம்,**
  திருவல்லிக்கேணி, சென்னை-5
* **பரணி வெளியீடு**
  107, ஸ்ட்ராஹன்ஸ் சாலை, சென்னை-12.

---

அச்சிட்டோர்: திருமலை தெய்வம் ஆர்ட் பிரிண்ட்ஸ்.
சென்னை-29 போன்: 617836

# அணிந்துரை

பேராசிரியர். C. ஜெகந்நாதாசார்யர்,
M. A. (Hist) M. A. (Tamil) L. T.,
P.O L.ipl. geog., Vidvan,
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்,
U.G.C. பேராசிரியர்,
விவேகானந்தர் கல்லூரி, மயிலை, சென்னை-4.

"புதுவையர் கோன்பட்டன் பாடிய பனுவல்கள்
மதுவைப் போல் அண்ணித்து மாடாம் அது தன்னை
எல்லோரும் பெற்று இனிமையுற வாய்ந்தீய்ந்த
நல்லாசான் சாரதியா வார்."

"புலவர்க்கு நல்விருந்து பேராப் பிறவிச்
செலவிற்கு நன்மருந்து மாயோன்—நலத்தின்
நாரநிதி நற்றமிழ்க்கோர் நல்லாய்வு பார்த்த
சாரதியார் செய்த திறம்."

"குறித்தொருவர் கொண்டாடுங் கொள்கைத்தோ கோதை
பிறந்த வூர் விண்டுசித்தர் நீடூர்—பிறப்பிலியூர்"

என்று பெருமை பெற்றது ஸ்ரீ வில்லிபுத்தூர். வட பெருங் கோயிலுடையான், பெரியாழ்வார், ஆண்டாள் என்கிற மூவரையும் தன்னிடத்திற் கொண்டிருப்பது. ஆண்டாளுக்குப் பிறவியும் புக்கவிடமும் அவ்வூரே. அத்தகைய ஏற்றம் பெற்றது அவ்வூர். இந்த ஆழ்வார் அந்த வூரிற் பிறந்து, இளமை தொடங்கி எப்பொழுதும் தமது சித்தத்தை விஷ்ணுவினிடத் திலே செலுத்தி, அப்பெருமானை மனத்திலே நிலைநிறுத்தித் தியானித்து வந்ததனால் "விஷ்ணுசித்தர்" என்று இயற்பெயர் பெற்றார், பின்னர் "உண்டோ திருப்பல்லாண்டுக் கொப்ப தோர் கலைதான்" என்றபடி திருப்பல்லாண்டு பிரபந்தம் பாடி, பின்பு எம்பெருமான் மாட்டுப் பொங்கும் பரிவாலே

"பெரியாழ்வார்" என்று பேர்பெற்றுப் பெரும் புகழெய்தினார். பாண்டிய மன்னன் நெடுமாறன் என்னப்படும் நெடுஞ் சடையன் பராந்தகன் (765-790) கொண்டாடும்படி பொற்கிழி பெற்றுப் பட்டர் பிரான் என்று பலரும் போற்றும்படி புலவரேறு ஆயினார். ஆண்டாளாகிய கோதையார் தம்மைப் 'பட்டர்பிரான் கோதை' என்று பெருமிதங் கொள்கிறார். இவரும் "தொடை சூடிக் கொடுத்தாள் தொழுமப்பன் வாழியே" என்று வாழ்த்துப் பெற்றார். இப்படிப் பெருஞ் சிறப்போடு வாழ்ந்த பெரியாழ்வாரின் அருளிச் செயல்கள் நாலாயிர திவ்ய பிரபந்த தொகுப்பில் முதலாயிரத்தில் முதலி டம் பெற்றுத் திகழ்வனவாகும். அவை முறையே—திருப்பல் லாண்டு, பெரியாழ்வார் திருமொழி என வழங்கப்படும். இவ்விரு பிரபந்தங்களையும் கவினுற வாக்கிய ஆழ்வாரைப் பற்றி யமைந்தது இந்த ஆய்வுநூல் இந்த ஆய்வு நூலைச் சமைத்தவர் பேராசிரியர் டாக்டர். ஆ.க. பார்த்தசாரதி அவர்கள். நற்பண்பாளர்; வைணவ நெறிச் சீலர்; ஆன்மீகத்தில் நோக்குடையவர். இனி இந்த ஆய்வுநூலுள் கூறியுள்ள விவரங் களைச் சுருங்கக் காண்பாம்.

I வைணவ சமயத்தின் தொன்மையும் வளர்ச்சியும்:- இதனில், வேத இதிகாச புராணங்களைக் குறித்திருப்பதோடு இச்சமயத் தின் தொன்மையும் சிறப்பும் பற்றிப் பண்டைய தமிழ் நூல்களாகிய தொல்காப்பியம், ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை, கலித்தொகை, பரிபாடல், திருக்குறள், நற்றிணை, புறநானூறு, அகநானூறு முதலிய வற்றைக் கொண்டு நிறுவியுள்ள திறம் பாராட்டத்தக்கது. இராம கிருஷ்ணாதி அவதாரங்களின் மகிமைக் குறிப்புக் களைப் பத்துப்பாட்டிலடங்கிய சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, திருமுருகாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி இவைகளைக் கொண்டும், பதினெண்கீழ்க் கணக்கிலடங்கிய திரிகடுகம் கொண்டும், நிலைநிறுத்தியுள்ள திறமும் பாராட்டத்தக்கது.

வளர்ச்சியைப் பற்றிக் கூறுமிடத்து-ஆழ்வார்கள் தோன்றி வளர்த்த வைணவத்தைப் பின்னர் குருபரம்பரையில் வந்த ஆசாரியர்கள்—நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் வரை எங்ஙனம் சீருற்றுத் திகழும்படி வளர்த்தார்கள் என்பதை யும் குறிப்பாகக் காட்டியுள்ள பெற்றிமை போற்றத்தக்கது. II பெரியாழ்வாரின் வரலாறும் காலமும்: ஆழ்வார் வர லாற்றில், பாண்டியன் அவையில் வாதில் வென்று பொற்கிழி பெற்றுப் பட்டர்பிரானாகியமை, திருக்கோட்டியூர் நம்பி யோடு கொண்டிருந்த நட்பு முதலியன குறிக்கப்பட்டுள்ளன. திருப் பல்லாண்டு: இது பன்னிரண்டு பாசுரங்கள் கொண்டது; இது மங்களாசாசனம் என்று போற்றப்படும். ஆதலின் நித்யா நுசந்தானம் செய்யப்படும். எல்லா விஷ்ணு ஆலயங்களிலும் தொடக்கத்தில் இது ஓதப்படும். இது ஒரு தனி பிரபந்தமாகும். (தனி—ஒப்பற்ற) எனினுமாம். ஆழ்வார் பாடியுள்ள 473 பாடல்களையும் படித்து வகை செய்து—மங்களாசாசனம், கண்ணன் குறும்புகள், இதிகாசக் கதைகள், திருப்பதிகள் என்ற தலைப்புக்களில் தெளிவுறுத்தியுள்ளார் ஆய்வாளர். பெரியாழ் வாரின் காலத்தை நிர்ணயிக்கும் போது முன்னர் ஆய்வு செய்துள்ளோர் கருத்துக்களையும் எடுத்துக் காட்டி, இவ்வாழ்வாரது காலம் சுமார் கி.பி. 690 முதல் கி.பி. 775 வரை என்று முடிவு கட்டியுள்ளார்.

III பெரியாழ்வார் உணர்த்தும் பிள்ளைமையின்பம்: பிற்காலப் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்துக்கு இந்த ஆழ்வார் பாடல்கள் முன்னோடி யெனலாம். சிறப்பாக, தால், முத்தம், செங்கீரை, சப்பாணி, அம்புலி, தளர்நடை (வருகை) முதலியன குறித்துள் ளார். பிற்காலத்தில் நான்கு பருவங்கள் மேலும் அமைத்துப் பிள்ளைத் தமிழ்ப் பருவங்கள் யாத்தமையெல்லாம் உபலட் சணத்தால் எனலாம். மேலும், அச்சோ, புறம் புல்கல், அப்பூச்சி காட்டுதல், அம்மம் உண்ண அழைத்தல், காது குத்தல், குழல் வாரக் காக்கையை வாவெனல், பூச்சூட்ட வாராய் எனல், காப்பிட வாராய் எனல், ஆயர் மங்கையர் முறையிடல் முதலிய அனுபவங்களில் அமைந்த பாடல்களின் நயங்களையும் குறிப்பிடுகின்றார்.

IV ஆழ்வார் உணர்த்தும் வழிபாட்டு நெறி: வழிபாட்டு நெறியில் பக்தி, பிரபத்தி, அருச்சனை, நாம ஸங்கீர்த்தனம் ஆகிய இவைகளை வலியுறுத்தியுள்ளார் ஆழ்வாளர்.

V ஆழ்வார் உணர்த்தும் வைணவநெறி: இது மிகச் சிறந்த பகுதியாகும். இப்பகுதியில் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்ற ஐவகை நிலைகள்; விசிட்டாத்வைத சித்தாந்தத்தின் உயிர் நிலையான "அப்ரதக்ஸித்தி"; பிரபத்தி (சரணடைதற்கு) உரிய ஆறு அங்கங்கள், அனைத்திலும் மேலான புருஷார்த்தம் கைங்கரியம் (தொண்டு) செய்தலே என்பது. பிராட்டியின் புருஷகாரத் துவம் (இடை நின்று பரிந்து பேசுகை) ரகஸ்யத்ரயம் (திருமந் திரம், துவயம், சரமஸ்லோகம்) அறிதல், கோவிந்த நாமத்தின் பெருமை, பகவத் சம்பந்தம், பாகவத சம்பந்தம், பகவத் கைங்கரியம், பாகவத கைங்கரியம்—இன்னோரன்ன வைஷ்ண வனுக்குரிய லட்சணங்கள் திறம்படக் கூறப்பட்டுள்ளன.

VI ஆழ்வார் காலச் சமுதாய நிலை: இப்பகுதியில் கன்னிப் பெண்கள் பாவைநோன்பு நோற்றல், நால்வகை வருண வேறு பாடுகள், ஆடைவகைகள், அணிவகைகள், கூத்துவகைகள் (குரவை, குடக் கூத்து, அல்லியத் தொகுதி போன்றவை), விழாக்கள், பழக்க வழக்கங்கள், நுண் கலைகள் (இசை, சிற்பம் போன்றவை) சிறப்புறக் கூறப்பட்டுள்ளன.

VII பெரியாழ்வார் பாசுரங்களில் கவிதை நலம்:- இப்பகுதியில் உவமைகள், இயற்கை வருணனைகள், கண்ணனை யனுபவித்த பிள்ளைமைக் காட்சியின்பம், கற்பனைகள்—இவற்றின் நலங் கள் உணரவைக்கப்பட்டுள்ளன. மற்றும் அகப் பொருள் மரபுகள், யாப்பமைதி, நடையியல்புகள் (எளிமை, இனிமை, தெளிவு, உணர்ச்சி, அடுக்கிவரல்) முதலியனவும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இனி, "இவ்வாழ்வார் தம் திருமொழியில் இரண்டாம் பத்து மூன்றாம் திருமொழியில் பன்னிரண்டு பாசுரங்களையும் அந்தாதித் தொடையாகவே அமைத் துள்ளார்" என்று பக்கம் 272—இல் கூறப்பட்டுள்ளது. ஆனால் ஆழ்வாரே தமது பாசுரத்தில் "பன்னிரு நாமத்தாற் சொன்ன

ஆராத அந்தாதி பன்னிரண்டும்" என்கிறார். இது குறிக் கொள்ளத் தக்கது. ஈண்டு அந்தாதி என்றது அடைவு, முறை வைப்பு (Sequence) என்ற சங்கேதத்தில் வந்தது. ஏனெனில் துவாதச நாமங்களும் அடைவே முறை வைப்பில் வைத்துச் சொல்லப்பட்டுள்ளது. ஈண்டும் எல்லா நாமங்களும் ஈற்றடியில் வராமல் சில அடி மடக்காய் வந்துள்ளன. "அடிமடக்காய் அந்தாதித்து" என்றது மாறனலங்காரம் (267, உரை) (Note:- Here is mentioned not metrical Sequence but matter sequence (ie) Nama sequence).

VIII முடிவுரை:- இதனில் முற்கூறிய விஷயங்களில் பொதிய வைத்துள்ள விழுமிய கருத்துக்களின் சாரத்தைப் பிழிந்து காட்டி, இறுதியில் "பெரியாழ்வாருக்கு வைணவ உலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது" எனத் தலைக்கட்டுகிறார் ஆய்வாளர். இந்நூல் தமிழ் கூறு நல்லுலகம் வரவேற்கத்தக்க தொன்று.

1, தேரடித் தெரு,
திருவல்லிக் கேணி,
சென்னை—5.
26—10—1992.

இங்ஙனம்
C. ஜெகந்நாதாசார்யர்.

ஔவை நடராசன்
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் 613 005

# அணிந்துரை

வைணவ சமயத்தின் தாய்மைக் கனியாக விளங்குபவர், பெரியாழ்வார். "ஒருமகள் தன்னையுடையேன், திருமகள் வளர்த்தேன் போல செங்கண்மால் தான்கொண்டு போனான்" என்னும் நன்மொழி வரலாற்றுக்கு வடிவூட்டும் சான்றாகவும் மிளிர்கின்றது.

கையும் காலும் நிமிர்த்துக் கடாரநீர்
பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித்தாளுக்கு

என்றெல்லாம் நெஞ்சம் நெகிழ மகவை நீராட்டல், அஞ்சனந் தீட்டல், தாலாட்டல், சோறூட்டல், மணவினை காணல், பிரிந்து கையறுதல் எனப் பற்பல பொருண்மைகளில் பாடும் போது, விட்டுணுசித்தரின் தாய் மனம் வெளிப்படுகின்றது. பொதுவாகப் பாவலர்கள் பெண்ணீர்மை மிக்கவர் என்பர். பெரியாழ்வாரோ தாயாய்ப் பிறங்கிய பெருநலம் படைத்தவர்.

பேராசிரியர் டாக்டர். ஆ.க. பார்த்தசாரதி வைணவ நெறியிலும் ஆழ்வார் பாடல்களிலும் தோய்ந்து மனம் ஒன்றி அத்தோய்வில் திரண்டெழுந்த பத்திமைப் பாசுரங்களில் வடித்த வெண்ணெய்க் கருத்தை எல்லாருமுண்ண இந்நூலில் எழில்பட எடுத்தளித்துள்ளார்.

வைணவ சமயத்தின் தொன்மையும் வளர்ச்சியும் என்ற இயல், வேத வேதாங்கங்களிலிருந்தும், பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்களினின்றும் பெறப்படும் வைணவ சமயக் கருத்து களை வடிவுற வழங்குகின்றது. பெரியாழ்வார் வரலாறும் காலமும் என்ற நிலையில் பெரியாழ்வார் வரலாறு, பெயர்க் காரணம், திருப்பல்லாண்டு, திருமொழி பற்றிய கருத்துகள், கி.பி.690-க்கும் 775-க்கும் இடைப்பட்ட ஆழ்வார் காலம் பற்றிய அருஞ்செய்திகள் ஆழமாக எண்ணித் துணியப்

பட்டுள்ளன. பெரியாழ்வார் உணர்த்தும் பிள்ளைமை பற்றி ஆசிரியர் ஆய்வு நம் நெஞ்சைக் கவர்கிறது. பிள்ளைத்தமிழ் அமைப்பில் பெரியாழ்வார் பாடிய நுட்பத்தை இப்பகுதி இனிது விளக்குகின்றது.

''நல்லன நாவற்பழங்கள் கொண்டு நானல்வேன் என்று சிரிக் கின்றானே'' என்பதே ''தின்னப்பழங்கொண்டு தருவான்'' என்று நம் பாரதியாலும் பேசப்பெறும் பிள்ளைக் குறும்பாகத் திகழ்கிறது ''ஆழ்வார் உணர்த்தும் வழிபாட்டு நெறி'' என்ற தலைப்பில் ஆசிரியர் பல நுட்பமான செய்திகளை உணர்த்து கின்றார். பரமபதத்தில் நித்திய சூரிகளாக உள்ள அநிமிஷரை உறகல் உறகல் என்பது, அடியாரைக் காணின் இறைவனைக் கண்டாற்போல் எண்ணுவதை, மாலுடம் பாடா மாதவம், பிரபத்தி ஞானத்தின் சிறப்பு ஆகியன இவ்வியற்கண் துலக்கம் பெறுகின்றன.

ஆழ்வார் உணர்த்தும் வைணவநெறி என்னும் இயல், துளவஞ் சூடிய அறிதுயிலோனின் பரத்துவத்தையும், தீயோர் இறந்துக நூறித், தக்கோர் இடர்துடைத்தாளும் தலைவனின் அளப்பருங் கருணையையும், அந்தர்யாமியாய் உலகனைத்தை யும் இயக்கும் இறைவனின் பேராற்றலையும், திருப்பதிகளில் கண்ணாலே காணலாம் படிக்கு அமைந்த இறைவனின் எளிமையையும், இறைவனைப் பற்றுமிடத்து அடியவர்க்கென அவன் பூண்ட அன்புக்குணங்களின் இயல்பையும், பிரபத்தியின் ஆறு தன்மைகளையும் வைணவ நெறியின் அடிப்படையான ஐம்பொருள் விளக்கத்தையும் அவ்வவற்றுக்குரிய நுட்பங்களோ டும் ஒப்புமையோடும் குறித்தல் நயக்கத்தக்கதாகும் ''ஆழ்வார் காலச் சமுதாய நிலை'' என்னும் இயல் ஆயர்களின் முல்லை நில வாழ்வு, திருமண முறை, பாவை நோன்பு, வருணநெறி, இசை, சிற்பம் முதலிய கலைகளைப் போற்றியமை, ஆகிய வற்றைப் பேசுகிறது. ''பெரியாழ்வார் பாசுரங்களில் கவிதை நலம்'' என்ற இறுதியில் உவமையழகு, இயற்கையின்பம், அகப் பொருள் மரபு, யாப்பமைதி, நடையியல் மாண்பு, பேச்சு மொழி அமைதி ஆகியவற்றை வனப்புறக் காட்டுகின்றது.

ஒரு சமயத்தின் பாற்பட்ட பாசுரங்களை அச்சமயத்திற்கே வாய்ந்த தத்துவ அடிப்படையில் வைணவ சித்தாந்த பரமாக ஆய்ந்ததோடன்றி, சேந்தனார், மணிவாசகர் பாடல்களோடும் உறழ ஆய்ந்திருப்பதும், சங்ககால மரபுக்கும், பிற்கால மரபுக்கும் இடைப்பட்ட ஆழ்வார் பாசுர மரபை கால வரலாற்று இயைபுபற்றி ஆராய்வது இவ்வாய்வேட்டுக்கு அழகூட்டுகின்றது.

பேராசிரியர் டாக்டர் ய.சி. பார்த்தசாரதி அவர்கள் தம் பிஎச்.டி. பட்டப்பேற்றுக்காகச் சென்னைப் பல்கலைக்கழகத் துக்கு வழங்கிய ஆய்வேடே இந்நூலுருப்பெற்றுள்ளது. பெரும் பேராசிரியர் ஆ.வீ. கன்னைய நாயுடு அவர்களின் அருமந்த மைந்தராகிய நூலாசிரியர் வைணவ நெறியாளர் என்ற சீர்த்தியால் இவ்வாராய்ச்சியைத் தம் ஆர்வமீதூர அரிதின் முயன்று வரைந்தார். கல்லூரிப் பேராசிரியராக இருந்து எனக்கு வழிகாட்டிய பெருந்தகை டாக்டர் பார்த்தசாரதி, பச்சையப்பன் கல்லூரியில் முப்பத்தைந்து ஆண்டுப் பணி முடித்த நிறைநிலையில்தம் ஆய்வின் பயனாக இந்நூலைத் தமிழகத்துக்கு வழங்கிய திறத்தைப் போற்றி மகிழ்கிறேன். பயன் கருதாப் பட்டப் பேற்று நூலாகவும், புலமை நலம் பொதுளும் காப்பாகவும் இந்நூல் அமைகிறது.

அரிய இப்பனுவலுக்குப் பாயிரம் எழுதும் பணியை எனக்குப் பரிவோடு ஆசிரியர் வழங்கியது என்பால் கொண்ட அன்பாலன்றி வேறொன்றுமில்லை. ஆசிரியப் பெருந்தகையின் ஆய்வு நூலுக்கு மாணவனாகிய யான் பாயிரம் எழுதுவது 'தன் ஆசிரியர், தன்னோடு கற்றோன், தன்மாணாக்கன், தகும் உரைகாரன் என்று இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே' என்ற வகையில் பொருந்துவதேயாகும்.

இச்சூழலில் என் ஆசிரிய பிரானை நான் வேண்டிக் கொள்வது ஒன்று உண்டு. ஆழ்வார் பனுவல்களில் தோய்ந்த தங்கள் அரும் புலமையால் இத்தகைய ஆய்வேடுகளைத் தொடர்ந்து வழங்கவேண்டுவதேயாகும்.

நாள் : 8-1-93 ஔவை. நடராசன்

**Dr. V. K. S. N. Raghavan,**
Reader. Dept. of Vaishnavism
University of Madras.
Madras.

# AN INTRODUCTION

## TO THE

## "Songs of Periyalvar - A Research Study"

Religious faith is an important component of social and spiritual development. In our Indian context we find two major religions as the most ancient and truly well developed even now. They have gained significant popular appeal, and so wherever we see, in India, we mainly come across the followers of these two religions, Viz. Vaisnavism and Saivism.

Though the Vedas are of supreme authority with regard to Verbal testimony (Sabda Pramana), the hyms of the Alvars are also treated on a par with them, in the Vaisnava tradition. All the followers of Ramanuja hold the view that though the Alvars belonged to different class of people and to different period, their main Philosophical and religious view points remained the same. They dived deep in the enjoyment of divine bliss and wisdom, and so they are called "Alvars". Only one of them is a woman-saint, viz. Andal or Goda who is said to have been brought up by Periyalvar and given away in marriage to Lord Ranganatha of Srirangam. Another important Alvar sang in praise of St. Nammalvar alone; He is called Madhura Kaviyalvar. Excluding these two saints, Vedantadesika has sung in praise of the other Alvars in the following verse of the guruparambara sara:

"பொய்கைமுனி பூதத்தார் பேயாழ் வார்தன்
பொருநல்வருங் குருகேசன் விட்டு சித்தன்
துய்பகுல சேகரனம் பாண நாதன்

தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வையமெலா மறைவிளங்க வாள்வே லேந்து
மங்கையர்கோ னென்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள்நாம் தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே."

Briefly, Saints Poigai, Bhutam and pey Sang 100 stanzas each. St. Thirumalisai sang *216*; st. Tondaradippodi sang *55*; St. Tiruppan contributed only ten. Madhurakavi sang 11 verses in praise of Nammalvar; Periyalvar's songs are *473* and those of Goda (Andal) are *173*; St. Kulasekhara sang 105 songs, while St. Kaliyan (i. e. Tirumangai) has contributed Six prabhandas, his songs totalling *1253* (on *86* divyadesas) Sri. Nammalvar's songs reach the highest figure as *1296* (on *36* divyadesas) Adding the *108* songs-sung by sri Tiruvarangattu Amudanar in praise of Ramanuja (alias Yatiraja)-the total number of verses of the Divyaprabandha of Alvars is reckoned to be *4000*.

Dr. A C. Parthasarathy (Former Professor of Tamil, Pachaiyappa's college, Madras) has provided a well-knit and scholarly thesis on the "Songs of Periyalvar" in the following pages. His study (in Tamil) comprises eight chapters, viz. the origin and development of vaishnavism, The life and times of Periyalvar, the joy of bringingupachild-Sri Krishna as portrayed by Periyalvar, Periyalvar's delineation of Bhakti's Periyalvar, depiction of Vaishnavism, Society as seen in the songs of Periyalvar, The lyrical beauty and literary merits of Periyalvar's songs, and conclusion Dr. Parthasarathy has brought to light in an exquisite manner the deep devotional fervour of Periyalvar.

V. K. S. N. Raghavan.

# நன்றியுரை

பல்வேறு பணிகளுக்கிடையே இந்நூலுக்கு அணிந்துரை வழங்கி அணி செய்த விவேகாநந்தர் கல்லூரி முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் C. ஜெகந்நாதாசாரியர் அவர்கட்கும், மற்றும் ஓர் அணிந்துரை நல்கி இந்நூலுக்குச் சிறப்பு சேர்த்த தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், டாக்டர். ஔவை நடராசன் அவர்கட்கும், மேலும் இந்நூலுக்கு முன்னுரை அளித்துச் சிறப்பித்த சென்னைப் பல்கலைக்கழக வைணவத்துறைப் பேராசிரியர் டாக்டர் V.K S.N இராகவன் அவர்கட்கும் என்மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலை வெளிக் கொணர்தற்குப் பெரிதும் துணைபுரிந்த பேராசிரியர் டாக்டர். இரா. குமாரவேலு அவர்கட்கும், பேராசிரியர் டாக்டர். மன். இரா. செயராமன் அவர்கட்கும் என் உளங்கனிந்த நன்றியைச் செலுத்துகிறேன்.

இவ்வாய்வு நூலை வெளியிட அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக் கழகத்தினருக்கும் என் நன்றி உரியதாகும்.

ஆ.க. பார்த்தசாரதி

# முன்னுரை

பக்திநெறி தமிழிலக்கிய வரலாற்று வளர்ச்சியில் ஒரு முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்தியுள்ளது. சங்க இலக்கியங்களில் இறைக் கருத்துக்களும், சமய வுணர்வுகளும் ஆங்காங்கே காணப்படினும் அஃது ஒரு நெறியாக வளர்ச்சியுறவில்லை. அறநூல்களின் வளர்ச்சியால்தான் நம் சமய நெறியின் தோற்றமும் தமிழகத்தில் காணப்படுகின்றது.

சங்க இலக்கியம் சமயச் சார்பற்ற இலக்கியத்தன்மை கொண்டு விளங்குவது. மக்கள் வாழ்க்கையோடு சமயம் கலந்துநின்ற இயல்பினைச் சங்க நூல்கள் நமக்குத் தெளிவாக உணர்த்துகின்றன. தனிமனிதனின் தூயகாதலையும், வீரத்தையும் வாழ்க்கையின் மிக உயர்ந்த குறிக்கோளாக அக் காலத் தமிழ்ச் சமுதாயம் கருதியது.

சங்க காலத்தில் சமய உணர்வின் அடிப்படையில் பாடல்கள் தோன்றவில்லையெனினும் அந்நாளைய தமிழர் வாழ்க்கை சமய உணர்வோடு கலந்திருந்தது என்பதை அறியலாம்.

சங்க காலத்திற்குப் பிறகு தமிழ்நாட்டை உய்விக்கத் தோன்றிய பெரியவர்கள் ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஆவர். இச்சான்றோர்கள் அருள்நெறியை வளர்த்தனர். அவர்கள் காலத்தில் கோயில்கள் விளக்கம் பெற்றன. இறை வழிபாடு ஏற்றமடைந்தது. கடவுட் பாடல்களில் தமிழ் மக்களின் கருத்து ஆழப் பதியலாயிற்று.

ஆழ்வார்கள் பன்னிருவர் ஆவர். அவர்கள் அருளிச் செயல்கள் நாலாயிர திவ்ய பிரபந்தம் என்னும் பெயரோடு போற்றப்படுகிறது. அந்நூலை வைணவ உலகம் வேதமாகப் போற்றிச் சிறப்பிக்கிறது. ஆழ்வார்களின் பாசுரங்கள் உள்ளங் கவர்ந்து பக்தி உணர்வைத் தூண்டி மக்களை நன்னெறிப் படுத்துவனவாகும்.

வைணவம் தழைக்க வந்த ஆழ்வார்களுள் பெரியாழ்வார் தலைசிறந்தவராவர். இவர் நானூற்று எழுபத்து மூன்று பாசுரங்களைப் பாடியுள்ளார். திருமாலின் நூற்றெட்டுத் தலங்களுள் பெரியாழ்வார் இருபது தலங்களைப் பாடியுள்ளார். இவர் சிறந்த புலமை பெற்றவராகத் திகழ்ந்தவர். இவரது பாசுரங்களே பிற்காலத்தில் எழுந்த 'பிள்ளைத்தமிழ்' என்னும் சிற்றிலக்கிய வகைக்கு வழிகாட்டியாக அமைந்தன.

பெரியாழ்வாரின் பாடற்சிறப்பே பின்வரும் கட்டுரைகளாகிய வைணவத்தின் தொன்மையும் வளர்ச்சியும், பெரியாழ்வார் வரலாறும் காலமும், பெரியாழ்வார் உணர்த்தும் பிள்ளைமை இன்பம், ஆழ்வார் உணர்த்தும் வழிபாட்டு நெறி, ஆழ்வார் உணர்த்தும் வைணவ நெறி, ஆழ்வார் காலச் சமுதாய நிலை, பெரியாழ்வார் பாசுரங்களில் கவிதை இன்பம் ஆகியவற்றில் ஆராயப்படுகின்றன.

## அடிக்குறிப்புச் சுருக்க விளக்கம்

| | |
|---|---|
| அகம். | அகநானூறு |
| அத். | அத்தியாயம் |
| அமலனாதி. | அமலனாதிபிரான் |
| ஆசாரிய இரு. | ஆசாரிய இருதயம் |
| ஆண்டாள் வாழி. | ஆண்டாள் வாழித் திருநாமம் |
| இராமா. நூற். | இராமானுச நூற்றந்தாதி |
| இலக்கண விளக். பாட் | இலக்கண விளக்கப் பாட்டியல் |
| இறை. அகப். | இறையனார் அகப்பொருள் |
| உபதேச. | உபதேச ரத்னமாலை |
| ஐங்குறு. | ஐங்குறுநூறு |
| க.பரணி | கலிங்கத்துப் பரணி |
| கம்ப. | கம்பராமாயணம் |
| கம்ப. யுத்த. | கம்பராமாயணம், யுத்த காண்டம் |
| கலி. | கலித்தொகை |
| கழகம் | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. |
| குமரகுரு பிரபந்.திர. | குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு |
| சிரீவசன(ஸ்ரீவசன) | சிரீ (ஸ்ரீ)வசன பூஷணம் |
| சிலம்பு | சிலப்பதிகாரம் |
| ,, ஆய். குரவை | ,, ஆய்ச்சியர் குரவை |
| ,, கடலாடு | ,, கடலாடு காதை |
| ,, காடுகாண் | ,, காடுகாண் காதை |
| சிறிய திரு. | சிறிய திருமடல் |
| சிறுபாண். | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | சீவக சிந்தாமணி |
| திருக்கு. | திருக்குறள் |
| திருச்சந்த. | திருச்சந்த விருத்தம் |
| திருநெடுந். | திருநெடுந் தாண்டகம் |
| திருப். | திருப்பாவை (ஆண்டாள்) |
| திருப். (சேந்) | திருப்பல்லாண்டு (சேந்தன்) |

| | |
|---|---|
| திருப்பல். | திருப்பல்லாண்டு (பெரியாழ்வார்) |
| திருப்பாண்டி. | திருப்பாண்டிப்பதிகம் |
| திரு.மாலை | திருவள்ளுவ மாலை |
| திருவாச. | திருவாசகம் |
| திருவாய். | திருவாய்மொழி |
| திருவி. | திருவிருத்தம் |
| திருவிளை. புராணம் | திருவிளையாடற் புராணம் |
| தே. (சுந்.) | தேவாரம் (சுந்தரர்) |
| தேசிக பிர. | தேசிக பிரபந்தம் |
| தொல்.அகத். | தொல்காப்பியம், அகத்திணையியல் |
| தொல்.இளம். | தொல்காப்பியம், இளம்பூரணர் உரை |
| தொல். எழுத்து. | தொல்காப்பியம், எழுத்ததிகாரம் |
| தொல். களா. | தொல்காப்பியம், களவியல் |
| தொல். புறத். | தொல்காப்பியம், புறத்திணையியல் |
| தொல். பொருள் | தொல்காப்பியம், பொருளதிகாரம் |
| நச். உரை | நச்சினார்க்கினியர் உரை |
| நம்பி. | நம்பியகப் பொருள் விளக்கம் |
| நற். | நற்றிணை |
| நாலாயிர திவ்விய. | நாலாயிர திவ்விய பிரபந்தம் |
| நன். | நன்னூல் |
| நாச்சி. | நாச்சியார் திருமொழி |
| நான். திரு. | நான்முகன் திருவந்தாதி |
| நெடுநல். | நெடுநல்வாடை |
| பட்டின. | பட்டினப்பாலை |
| பதிற்று. | பதிற்றுப்பத்து |
| பரி. | பரிபாடல் |
| பரி. திரட்டு. | பரிபாடல் திரட்டு |
| பழமொழி. | பழமொழி நானூறு |
| பன்னிரு பாட். | பன்னிரு பாட்டியல் |
| புறப். வெ. மாலை. | புறப்பொருள் வெண்பா மாலை |
| புறம் | புறநானூறு |
| பெரி. திரு. | பெரிய திருமொழி |

| | |
|---|---|
| பெரிய. திருவந். | பெரிய திருவந்தாதி |
| பெரியாழ்.திரு | பெரியாழ்வார் திருமொழி |
| பெருமாள். திரு. | பெருமாள் திருமொழி |
| பெரும்பாண். | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநரா. | பொருநராற்றுப்படை |
| வெண். பாட். | வெண்பாப் பாட்டியல் |
| மணி. | மணிமேகலை |
| மதுரை. | மதுரைக் காஞ்சி |
| முதல் திருவந். | முதல் திருவந்தாதி |
| முத்து. பிள்ளைத்தமிழ். | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் |
| முல்லை. | முல்லைப்பாட்டு |
| யாப். விருத்தி | யாப்பருங்கல விருத்தி |
| வில்லி பா. வீட்டும ப. | வில்லி பாரதம், வீட்டும பருவம் |
| வியாக். | வியாக்கியானம் |

# பொருளடக்கம்

## இயல் ஒன்று

# வைணவ சமயத்தின் தொன்மையும் வளர்ச்சியும்

மனித நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றியவைகளே சமயங்கள். வாழ்க்கை சிறப்புற்று விளங்கச் சான்றோர்கள் வகுத்துச் சென்ற வழிகளே அவை. நல்வழியில் நின்று நல்வாழ்க்கை வாழவே சமயங்கள் பாதை வகுக்கின்றன. தமிழ் நெஞ்சம் பக்திப் பணி என்னும் பயிர் தழைக்கும் அன்பு நெஞ்சமாகும். நம் நாட்டில் பல்வேறு சமயங்கள் பெருகியிருப்பினும் தொன்மைச் சிறப்புடைய சமயங்கள் சிலவே. அச்சிலவற்றுள்ளும் வைணவம், சைவம் என்னும் இருபெரு சமயங்களும் தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலவி வருவன. இவ்விரண்டும் இன்றும் சிறந்து வாழ்ந்துவரும் சமயங்கள். இக் கட்டுரையில் வைணவ சமயத்தின் தொன்மையைப் பற்றியும் வளர்ச்சியைப் பற்றியும் விரிவாகக் காணலாம்.

மிகப் பழமையும் பெருமையும் வாய்ந்த நம் நாட்டில் தொன்றுதொட்டு வரும் சமயங்களுள் வைணவ சமயமும் ஒன்று என்பதற்கு வேதங்களும், வேத அங்கங்களும், இதிகாச புராணங்களுமே தக்க சான்றுகளாகும். வைணவ சமயக் கடவுளான 'விஷ்ணு' என்ற சொல்லிற்கு 'எங்கும் வியாபித்துள்ளவன்' என்பது பொருள். இருக்கு, யசுர், சாம அதர்வணம் என்னும் நான்கு வேதங்களிலும் விஷ்ணு கூறப்படுகிறார். இதிகாச புராணங்களில் விஷ்ணு பரதேவதையாகவும் திருமூர்த்திகளுள் ஒருவராகவும் குறிப்பிடப்படுகின்றார் மன்பதையினைக் காப்பதற்காகவே திருமால் பல்வேறு அவதாரங்களை எடுத்தார் என்று நூல்கள் கூறுகின்றன. "துட்டர்களை அழிப்பதற்கும் நல்லோரைக் காப்பதற்கும் நான் யுகந்தோறும் அவதாரம் செய்கிறேன்" என்று கீதாசாரியரான கண்ணபிரான் கீதையில் மொழிந்துள்ளார்.[1]

பாணினி சூத்திரப் பாடியத்தில் பதஞ்சலி முனிவர் வாசுதேவனைப் பரதெய்வமாகக் குறித்துள்ளார்.[2] வடஇந்தியாவில் கோசண்டி, நானாகாட் என்னுமிடங்களில் கிடைத்த கல்வெட்டுகளில் வாசுதேவனையும் பலதேவனையும் இணைத்து வணங்கியமை காணப்படுகிறது. இக்கல்வெட்டுகள் முறையே கி. மு. மூன்றாம் நூற்றாண்டையும், கி. மு. முதலாம் நூற்றாண்டையும் சேர்ந்தவையாகும். எனவே, வாசுதேவன்-பலதேவன் வணக்கம் வட இந்தியாவில் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் இருந்தமை நன்கு அறியப்படும்.[3]

## தொல்காப்பியத்தில் வைணவம்

வடவேங்கடம் தென்குமரிக்கு இடைப்பட்ட தமிழ்கூறு நல்லுலகத்தின் சமய வரலாறுகளை ஆராய்ந்து நோக்குமிடத்துத் திருமாலைப் பரதெய்வமாகக் கொண்டு வழிபடும் முறை நம்நாட்டு மக்களிடத்து மிகப் பழங்காலத்திலிருந்தே இருந்து வருகிறது என்பது தெளிவாகும். இவ்வுலகத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நால்வகையாகப் பகுத்துக்கொண்டு நானிலம் என்று வழங்கிய போதே திருமால் வழிபாடும் இங்குத் தோன்றிவிட்டது. தமிழ் முனிவராகிய அகத்தியரின் மாணாக்கருள் ஒருவராகக் கூறப்படும் தொல்காப்பியனார், அந்நான்கு நிலங்களையும் அவற்றிற்குரிய தெய்வங்களுடன் வைத்துக் கூறுமிடத்து,

> "மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும்
> வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
> வருணன் மேய பெருமணல் உலகமும்
> முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[4]

என்கிறார். இதனால் காடுறை நிலமாகிய முல்லை நிலத்தில் மாயோன் வழிபாடும், மைவரை யுலகமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோன் வழிபாடும், தீம்புனலுலகமாகிய மருதநிலத்தில் இந்திரன் வழிபாடும், பெருமணலுலகமாகிய நெய்தல் நிலத்தில்

வருணன் வழிபாடும் தோன்றி நிலைபெற்றன என்பதை அறிகிறோம். இத்தெய்வ வழிபாடுகள் தொல்காப்பியர்க்கும் முற்பட்ட காலத்திலேயே தமிழ்மக்களால் விரும்பி மேற்கொள்ளப்பட்டவை என்பது நன்கு விளங்குகிறது.

"தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர்; வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர்; பிறர் பகவதியையும், ஆதித்தனையும் தெய்வமென்று வேண்டுவர்"[6] என நக்கீரரும், "தெய்வம்... பரிநியஞ் செல்வனும் நிகிரியஞ் செல்வியுமெனக் கொள்க"[6] என அடியார்க்கு நல்லாரும், "கன்னி விடலை காளி மீளி"[7] என்னும் நூற்பாவில் பாலைக்குத் தெய்வம் துர்க்கையென நாற்கவிராச நம்பியாரும் கூறியிருக்கின்றனர்.

மருத நிலத்திற்கு இந்திரன் தெய்வம்; இந்திரனைக் குறித்துச் செய்யப்படும் விழா 'இந்திர விழா' எனப்படும். இந்திரன் வேதகாலக் கடவுளரில் சிறப்பு மிக்கவன். வாயு மண்டல நிகழ்ச்சிகளுக்கு அடிப்படையாகக் கருதப்படுபவன். வேத காலத்தில் இவன் வலிமை மிகுந்த முதன்மைக் கடவுளாகக் கருதப்பட்டதனை வேதங்களில் முதலாவதான இருக்குவேதப் பாடல்களில் புகழப்படுவது கொண்டு அறியலாம்.[8]

சங்க இலக்கியங்களில் முதன்முதலில் ஐங்குறுநூற்றுப் பாடலில் இந்திர விழாவினைப் பற்றிய குறிப்பினை,

"இந்திர விழவிற் பூவி னன்ன
புன்றலைப் பேடை வரிநிழ லகவும்"

என்பதனால் அறிகிறோம்.

மேலும் உவமைநிலையில் இந்திர விழாவில் மலர்களை மிகுதியாகப்பயன்படுத்தினர் என்ற குறிப்பும் காணப்படுகிறது. பதிற்றுப்பத்தில் 'பலபூ விழா' என்று இது குறிக்கப்படுகிறது. இதனை,

"கால மன்றியுங் கரும்பறுத் தொழியா
தரிகா லவித்துப் பலபூ விழவின்"[10]

என்ற பாடல் அடிகளால் அறிகிறோம்,

மருத நிலத்தில் விழாக் கொண்டாடியதனை மேற்சுட்டிய இரு பாடல்களும் தெரிவிக்கின்றன. எனவே இந்திர விழா மருதநில மக்கள் கொண்டாடிய விழா எனக் கருதலாம். மேற் கூறிய கூற்றினை உறுதி செய்யும் நிலையில் தொல்காப்பியத்தில் அவன் மருத நிலக் கடவுளாகச் சுட்டப்படுவதையும் காணலாம்.[11]

மருதநிலத்து உழவர் பெருமக்கள் பேரன்புடையவராய் நாடு மலிய மழைபெய்து விளையுள் பெருக மழைவளஞ் சுரத்தல் வேண்டி வானோர் தலைவனாகிய இந்திரனை மலர் தூவி வழிபட்டு இந்திரனுக்குரிய இந்திர விழாவை நிகழ்த்தி னார்கள். சிலப்பதிகாரத்திலுள்ள இந்திர விழவூரெடுத்த காதையும்', மணிமேகலையிலுள்ள 'விழாவறை காதை'யும் கடைச்சங்க காலத்து மருதநிலத்துப் பேரூர்களில் நிகழ்ந்த இந்திர விழவின் செயல்முறைகளை விரித்திருக்கும் முறையில் அமைந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்குத் திருவிழாக் கொண்டாடும் நன்னாளில் விண்ணுலகத்தினின்றும் அந்நகர் சென்று அங்காடியில் அமர்ந்திருந்த பூதத்திற்கு மறக்குடி மகளிர் பொங்கல் முதலியன படைத்தனர். பின்பு தமதுஅரசன் ஆளும் நாட்டில்,

"பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளமுஞ் சுரக்க என"[9]

குரவைக்கூத்து ஆடி வாழ்த்தினர். மேலும் இந்திரன் அந்நகரத் தில் நிலைபெற்றிருந்த ஐம்பெருமன்றங்களிலும் அரும்பலியிட் டனர். இந்திரனை கற்பகத்தரு நிற்கும் கோட்டத்தில் கொடி ஏற்றினர். அரசனது ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும்,

அரசகுமரரும், பரதகுமரரும் திரள்திரளாக வந்து சேர்ந்தனர். பொன்னியாற்றின் புண்ணிய நீரைப் பொற்குடத்தில் ஏந்தி,

"மண்ணக மருள வானவர் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி"[13]

சிறப்பித்தனர். மணிமேகலையிலும்,

"தோரண வீதியுந் தோமறு கோட்டியும்
பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்
காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியுங் கரும்பு நடுமின்"[14]

என்று இந்திரவிழாவில் மக்கள் ஆற்ற வேண்டிய சிறப்புகளைப் பலவாறாகச் சாத்தனார் புலப்படுத்துகின்றார். மேலும் இச்செய்தியை,

"ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈச னொருவனே"[15]

என்று அப்பர் பெருமானும் பாடியுள்ளார். இவற்றால் இந்திர விழா சமுதாயத்தின் பெருவிழாவாக நடைபெற்று வந்ததை அறிய முடிகிறது. சங்க காலத்தில் பெருவழக்கில் இருந்த இந்திர வழிபாடு, சிலம்பு-மேகலை காலத்தில் மேலும் சிறப்படைந்து விளங்கியது. பின்னர்த் தேவாரகாலத்தில் தன் செல்வாக்கை ஓரளவு இழந்தது எனலாம்.

பரதவர் சுறவுக்கொடி நட்டு வருணனை வழிபட்ட செய்தியை,

"சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்"[16]

என்பதாலும்,

"சுறவமுண் மருப்பணங்கு அயர்வன கழிச்சூழல்"[17]

என்பதாலும் அறியலாம். இத்தெய்வப் படிமங்கள் அமைந்த

கோயில்கள் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே சிறப்புற்று விளங்கின என்பதும், அவற்றையும் அவற்றின் அறப்புறங் களையும் அரசர் நேரிற்சென்று பாதுகாத்துவந்தனர்என்பதும்,

"மேவிய சிறப்பி னேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த வொண்பொருள் முடியவும் பிரிவே"[18]

என்ற நூற்பாவில் அவ்வாசிரியர் கூறுவதால் அறியலாம். 'மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய, என்பதற்கு' "நால்வகை நிலத்திலும் மேவிய சிறப்புடைய மக்களை யல்லாத தேவரு டைய படிமையவாகிய பொருள்கள்" என்று பொருள் அமைய 'சிறப்பினேனோர்' என்றதனால் "சிறப்புடை யார் மக்களும் தேவருமாகலின் மக்களல்லாதார் தேவரென்று பொருளா யிற்று. அது தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின்கண் செய்து அமைத்த தேவர்மேல் வந்தது. அவருடைய பொருளாவன— பூசையும் விழாவும் முதலாயின"[19] என்று விசேடித்துக் கூறுதல் பெரிதும் பொருந்தியிருத்தலைக் காணலாம். இங்ஙனம் கோயில் கொண்ட தெய்வங்களுள் திருமால் முல்லை நிலத்திற் குரிய தெய்வமாதலின் அப்பெருமான் எழுந்தருளியுள்ள கோயில்கள்காடும் காட்டைச் சார்ந்த இடங்களிலும் முதன்முதலில் தோன்றியிருக்க வேண்டும். தற்போதுள்ள பழைய திருமால் திருப்பதிகள் அவ்வாறு அமைந்திருந்தன என்றே கருதலாம். முல்லை நிலத்திற்குரிய மக்களைத் தொல் காப்பியர் ஆயர் என்றே குறித்துள்ளார்.[20] அதனால் அவ் வாயர் குலத்துள் ஒளிந்து வளர்ந்த கண்ணபிரானே, முல்லை நிலமக்கள் தம் குல தெய்வமாக வழிபட்டு வந்த திருமாலின் அவதாரமாகப் போற்றப்படுகிறார். அப்பெருமான்நப்பின்னை என்ற ஆயர்குல அணங்கை அவ்வாயர் குலமுறைப்படி கன்னி யாசுற்கமாக விடுக்கப்பட்ட ஏழு விடைகளையும் தழுவி யடர்த்து மணம் புரிந்த வரலாறு தமிழ்நாட்டில் சிறப்படைந்த தோடு தமிழக மக்களால் நாடகமாகவும் நடிக்கப்பட்டு வந்தது. இதனை,

"ஆயர்பாடியி லெருமன்றத்து மாயவனுடன்
தம்முனாடிய
வாலசரிதை நாடகங்களில் வேனெடுங்கட்
பின்னையோ
டாடிய குரவையாடுதும் யாமென்றாள்
கறவைகன்று
துயர்நீங்குக வெனவே"[21]

என்று சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவைப்பகுதியால் அறியலாம்.

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்"[22]

என்னும் முல்லைக்கலியிலும் இவ்வரலாற்றைக் காணலாம்.

'மாமணி வண்ணனுந் தம்முனும் பின்னையும்
ஆடிய குரவையிஃ தாமென நோக்கியும்',[23]

என்று சாத்தனார் கூறுவதாலும் பிறவற்றாலும் இச்செய்தி நன்கு உணரப்படுகிறது.

### நப்பின்னை

கண்ணபிரான் மணந்த பிராட்டிமார்களுக்குள்ளே தமிழ் நூல்களில் பெரிதும் சிறப்பித்துக் கூறப்படுபவர் நப்பின்னை என்ற திருநாமமுடைய தேவியராவர். ஆழ்வார்கள் மட்டுமன்றிப் பிறரும் நப்பின்னையை விசேடித்துக் கூறுவதை,

வைய மளந்தான்றன் மார்பிற் றிருநோக்காப்
பெய்வளைக் கையாளப் பின்னை தானாம்"[24]
"மாயணி வண்ணனும் தம்முனும் பின்னையும்
ஆடிய குரவையிஃ தாமென வேத்தியும்"[25]
"நிலமகட்குக் கேள்வனு நீணிரை நப்பின்னை
யிலவலர்வா யின்னமிர்த மெய்தினா னன்றே"[26]
"ஏர்ப்பின்னை தோள்முன் மணந்தவன்"[27]

என்னும் தொடர்களால் அறியலாம்.

வடநூல்களில் கண்ணன் தேவியருட் சிறந்தவளாகக் கூறப் பட்ட உருக்குமணிப் பிராட்டியாரை,

"அன்றங் கமர்வென் றுருப்பிணி
நங்கை யணிநெடுந் தோள்புணர்ந்தான்"[28]

என்று நம்மாழ்வாரும்,

"உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு
விருப்புற்றங் கேக"[29]

"வாரேறு கொங்கை உருப்பிணியை
வலியப் பிடித்துக்கொண்டு
தேரேற்றி"[30]

"உருப்பிணி நங்கைதன்னை
மீட்பான்தொடர்ந்தோடிச்சென்ற
உருப்பனை யோட்டிக்கொண்டிட்
டுறைத்திட்ட உறைப்பன்மலை"[31]

என்று பெரியாழ்வாரும் பாடியுள்ளனர். இவ்விடங்கள் தவிர, ஏனைய இடங்களிலெல்லாம் ஆழ்வார்கள் நப்பின்னையையே கூறியிருத்தல் அறியத்தக்கது"[32] நப்பின்னையைப் பின்னை, பின்னை, நீளை எனவும் வழங்குவர்.

இந்நப்பின்னை யமுனையாற்றில் ஒருநாள் மாலையில் தன்னை வஞ்சம் செய்த கண்ணபிரானையும் தன் அழகில் ஈடுபடச்செய்து மயக்கினாள் என்பதனை,

"விழுமிழை நல்லார் வெருள்பிணைபோல் நோக்கம்
செழுமிய நாணை மறக்கும் — தொழுநையுள்
மாலையுள் மாலை மயக்குறுத்தாள் அஃதால்
சால்பினைச் சால்பறுக்கு மாறு"[33]

"வஞ்சஞ் செய்தான் தொழுநைப் புனலுள்
நெஞ்சங் கவர்ந்தாள் நிறையென் கோயாம்
நெஞ்சங் கவர்ந்தாள் நிறையும் வளையும்
வஞ்சஞ் செய்தான் வடிவென் கோயாம்"[34]

என்ற பாடல்களால் உணரலாம்.

வடநாட்டார் இராதா தேவியைக் கண்ணன் காதலியருட் சிறந்தவராகக் கொண்டாடுதல் போலத் தென்னாட்டவரால் பண்டைக்கால முதலே பாராட்டப்படும் தேவி இந் நப் பின்னைப் பிராட்டியே என்பதும் அறியத்தக்கது.[35]

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் பனைக்கு முன்வரும் சொற்கள் புணரும் முறை கூறுமிடத்து,

''கொடிமுன் வரினே யையவ ணிற்பக்
கடிநிலை யின்றே வல்லெழுத்து மிகுதி''[36]

என்று கூறிப் பனைமுன் கொடி என்பது வருமொழியாக வருமிடத்து ஏனையவை போல ஐகாரங் கெட்டு அம்முச் சாரியை பெறாது ஐ நிற்ப வல்லெழுத்துப் பெற்றுப் புணரும் என்று விதித்தல் காணலாம். அதாவது பனங்கொடி எனப் படாது பனைக்கொடி என முடியும் என்பதாம். இங்ஙனம் பனைக்கொடியைத் தனியே எடுத்துக்கொண்டு தொல்காப் பியர் விதி கூறுதலின்று அக்கொடி அக்காலத்து வழக்குமிகுதி பெற்றிருந்தது என்று அறியலாம். இங்ஙனம் சிறப்புப் பெற் றிருந்த பனைக்கொடி நம்பி மூத்தபிரானான பலதேவர்க் கன்றி வேறெவர்க்கும் உரியதன்று என்பது பெறப்படும். சங்கர்ஷன வாசுதேவர்கள் வடநாட்டிற்போலவே தமிழகத்தும் தொன்றுதொட்டு வழிபடப் பெற்றுவந்த அவதார மூர்த்திகள் என்பது விளக்கமாகும்.[37]

முல்லைநில மக்கள் வணங்கி வந்த இக்கண்ணபிரான் வழி பாடு தொல்காப்பியர் காலத்தில் மற்றைய நிலத்துக் கடவுளர் வழிபாடுகளிலும் சிறந்திருந்தது எனக் கூறலாம். தொல்காப் பியர் அகத்திணை ஒழுக்கந் தொடங்குதற் குரியதான குறிஞ் சியை ஏனைப் புலவரைப் போலத் தாமும் முதலில் வைத்துக் கூறாது திருமாலுக்குரிய முல்லையை முதலாகக் கூறியது ஒரு சிறப்பைப் பற்றியே யாகும் ''சிறப்புடைப் பொருளை முற் படக் கிளத்தல்'' என்னும் முறை பற்றியே 'மாயோன் மேய

காடுறை உலகம்"[39] என்று மாயோனை முற்கூறினார். அச் சிறப்பாவது அக்காலத்தில் திருமால் வழிபாடு நால்வகை நிலத் திலும் மிகுதியாகப் பரவியிருத்தல் வேண்டும். இன்றேல் முனி வர்க்குக் குலதெய்வமாகிய திருமால் முனிவராகிய தமக்கும் வழிபடும் தெய்வமாகலின் அச்சிறப்பைப் பற்றி முன்னர்க் கூறி இருத்தல் வேண்டும்.[39] மன்னர்க்குத் திருமாலை உவமைகூறும் புறத்துறைச் செய்தி கூறுமிடத்தே,

"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்"[40]

என்று புருடோத்தமனது இறைமைக் குணங்களைப் பலவாறு சிறப்பித்துக் கூறுவதைக் காணலாம். 'மாயோனைப் பொருந் திய நிலைபெற்ற பெருஞ்சிறப்பினையுடைய கெடாத விழுப் புகழைப் பொருந்திய பூவை நிலையைக்கூறுதலும்" என்பது இளம்பூரணருரை.[41] அவர் மாயோனைக் கூறியிருக்கும் நிலையை நோக்குமிடத்து அப்பெருமானே இறைவன், முழு முதற்பொருள் என்பது தொல்காப்பியர் கருத்தாதல் தெளியப் படும். இப்பெருந் தலைமை பற்றியே மால் என்ற சொல் — பிறர்க்குரித்தாகாத நாராயண நாமம்போலே — தனித்த தமிழ்த் திருப்பெயராக மாயோன் ஒருவற்கே தொன்று தொட்டு வழங்கி வருதலைக் காணலாம் திருமாலின் சகச்சிர நாமங்களுள் பிருஹத், மஹான் என்ற திருநாமங்கள் இப்பெய ருடன் ஒப்புநோக்கத் தக்கன.[42]

காட்டிற்குத் தெய்வம் மாயோன் என்று பிற்காலத்தவர் கருதினும் மாயோளாகிய கருநிறமுடைய அம்மையையே சிறப் பாகக் கொள்வாருமுண்டு. "மாயோள் மேய காடுறை உலகமும்"[43] என்றபாடமே சிறந்தது; காடுகிழாஅள் என் பதும் அதனைக் குறிக்கும். கிராமங்களிலும் காடுகளிலும் பெருவழக்கமாக வழிபடும் தெய்வம் சக்தியின் வேறுவடிவாகிய காளியே யாகும். பிற்காலத்தவர் மரபொற்றுமை பற்றிக் கோவலர் மாயோன் வழிபாட்டை மேற்கொண்டனர் என லாம். மாயோளும் மாயோனும் உடன்பிறந்தவர் என்னும்

கொள்கையும் காணப்படுகிறது. மாயோனுக்கு மருமகனாகிய முருகன் வழிபாடு குறிஞ்சி நிலத்தில் சிறப்பாக நிகழ்ந்தது.

'மாயோன்' என்பதனை விட்டு 'மாயோன்' என்னும் பாடத்தையே நச்சினார்க்கினியர் முதலான உரையாசியர் பலரும் மேற்கொள்வதாலும், பிற சங்க இலக்கிய நூல்களில் காடுறை தெய்வமாக மாயோனே குறிப்பிடப்படுதலாலும், முல்லைநில ஒழுக்கத்திற்கு ஒத்த பண்பும் இயல்புமுடையவன் திருமாலேயாதலாலும் மாயோன், என்ற பாடமே பொருந்துவது என்று துணியலாம்.

எல்லாத் தத்துவங்களையும் கடந்து காணவும் கருதவும் முடியாத முழுமுதற்பொருளைக் காணவும் கருதவும் எளிதாம் படி உருவங்கொடுத்துப் பண்டைத் தமிழ்மக்கள் வழிபடலாயினர். இதனை,

> "கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"[44]

என்னும் நூற்பாவால் அறியலாம். இதற்கு உரையாசிரியர்கள் கூறும் பொருள்கள் ஒருபுறமிருக்க, இக்காலத் தமிழறிஞர் தத்தம் அறிவின் திறத்தால் பல்வகையில் விளக்கிக் காட்டுகின்றனர்.

கொடிநிலை என்பதற்குக் கீழ்த்திசையில் நிலைபெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம் என்றும், கந்தழி என்பதற்கு ஒரு பற்றுக்கோடுமின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள் என்றும் (கந்தழி - பற்றுக்கோடு அழிந்தது), வள்ளி என்பதற்குத் தண்கதிர் மண்டிலம் என்றும் பொருள் கூறுவார் நச்சினார்க்கினியர்.[45]

புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் ஐயனாரிதனார் இம்மூன்று பகுதிகளையும் விளக்குமிடத்துக் கொடிநிலை

யாவது முதற்கடவுளர் மூவருடைய கொடிகளுள் ஒன்றோடு மன்னன் கொடியை உவமித்துப் புகழ்ந்தது என்றும், கந்தழி யாவது திருமால் வாணாசுரனது சோவரணை அழித்த வெற்றித் திறனைப் புகழ்வது என்றும், வள்ளியாவது முருகக் கடவுள் பொருட்டுப் பெண்டிர் வெறியெடுத்தாடுவது என்றும் கூறு கிறார்.[46] இளம்பூரணருக்கும் இதுவே கருத்தாதலை அவர் இந் நூற்பாவிற்கு எழுதிய உரையினால் அறியலாம்.

தெய்வப்புலவர் திருவள்ளுவர் தம் நூலின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலி யுறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களைப் பாயிரமாகக் கூறி உள்ளார்.

"ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்"[47]

என்று சங்கப்புலவர் நத்தத்தனார் வேறுபிரித்துக் கூறியுள்ளார்.

இந்நான்கு அதிகாரங்களை மட்டும் பாயிரமாக வள்ளுவ னார் தனியே கொண்டது பற்றி மு. இராகவையங்கார் பின் வருமாறு கருதுகிறார்.

"இந்நூற்பாவில் கொடிநிலை, கந்தழி வள்ளி என்ற மூன்றும் கடவுள் வாழ்த்தொடு வரும் என உயர்பின்வழி வரும் ஒருவினையொடுச் சொல்லைக் கடவுள் வாழ்த்துக்குக் கூறுத தலால் அவ்வாழ்த்து முதலிற் கூறுஞ் சிறப்புடைய தென்பதும் மற்றவை அதன் பின்னர் வாழ்த்தப்படுதற்கு உரிய என்பதும் அறியத்தக்கன. இனிக் 'கொடிநிலை' என்பது மேகத்தை உணர்த்தும்; கீழ்த்திசைக்கண்ணே நிலைபெறுதலுடையது, நீடனிலையுடையது என்பது இதன் பொருளாம் (கொடி— கீழ்த்திசை). இது கீழ்த்திசை யாதலை, "குன்றிவர்ந்து கொடிக் கொண்ட கோடையால்" (கலி. 150/15), "கொடிமிசை மையறு மண்டிலம்" (கலி. 141/11-12) எனவரும் கலித்தொகையடி களால் அறியலாம். இந்திரனது திசை கிழக்காதலின் அத் திசையே மேகத்திற்கும் உரியதென்பதும் அங்கு எழுந்த மேகங் களே உலகதாபந் தீரப் பெய்வன என்பதும் அறியத்தக்கன.

குணக்கினின்று எழுவது பற்றியே மேகம் கொண்டல் எனப் பெயர் பெற்றதாகும்.

"ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு
காலத்திற் றோன்றிய கொண்மூப் போல்"
(கலி. 82/1-2)

என்பதனால் கிழக்கில் வரும் கொண்டல்களே பெயலிற் சிறந்த தாதல் அறிய முடிகிறது. இவ்வாறன்றி மின்னற்கொடிக்கு நிலைக்களமாதல் பற்றி மேகம் 'கொடிநிலை' எனப்பட்டது எனினும் அமையும். இவற்றால் கொடிநிலை என்பது மேகத் தைக் குறிக்கும் ஆற்றல் பெரிதுடையதாதல் தெளியலாம்.

இரண்டாவது, கந்தழி என்பதில் கந்து-பற்று, அழி-அழிவு; அதாவது பற்றழிந்தார் அல்லது நீத்தார் தன்மை என்றவா றாம். மூன்றாவதாகிய வள்ளி என்பது அறத்தைக் குறிக்கும். நச்சினார்க்கினியர் தம் கொள்கைக்கு இயைய மதியத்திற்கு இப்பதத்தை இணைக்குமிடத்து 'வெண்கதிர் அமிர்தம்தேவர்க்கு வழங்கலானும் வள்ளி யென்பதூஉமாம்' என்று கூறுதலினின்று வண்மையடியாகவே வள்ளி என்ற சொல் வழங்கியமை அறியப் படும் வண்மையாகிய அறத்திற்குரிய கடவுள் வள்ளி எனப் பட்டது. இங்ஙனம் மேகம், நீத்தார், அறக்கடவுள் என்ற மூன்றும் கடவுளை முதலாகக் கொண்டு வாழ்த்தப்படுதலும் இப்பாடாண் பகுதியாம். எனவே வள்ளுவனார் கூறிய பாயிர மும் இவ்விளக்கம் பற்றி அமைந்ததென்பது விளக்கமாகும்"[41]

'அமரர்கள் முடியும் அறுவகையானும்' என்பதில் பிறப்பு வகைப்பட்ட தேவசாதியையே ஆசிரியர் கருதுவதனாலும் அவ் வறுவகையின் கண்ணே செங்கதிர்க்கடவுள், தண்கதிர்க்கடவுள் முதலிய தேவர் அறுவர் அடங்கியவரென்றும், அறுமுறையுள் அடங்கியவராக நச்சினார்க்கினியர் கருதிய வானையும், முனி வரையும் 'கொடிநிலை கந்தழி' என்பதனால் ஆசிரியர் தனிப் படக் கூறினரென்றும் கருதுவது இழுக்காகாது. மேற்கூறிய காரணங்களால் தெய்வப்புலவர் திருவள்ளுவர் தம் நூலின்

தொடக்கத்தில் பாயிரமாக நான்கதிகாரங்கள் கூறியது தொல் காப்பிய முறை பற்றியது என்பது தெளிவாக விளங்குகின்றது.

"எனவே கொடிநிலை என்பதற்கு இறைவனின் கொடியை வாழ்த்திப் பாடுவது என்றும், கந்தழி என்பதற்குப் பற்றுக் கோடின்றிப் பரம்பொருளாக நிற்கும் இறைவன் தன்மையைப் புகழ்ந்துரைப்பது என்றும், வள்ளி என்பதற்கு முருகக் கடவுளைக் கூத்துவகையில் புகழ்ந்து உரைப்பது என்றும் பொருள் கொண்டு இம்மூன்றும் தேவரைப் பற்றிய பாடாண் பாட்டின் வகைகள் ஆறனுள் மூன்று என்றும் கொள்வது ஏற்புடையதாகலாம்."[49] என்று கூறுவர்.

இஃது எவ்வாறாயினும் முழுமுதற்பொருளைக் காணவும் கருதவும் எளிதாம்படி உள்ள இவ்வடிவங்களில் பண்டைத் தமிழர் வழிபட்டு வந்தனர் எனலாம்.

மறைமலையடிகளாரோ 'கொடிநிலை' என்பது ஞாயிறு என்றும், 'கந்தழி' என்பது தீ என்றும், 'வள்ளி' என்பதுதிங்கள் என்றும் பொருளுரைத்து, இது முத்தீ வழிபாட்டினைக் குறிக்கும் என்றும் பலவாறாக விளங்கப் பொருளுரைப்பர்.[50]

இங்ஙனம் நச்சினார்க்கினியர் முதலான அனைவருடைய உரைப்பகுதிகளையும் ஆராய்ந்த ந. சுப்பு ரெட்டியார் தம்முடைய 'தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை' என்னும்நூலில் "இவ் விளக்கங்கள் யாவும் அவ்வறிஞர்களின் புலமையைக் காட்டுவனவேயன்றித் தொல்காப்பியனார் கருதிய பொருளை விளக்குவனவாகத் தோன்றவில்லை" என்று கூறுவர்.[51]

### திருமால் வழிபாடு

திருமால் வழிபாடும் வைணவ நெறியும் மிகவும்தொன்மையானவை, "அநாதியாக நாம் கொண்டாடும் வேதத்திலேயே வைணவ மதக்கொள்கைகள் காணப்படுகையால், வைணவம்

ஒரு காலத்தில் தோன்றி, படிப்படியாக வளர்ந்தது என்று சில மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்களும், அவர்களை அடியொற்றிய சில நம் நாட்டவர்களும் கூறுவதை வேதசாஸ்திரங்களில் ஆழ்ந்த பரிசயமும், நம்பிக்கையுமுள்ள நாம் ஏற்க இயலாது"[51] என்று விளக்குவர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார். பிற்காலத்தில் திருமால் வழிபாடும் கோயில்களும் கடவுள் அடியார்களால் பெருகியிருக்க வேண்டும். தலைமை பெற்றுத் திகழும் முதற்பொருளாம் திருமால் தலங்களில் திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருவெஃகா முதலியவை மிகத் தொன்மையான தலங்கள் ஆகும். திருமாலை முன்னதாக வைத்துக் கூறும் பரிபாடலிலும், சிலப்பதிகாரம் முதலியவற்றிலும் இத்தலங்களில் கோயில் கொண்டு எழுந்தருளும் அர்ச்சாவதார மூர்த்திகளின் திருக்கோலங்கள் மிக அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

நலம்புரீ இயஞ்சீர் நாம வாய்மொழி
இதுவென வுரைத்தனெ முள்ளமர்ந் திசைத்திறை
இருங்குன்றத் தடியுறை யியைகெனப்
பெரும்பெய ரிருவரைப் பரவுதுந் தொழுதே"[52]

என்று இளம்பெரு வழுதியாரும் திருமாலிருஞ்சோலைத் திருமாலைப் பாடியுள்ளார்.

"வீங்குநீ ரருவி வேங்கட மென்னு
மோங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
யிருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேக நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமுந்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரமார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோ னின்ற வண்ணமும்"[53]

எனத் திருவேங்கடத்துத் திருமாலையும்,

"நீல மேக நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
வாயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்"[55]

எனத் திருவரங்கத்துப் பள்ளி கொண்டுள்ள திருமாலையும் இளங்கோவடிகள் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

"நீடுகுலைக்
காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கண்"[56]

எனக் கச்சியம்பதி திருவெஃகாவில் எழுந்தருளியுள்ள பெருமாளைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் புகழ்ந்து பரவுதலைக் காணலாம்.

முதன் முதலில் முல்லை நிலத்துக்குரியவையாயிருந்த திருமால் கோயில்கள் பிற்காலத்தில் குறிஞ்சி, மருதம் முதலிய நிலங்களிலும் பரவலாயிற்று. இவற்றிலும் கண்ணபிரான் வழிபாடே பெரிதும் வழக்குப் பெற்றிருந்தது என்று கூறலாம். கண்ணபிரானை நப்பின்னைப் பிராட்டியுடனும் நம்பி மூத்த பிரான்பலதேவருடனும் இணைத்து வழிபட்டமை சங்க நூல்களால் அறியப்படுகிறது.[57] இஃதன்றிப் பலதேவர்க்குத் தனிக் கோயில்களும் அமைந்திருந்தன.

"வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்"[58]
"உவணச் சேவ லுயர்த்தோ னியமமும்
மேழி வலனுயர்த்த வெள்ளை நகரமும்[59]"

எனவும் புகாரிலும் மதுரையிலும் இருந்த கோயில்களை இளங்கோவடிகள் குறிப்பிட்டிருத்தலைக் காணலாம். இப் பலதேவர் கோயில் 'வெள்ளை நாகர் கோட்டம்'[60], 'வெள்ளை நகரம்'[61] எனப் பெயர் பெற்றிருந்தது. கடைச்சங்க காலத்

திற்குப் பின்னர்ப் பலதேவரைத் தனிக்கோயில்களில் வழிபட்டு வந்ததாகத் தெரியவில்லை. அழகர் கோயில் என்னும் திருமாலிருஞ்சோலையில் இவ்விருவர் உருவங்களும் ஒருசேர இருந்தமையை,

> "இருங்குன்றத் தடியுறை யியைகெனப்
> பெரும்பெய ரிருவரைப் பரவுதுந் தொழுதே"[2]

என்று பரிபாடல் கூறுகிறது.

இத்தகைய கோயில்களும் பிற்காலத்தில் அருகிவிட்டன. கண்ணபிரான் தன் முன்னோனாகிய பலதேவருடனும் நப்பின்னையுடனும் காட்சி தந்து அருளுவதைப் பழைய திருப்பதிகளில் ஒன்றான திருவல்லிக்கேணியில் இன்றும் காணலாம். இப் பலராம கிருஷ்ணர்களைச் சங்கர்ஷண வாசுதேவர் என்ற பெயரால் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே வடநாட்டவரும் வணங்கி வந்தமை பழைய வடநூல்களாலும் சாசனங்களாலும் அறியக்கிடக்கிறது.[3]

### பக்தர்களும் பாகவதர்களும்

திருமால் வழிபாட்டிற் சிறந்து விளங்கிய பெரியோரைப் பண்டைத் தமிழ்மக்கள் 'பாகவதர்' என்ற பெயரால் வழங்கி வரலாயினர். 'நாராயண சமயத்தோர் பாகவதரே'[4] என்பது திவாகரம். 'பகம்' எனப் பெயரிய ஷட்குணங்களால் பரிபூரணனான திருமாலின் சம்பந்தமுடையவர் என்பது இதன் பொருளாகும். திருமாலுக்கு அடிமை செய்து சிறந்து விளங்கும் இல்லறத்தாரை அடியார் என்றும் உலகப் பற்றற்ற துறவிகளைப் பகவர் என்றும் நம் முன்னோர் வழங்கலாயினர் என்பதை,

> "பக்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்
> முனிவர்களும் பரந்த நாடும்
> சித்தர்களும் தொழுதிறைஞ்ச"[5]

என்ற பெரியாழ்வார் திருமொழியினாலும்,

"அச்சுதன் தன்னை ஞானவிதி பிழையாமே
மேவித் தொழும் அடியாரும் பகவரும்
மிக்கதுலகே"[6]

என்றும்,

"விரும்பிப் பகவரைக் காணில்
வியலிடம் உண்டானே என்றும்"[7]

என்றும் வரும் நம்மாழ்வாரின் அருளிச்செயல்களினாலும் அறியலாம்.

'பகவர்' என்ற சொல் எல்லாக் கடவுளர்க்கும் பொதுவாகக் கூறப்படினும் விஷ்ணு பக்தியில் சிறந்து விளங்கிய துறவிகளையே பகவர் என்று கூறப்படுவதன்றி வேறு சமயத்து அடியவரைப் பகவர் என்று அழைப்பதாகத் தமிழ் நூல்களால் அறிய முடியவில்லை. பிற்காலத்துத் தோன்றிய வைணவ பக்தர்களும் 'குடமூக்கிற் பகவர்'[8] 'நிலாத்துக் குறிப் பகவர்'[9] எனப் பெயர் பெற்றிருத்தலைக் காணலாம். திரிதண்ட காரணிகளான இவ்வைணவ சந்நியாசிகளையே 'முக்கோற் பகவர்' எனப் பண்டைத் தமிழ்மக்கள் வழங்கலாயினர் என்பதை,

"எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குண்டைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைலசை வேறொரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன்மாலைக் கொளைநடை
அந்தணீர்"[10]

என்பதால் அறியலாம். 'முக்கோல்கொ ளந்தணர் முதுமொழி நினைவார்'[11] என்பதால் முக்கோல் அந்தணர் இறைவனைக் கூறும் திருமந்திரத்தை நினைந்திருத்தல் கூறப்பட்டது.

"கல்தோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்,
முக்கோ லசைநிலை கடுப்ப"[12]

எனவும் சான்றோர் இப்பகவரைச் சிறப்பித்துக் கூறினர். இவற்றுள் அந்தணர் என்பதற்கு 'காஷாயம் போர்த்த குழாங்கள்' என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறுகிறார்.

"நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயும் காலை அந்தணர்க் குரிய"[73]

என்று தொல்காப்பியனார் கூறியுள்ளமையும் பகவரான இவ்வைணவத் துறவிகளையே குறிக்கும். கலித்தொகைச் செய்யுளில் 'முக்கோற் பகவரை வினாதல்' என்ற துறையில்[74] தலைவி தலைவனுடன் உடன் போக்கில் வேற்றூருக்குச் செல்ல அவளைத் தேடிச் சென்ற செவிலி வழியிடை முக்கோல் பகவரைக் கண்டு, தன் மகளையும் அவளுடன் செல்லும் தலைமகனையும் கண்டீரோ என வினவுதலும் அதற்கு அவர் கூறிய மறுமொழியும் காணலாம். இதனால் இம் முக்கோல் முனிவர் தமிழகமெங்கும் தல யாத்திரையாகச் செல்பவரென அறியலாம். மேற்கண்டவற்றால் திருமால் அடியாரான துறவிகள் சங்க காலத்தும் அதற்கு முன்னரும் தமிழ்ப் பெரு மக்களால் பெரிதும் போற்றப்பட்டனர் என்பது தெளிவாகிறது.

திருமால் வழிபாடு முற்காலத்தில் பரவியிருந்தது என்பது மணிமேகலை 'சமயக் கணக்கர் தந் திறங்கேட்ட காதை'யுள் வைணவ வாதம் கூறப்படுதலால் விளங்குகிறது.

"காதல் கொண்டு கடல்வணன் புராண
மோதினன் நாரணன் காப்பென் றுரைத்தனன்"[75]

என்று கூலவாணிகன் சாத்தனார் கூற்றினின்றும் விஷ்ணு புராணம் முதலிய திருமாலைப் பற்றிய புராணங்கள் சங்க காலத்துப் பெருவழக்குப் பெற்றிருந்தமையை அறியலாம்.

சங்க காலப் புலவர்களில் பலர் பரம பாகவதர்களாக விளங்கினர். பரிபாடலில் கடுவனிளவெயினனார், கீரந்தையார், நல்லெழினியார் முதலிய புலவர்கள் பாடிய பாடல்கள் அவர்கள் திருமாலின்பால் கொண்டிருந்த பக்திக்குச் சிறந்த சான்றாக விளங்குகின்றன. மேலும் பரணர்,

"தேவரில் திருமால் எனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா"[76]

என்பதனாலும்,

மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞாலம் முழுதும் நயந்தளந்தான்''[77]

என்று கூறுவதனாலும் இப்புலவர்களும் வைணவ சமயத்தைச் சார்ந்தவர்களாகவே கருதப்படுகின்றனர்.

''சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது வென்ற வள்ளுவன்''[78]

என்று புகழ்ந்து பேசப்படும் அத்தெய்வப்புலவர் வள்ளுவனார் பிற கடவுளர் எவரையுங் குறிப்பிடாது

''மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான்
தாயஅ தெல்லா மொருங்கு''[79]

''தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு''[80]

எனக் குறிப்பிடுதல் அவருடைய உள்ளக் கிடக்கையை எளிதில் புலப்படுத்துவதாயுள்ளன.

## அரசர்களும் வைணவமும்

இனிப் பரம பாகவதர்களான இப்புலவர்களல்லாமல் பண்டைத் தமிழரசர்கள் பலரும் திருமால் பக்தியில் சிறந்து விளங்கலாயினர். பதிற்றுப்பத்தில் செல்வக் கடுங்கோ வாழியாதன் என்ற சேர அரசனை 'மாயவண்ணனை மனனுறப்பெற்றவன்''[81] என்று கபிலர் புகழ்கின்றார். கோச் செங்கணான் என்ற சோழ அரசன் திருநறையூர்த் திருமாலிடம் மிக்க பக்தி கொண்டவன் என்பதைத் திருமங்கை மன்னன் பாசுரங்களால் அறியலாம்.[82] இளம்பெருவழுதி என்ற பாண்டிய அரசரும் திருமாலிருஞ் சோலைத் திருமாலிடம் பேரன்பு கொண்டிருந்ததைப் பரிபாடலால் அறிகிறோம்.[83]

## பரிபாடலில் வைணவம்

பரிபாடலில் வரும் திருமாலைப் பற்றிய கருத்துகள் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் பெரிதும் இடம் பெற்றுள்ளன. பரிபாடலின் முதற்பாட்டுதிருமாலின் வாழ்த்

தாகவே அமைந்துள்ளது. இப்பாடல் ஆயிரம் திருமுடியை யுடைய ஆதிசேடன் திருமால் திருமுடியின்மேல் நிழல்செய்ய அத்திருமால் திருமகளோடு வீற்றிருக்கும் தன்மையை விளக்குகிறது.[84]

> "இலங்குபூண் மாஅல் தெருள நின்வரவு அறிதல்
> மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிதே"[85]

என்று திருமாலின் வெற்றியைப் பாராட்டி, "மாலே! உன் வரலாற்றினைத் தெளிவுற அறிதல் மயக்கம் நீங்கிய ஞானியர்க்கும் அரிதாகும். அத்தகைய நின்னை இன்னன் என்று எடுத்துக்கூறல் எங்ஙனம் எளிதாகும்? ஆயினும் நின்பால் எமக்குள்ள ஆர்வத்தால் கூறுகின்றேன். நீ வெறாது அருளல் வேண்டும்" என்ற பகுதி கம்பனின் அவையடக்கப் பாடல்களை நமக்கு நினைவூட்டுகிறது.[86]

கீரந்தையார் என்ற புலவர் பரிபாடலில் திருமாலின் அவதாரங்களுள் ஒன்றான வராகவதாரம் பற்றிய குறிப்புடன் பாடலைத் தொடங்குகிறார்,[87] பலதேவனோடு இணைத்தே திருமால் இங்குப் பேசப்படுகின்றார். திருமாலின் வெற்றிச் சிறப்பும் இதில் நன்கு வருணிக்கப்பட்டுள்ளது.

கடுவனிளவெயினனார் என்னும் புலவர்,

> "மாஅ யோயே மாஅ யோயே
> மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி
> மணிதிகழ் உருவின் மாஅ யோயே"[88]

என்று திருமாலை விளித்துப் பாடத் தொடங்குகிறார். ஐம்பெரும் பூதங்களும் முப்பத்து மூன்று அமரரும் மூவேழ் உலகங்களும் எல்லா உயிரினங்களும் அவனிடத்தே தோன்றியனவாகும். வராகமாகவும், அன்னமாகவும் அவன் அவதரித்துள்ளான். அவன் பெருமையை அவனையன்றி மற்றவரால் அறிய முடியாது. அவனுக்குப் பகைவர், நண்பர் என்ற வேறுபாடு கிடையாது என்றெல்லாம் அவனுடைய தன்மையைச் சிறப்பித்துக் கூறி, அவன் இத்தகையவன் என்று சாம வேதம் விளக்குதலின் அவன் தன்மை இதுவென அறிந்தோம்

என்று ஆசிரியர் அமைத்துள்ள அடிகள் பெருஞ் சிறப்புடையனவாக விளங்குதலைக் காணலாம்.

வீடுபேற்றினை நல்கும் திருமால் நெருப்பில் வெம்மையாய், மலரில் மணமாய், கல்லினுள் மணியாய், சொல்லினுள் வாய்மையாய், அறத்தினுள் அன்பாய், மறத்தினுள் வன்மையாய், அனைத்துமாய், அனைத்தினுட் பொருளுமாய் விளங்குகின்றார் என்பதை,

> "தீயினுட் டெறல்நீ பூவினு ணாற்றநீ
> கல்லினுள் மணியுநீ சொல்லினுள் வாய்மைநீ
> அறத்தினு ளன்புநீ மறத்தினுள் மைந்துநீ
> வேதத்து மறைநீ பூதத்து முதலுநீ
> வெஞ்சுட ரொளியுநீ திங்களு ளளியுநீ
> அனைத்துநீ யனைத்தினுட் பொருளுநீ"[89]

என்று பரிபாடல் கூறுகிறது. மேலும் குளிர்ந்த கடலின்கண் உள்ள ஒவ்வொரு நீர்த்திவலையிலும், பரந்த பூமி முழுவதிலும், மண்ணும் விண்ணும் மாறுபாடின்றித் திருமால் எல்லாப் பொருளிலும் அந்தர்யாமியாய் விளங்கி நிற்கும் தன்மையைக் கூறினார். இங்ஙனம் இறைவன் (நாராயணன்) எங்கும் நிறைந்துள்ள தன்மை ஆசிரியரால் விளக்கப்படுகிறது. திருமாலின் அவதாரம் பலவற்றைப் பாடுகையில்,

> "முதன்முறை இடைமுறை கடைமுறை தொழிலிற்
> பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோ ரிலையே"[90]

என்கிறார். 'பிறப்பித்தோரிலை' என்பதால் திருமால் வினையின் காரணமாகப் பிறவாமையும், அவரே பரம்பொருளாதலும் பெறப்படும்.

இதனை,

> "ஒருவயிற்றிற் பிறவாது பிறந்தருளி யுலகொடுக்குந்
> திருவயிற்றிற் றொருகுழவி திருநாமம் பரவுதுமே"[91]

என்று கலிங்கத்துப்பரணி கூறுவதனாலும் உணரலாம்,

"மனிசரும் மற்று முற்றுமாய்
மாயப் பிறவி பிறந்த
தனியன் பிறப்பிலி தன்னை"[12]

என்ற நம்மாழ்வார் கூற்றையும் காணலாம். மேலும் ஆழ்வார்,

"பிறப்பில் பல்பிறவிப் பெருமானை,
மறப்பொன் றின்றியென் றும்மகிழ் வேனே"[13]

என அருளிச் செய்தலைக் காணலாம். வியூகநிலை பற்றிக் குறிப்பிடும்போது பரிபாடலும் நாலாயிர திவ்ய பிரபந்தமும் ஒன்று போலவே வெண்மை, செம்மை, பசுமை, கருமை ஆகிய நான்கு நிறங்களையும் குறிப்பிடுகின்றன,

"செங்கட் காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்"[14]

என்ற பரிபாடல் கருத்தை,

"பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின்ப சும்புறம்,
போலுநீர்மை பொற்புடைத்த டத்துவண்டு விண்டுலாம்,
நீலநீர்மை யென்றிவைநி றைந்தகாலம் நான்குமாய்,
மாலினீர்மை வையகம்ம றைத்ததென்ன நீர்மையே"[15]

என்று திருமழிசையாழ்வார் அருளிச்செயலில் காணலாம். மேலும் கடுவன் இளவெயினனார் என்னும் புலவர் திருமாலின் மேனியை,

"திருமணி திரைபா டவிந்த முந்நீர்
வருமழை யிருஞ்சூன் மூன்றும் புரையு மாமெய்"[16]

என்று கூறுகிறார். இங்குப் பொதுவாகக் கடல் என்று கூறாது திரைஅவிந்த கடலைத் திருமாலின் மேனிக்கு உவமையாகக் கூறுவது பொருந்தியிருத்தலைக் காண்கிறோம்.

"மனக்கோள் நினக்கென வடிவு வேறில்லையே"[17]
என்னும் அடியானை அடியவர் நினைத்த உருவமே அவனுக்கு

உருவமாகும் என்பதை அறிவிக்கிறது. இப்பகுதி 'கனிவார் வீட்டின்பமே'[98] என்றும், 'பேணுங்கால் பேணும் உருவாகும்'[99] என்றும் கூறுகின்ற நம்மாழ்வார் பாடல் அடிகளை நமக்கு நினைவூட்டுகிறது.

மேலும் ஆலமரத்தின் கீழும், கடம்ப மரத்தின் கீழும், ஆற்றிடைக் குறையிலும், குன்றங்களிலும் வேறு வேறு பெயர்களுடன் வீற்றிருப்பவன் திருமால் என்ற புலவர்தம் மனநிலை உணர்தற்குரியதாகும்.

''வணங்கும் துறைகள் பலபல வாக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல வாக்கி அவையவை தோறும்
அணங்கும் பலபல வாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்கும் நின்னோரை இல்லாய் நின்கண் வேட்கை
எழுவிப்பனே''[100]

என்ற நம்மாழ்வார் பாடல் மேற்குறித்த கருத்தையே வலியுறுத்துகிறது.

''நின்னடி தொழுதனெம்
பன்மாண் அடுக்க இறைஞ்சினெம் வாழ்த்தினெம்
முன்னும் முன்னும்யாஞ் செய்தவப் பயத்தால்
இன்னு மின்னுமெங் காம மிதுவே''[101]

என்று நல்லெழினியார் என்ற புலவரும் திருமாலின் உருவ அமைப்பையும் அவன் அனைத்துமாக விளங்கும் தன்மையையும் கூறி, அவனை வாழ்த்தி வழிபடும் பேறு தமக்குக் கிடைத்தது தாம் முற்பிறவியில் செய்த தவத்தின் பயனேயாகும் என்று கூறி முடிக்கின்றார். தவப்பயனால் இறைஞ்சினோம் என்பது,

''நெறிமையால் மலர்கள் தூவி
பூசனை செய்கின்றார்கள் புண்ணியம் செய்தவாறே''[102]

என்ற நம்மாழ்வார் பாசுரத்தோடு ஒப்பு நோக்கத் தக்கது.

'எம் காமம் இதுவே'[103] என்ற மேற்கூறிய பரிபாடல் பகுதி,

"பணிசெய் துளபாதம்
பெற்றேன், ஈதேயின் னம்வேண் டுவதெந்தாய்"[104]

என்ற நம்மாழ்வார் அருளிச்செயலுடன் ஒத்திருத்தலைக் காணலாம்.

இளம்பெருவழுதி என்ற புலவர் திருமாலைப் பற்றிப் பாடிய பாடல் ஒன்று பரிபாடலில் காணப்படுகிறது[105]. இதில் கூறப்படும் இளம்பெருவழுதியும் புறநானூற்றில் 'உண்டாலம்ம இவ்வுலகம்'[106] எனத் தொடங்கும் பாடலை யெழுதிய கடலுள்மாய்ந்த இளம்பெருவழுதியும் ஒருவரா யிருத்தல் வேண்டுமென எண்ணுதற்கு இடமுண்டு என உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் குறிப்பிடுகிறார்[107] இப்பாடலும் பாண்டிய நாட்டுத் திருமாலிருஞ்சோலையைப் பற்றிய தாய் அமைந்திருத்தல் இக்கருத்துக்கு அரண் செய்வதாகும்.

"அறிவால் அறிய முடியாது புகழோடு கூடிய மலைகள் உலகத்துப் பலவுள்ளன. அவற்றுள் சிறந்தன நிலத்தின் பசித் துன்பத்தைப் போக்கி மக்கட்குப் பயன்படும் சில மலைகள். அவற்றிலும் சிறந்தன தெய்வம் விரும்பி உறையும் மலைகளாக உள்ள சில குலவரைகள். அவை தம்முளும் தலைசிறந்தது ஒரே தொழிலையும் வேறு வேறான வண்ணத்தையும் உடைய இருவரைத் தாங்கிய நீணிலை யோங்கிருங் குன்றமாகிய மாலிருஞ் சோலை" என்று புலவர் நம்மை அக்குன்றத்திற்கே அழைத்துச் செல்கின்றார்.[108]

"நாறிணர்த் துழாயோ னல்கி னல்லதை
ஏறுத லெளிதோ வீறுபெறு துறக்கம்"[109]

என்பதில் துழாய் மாலையையுடைய திருமால் அருள் செய்தா லல்லது வீட்டுலகம் பெறுவது யாவர்க்கும் அரிது. அவ்வாறு அரிதிற் பெறக் கூடிய வீட்டின்பத்தை எளிதில் அடைதற்குரிய உரிமையை அளிப்பது மாலிருங்குன்றம். அதனால் அதனை வணங்குவோம் எனப் புலவர் கூறுகின்றார். அம்மலையில் திருமால் பலதேவனோடு அமர்ந்திருத்தலை "தினைமின் மாந்தீர்" [110] என்கிறார். பின்னர் அதன் பெருமையைக்

கேட்குமாறு விளங்கும் வகையில் உரைக்கிறார் புலவர். அம்மலை மாயோனை ஒப்ப விளங்குகிறது என்றும் கூறுகிறார். மேலும்,

"சென்று தொழுகல்லீர் கண்டு பணிமின்மே"[111]
"கண்டுமய ரறுக்குங் காமக் கடவுள்"[112]

என்று மொழிந்து அம்மலையே கடவுளாகும் என்றும் சென்று அதனை வழிபடும் ஆற்றலில்லாதார் இருந்த இடத்தே நினைந்து கைதொழுதாலும் பயனளிக்குமென்றும் கூறுகிறார்.

நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் இரு திருவாய் மொழிப் பகுதிகளை திருமாலிருஞ்சோலை பற்றி அமைக் கின்றார். முதன் முதலாக அவர் பாடத் தொடங்கும் தலமும் இம்மலையே யாகும்.

"கிளரொளி இளமை கெடுவதன் முன்னம்,
வளரொளி மாயோன் மருவிய கோயில்,
வளரிளப் பொழில்சூழ் மாலிருஞ் சோலை,
தளர்வில ராகில் சார்வது சதிரே"[113]

என்று கூறி மேற்சொல்லப்பட்ட பரிபாடற் கருத்தையே ஆழ்வார் வலியுறுத்துவதைக் காணலாம்.

மேலும் அம்மாலிருஞ் சோலை மலைக்கு,

"தைய லவரொடும் தந்தா ரவரொடும்
கைம் மகவொடும் காத லவரொடும்
தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்"[114]

என்று கூறுகிறார் பரிபாடலாசிரியர்.

இறைவன் உயிர்க்கூட்டத்தின் துன்பங்களைக் களைவதற் காகவே திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கிறான் என்பதை,

"எவ்வயின் உலகத்துத் தோன்றி அவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பம் களைவோன்"
அன்பது மேஎ இருங்குன் றத்தான்[115]

என்பதால் குறிக்கிறார் அவன் அம்மலையில் அன்போடு உறைகிறான் என்றும் இதனையே பெரியாழ்வார்,

"மாலிருஞ்
சோலை மலைதன்னை,
கருதி யுறைகின்ற கார்க்கடல்
வண்ணன்"[116]

என்கிறார், இவ்வாறு தன் காலத்து மக்களைத் தன் தலை நகரின் அருகே அமைந்துள்ள காக்கும் கடவுளாகிய திருமால் வீற்றிருக்கும் மலைக்குச் செல்லுமாறு பாடும் இளம்பெரு வழுதியின் பாடல் எண்ணுந் தொறும் இன்பம் தருகிறது. இவர் கூறிய இக்கருத்துகள் பிற்காலத்து வந்த ஆழ்வார்கள் உள்ளத்திலும் நிலைபெற்றது என்பதில் ஐயமில்லை.

இடைக்கால வைணவ வளர்ச்சிக்குப் பரிபாடல் வழி வகுத்தது என்பதும் ஆழ்வார்கள் பாசுரங்களை அருளிச் செய் வதற்கு அது பெரிதும் துணைபுரிந்தது என்பதும் எவரும் மறுக்க முடியாத உண்மையாகும். வைணவ இலக்கிய வளர்ச்சியின் வரலாற்றிற்குப் பரிபாடல் ஒரு வழிகாட்டியாக விளங்கியுள்ளது. பரிபாடற் புலவர்கள் பிற்கால ஆழ்வார் களுக்குப் பாதை வகுத்துக் கொடுத்துள்ளனர். பாடும் பொரு ளிலும் பாடும் முறையிலும் திருமாலைப் பற்றிய பரிபாடல் களைப் பின்பற்றியிருத்தலின் நாலாயிர பிரபந்தம் அவற்றிற் குப் பெரிதும் கடமைப்பட்டது.[117] பரிபாடல் இசையுடன் ஓதப்பட்டமை கண்டு ஆழ்வார்களும் தம் பாசுரங்களைப் பண்ணோடு பாடுதற்குரிய வகையில் அமைத்தனர் நாயன்மார் களும் இப்பண்முறை தழுவிப் பாடலாயினர். நாலாயிர திவ்விய பிரபந்தமும் தேவார திருவாசகங்களும் பண் அமைத்துப் பாடுதற்குக் காரணம் பரிபாடல் என்பது உளங் கொளற் குரியது. திருமாலிருஞ்சோலை மலையின் கண்ணனை யும் பலதேவனையும் ஒருசேர வழிபட்டமையைப் பரிபாடல் கூறுகிறது.[118] ஆனால் இரு கடவுளர்களையும் இணைத்து வழிபட்டதற்கு ஆழ்வார் பாடல்களில் சான்றில்லை. திருமா

லிருஞ்சோலைமலை, இருந்தையூர், குளவாய் என்னும் திருமாலுக்குரிய முப்பதிகளையே பரிபாடல் குறிப்பிடுகிறது. நாலாயிர பிரபந்தம் தமிழ்நாடு முழுதுமுள்ள நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளைப் பாடியுள்ளது. பூதத்தாழ்வார் திருமாலிருங்குன்றக் கோயிலை இளங்கோயில் என்று குறிப்பிட்டுள்ளார்.[119] திருமால் முழுமுதற்கடவுள் என்பதனைப் பரிபாடல், நாலாயிர பிரபந்தம் ஆகிய இருபாடல்களும் தெரிவிக்கின்றன. பாற்கடலைக் கடைந்தது,[120] கருடன் தன் தாயின் துயரைக் களைந்தது,[121] பிருகலாதன் வரலாறு,[122] அகலிகை சாபம் பெற்றது[123] ஆகிய புராண இதிகாசக் கதைகள் பரிபாடலிலன்றி ஏனைய தொகை நூல்களில் காணப் படவில்லை. வடநாட்டுக் கதைகள் தமிழகத்தில் காலப் போக்கில் மிகுதியாக இடம்பெற்றதையே இவை உணர்த்து கின்றன எனலாம்.

**பிற சங்க நூல்களில் வைணவம்**

நற்றிணைக் கடவுள் வாழ்த்தில் திருமால் வேதத்தில் போற்றப்படும் பரம்பொருள் என்றும், அவர் உலகிற்குக் காரணப் பொருள் என்றும், அவர் எங்கும் பரந்து நிற்கும் வியாபக நிலை உடையவர் என்றும், ஒவ்வொரு பொருளிலும் கரந்துநிற்கும் அந்தர்யாமியாம் நிலையும் உடையவர் என்றும் நன்கு விளக்கப்படுகின்றன.

இதனை,

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே",[124]

என்னும் அப்பாடலால் அறியலாம்.

பதிற்றுப்பத்தில் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய நான்காவது பத்துள் திருவனந்தபுரத்துக் கோயில் கொண்டுள்ள திருமாலின் வழிபாட்டுச் சிறப்புக் கூறப்படுகிறது.[125]

அகநானூற்றில் திருமாலைப் பற்றிய கிருஷ்ணாவதாரச் செய்தியொன்றும், இராமாவதாரச் செய்தியொன்றும், பரசுராமாவதாரச் செய்தியொன்றும் கூறப்படுகின்றன.

"வடாஅது
வண்புனற் றொழுநை வார்மணல் அகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல" [126]

என்னும் அடிகளில் கிருஷ்ணாவதாரச் செய்தியைக் காண்கிறோம். "ஆயர் மகளிர் குளியாநின்றார்களாக, அவரிட்டு வைத்த துகிலெல்லாம் பின்னை எடுத்துக்கொண்டு குருந்தமரத்தின்மீது ஏறினாராக, அவ்வளவில் நம்பி மூத்த பிரான் வந்தாராக, அவர்க்கு ஒரு காலத்தே கூட மறைத்தற்கு வேறொரு வழியின்மையின் ஏறிநின்ற குருந்த மரத்தின் கொம்பினை தாழ்த்துக் கொடுத்தார். அதற்குள்ளே அடங்கி மறைவாராக, அவர் போமளவும் தானையாகவுடுக்கத் தாழ்த்தாரென்பாரு முளர்"[127] என்று அதன் உரைக்குறிப்பாசிரியர் கூறினர்.

அகநானூற்றில் இராமன் தனுஷ்கோடித் துறையின் ஓர் ஆலமரத்தின் கீழ்த்தங்கி வானர சேனைகளோடு இலங்கைமேல் படையெடுத்தலைக் குறித்து ஆலோசனை செய்தபோது அப்பறவைகள் ஒலி எழுப்ப, அதனைத் தன் கைகள் காட்டி ஒலிசெத்து அடங்கச் செய்தான் என்பது,

"வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை
வெல்போ ரிராமன் அருமறைக் கவித்த
வல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்று"[128]

என்று குறிக்கப்பட்டுள்ளது. இச்செய்தி தமிழ்நாட்டு வழக்கு. இராமாயணங்களில் காணப்படவில்லை.

''மன்மறுங் கறுத்த மழுவாள் நெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல''[129]

என்ற பகுதியில் பரசுராமர் அரசரைக் கொன்று யாகம் செய்த போது அந்த யாகத்தில் நடப்பட்ட தூண் இங்கு உவமையாக வந்துள்ளது.

வாசுதேவன் - பலதேவன் வணக்கம் சங்க காலத் தமிழகத்திலும் இருந்தது. கண்ணனுக்கும் பலதேவனுக்கும் கோயில்கள் இருந்தன. புலவர்கள் ''நீ பகைவரைக் கொல்வதில் கண்ணனையும் வலிமையில் பலதேவனையும் ஒப்பை''[130] என்று தமிழரசை வாழ்த்தினர்.

''பானிற வுருவிற் பனைக்கொடி யோனும்
நீனிற வுருவி னேமி யோனுமென்
றிருபெருந் தெய்வ முமுடனின் றாஅங்கு''[131]

என்று அவர்களை இருபெருந்தெய்வங்களாகவே வழிபட்டனர் என்பதைப் புறநானூற்றில் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடல் வாயிலாக அறியலாம். பலதேவனுக்குப் பனைக்கொடி உரியது. தொல்காப்பியர் பனை என்னும் பெயர் 'கொடி முன்வரின்'[132] என்ற நூற்பாவிற்குத் தனி விதி கூறியுள்ளதை நோக்குங்கால் அவர் காலத்திலேயே இவ்வணக்கம் தமிழகத்தில் இருந்தது எனக் கருதலாம்.

**ஐம்படைத் தாலி :**

சங்க காலத் தமிழர் தம் பிள்ளைகளுக்குத் தாலி அணிவித்தல் வழக்கம். அத்தாலி காத்தற் கடவுளான திருமாலின் ஐந்து படைகளின் வடிவங்களைப் பொன்னாற் செய்து குழந்தைகளின் கழுத்தில் கட்டும் ஒருவகை ஆபரணமாம். அதனை ஆண்மக்களும் பெண்மக்களும் அணிந்திருந்

தனர். தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை இடைக்குன்றூர்கிழார் என்னும் புலவர் தாம் பாடிய பாடலில் 'தாலி களைந்தன்றும் இலனே'[133] என்கிறார்.

அசுரர் சூரியனை ஒளித்ததும், திருமால் அதனை மீட்டது மாகிய செய்தி,

"அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பரிதி ஞாலத்
திடும்பைகொள் பருவர றீரக் கடுந்திற
லஞ்சன வண்ணன் தந்து நிறுத்தாங்கு"[134]

என்பதால் கூறப்பட்டுள்ளது இவ்வரலாற்றை,

"நாழிகை கூறிட்டுக் காத்துநின்ற
அரசர்கள் தம்முகப்பே
நாழிகை போகப் படைபொருதவன்
தேவகிதன் சிறுவன்
ஆழிகொண் டன்றிரவி மறைப்பச்
சயத்திர தன்தலையைப்
பாழில் உருளப் படைபொருதவன்
பக்கமே கண்டாருளர்"[135]

என்று பெரியாழ்வாரும் குறிப்பிடுகின்றார். திருமால் ஆலிலையில் பள்ளி கொண்டிருக்கும் செய்தி 'ஆலமர் கடவு ளன்ன நின்செல்வம்' [136] என்பதால் அறியலாம்.

"விட்டோரை விடாஅள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே"[137]

என்பதால் திருமகளின் சிறப்பு கூறப்படுகிறது. உலகப் பற்றின்றி இறைவன் திருவடிகளைப் பற்றுபவர்க்குத் திருமகள் புருஷகாரமாக நின்று அருள்புரிதலும் அங்ஙனம் பற்றா தவர்க்கு அருள்புரியாமையும் இதன் கருத்தாக அறியலாம்.

இராவணனால் கவர்ந்து செல்லப்பட்ட சீதை தன் அணிகலன்களைக் கழற்றிப் பூமியில் எறிய, அதனைக் குரங்குக் கூட்டங்கள் கண்டெடுத்து முறைதவறிப் புனைந்து நகை விளைத்ததான செய்தியை,

"கடுந்தே றிராம னுடன்புணர் சீதையை
அணித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதாணிகண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்கு
அறாஅ வருநகை யினிதுபெற் றிகுமே"[138]

என்ற புறநானூற்றுச் செய்யுள் அடிகளால் அறியலாம். இப்பகுதியில் இராமன் கதைக்குறிப்பு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இக்கதை இவ்வாறு இராமாயணங்களில் காணப்படவில்லை. சீதை எறிந்த ஆபரணங்களைச் சுக்ரீவன் எடுத்து வைத்திருந்து இராமபிரான் வந்தபோது அடையாளம் தெரிவதற்காக அவனிடம் கொடுத்ததாக மட்டும் உள்ளது.[139]

கற்றோரேத்தும் கலித்தொகையின் முல்லைக்கலியிலும் பிற பகுதியிலும் திருமாலைப் பற்றிய பல குறிப்புகள் காணப்படுகின்றன. 'தேயா விழுப்புகழ்த் தெய்வம்![140] என்று கூறி அரசன் வாழ்வானாக என்று திருமாலைத் துதிக்கிறார் புலவர். 'தேயா விழுப்புகழ்' என்பது தொல்காப்பியர் கூறும் 'தாவா விழுப்புகழ்' என்பதோடு ஒத்திருக்கிறது.[141]

"தொல்கதிர்த் திகிரியோன் பரவுதும்"[142] என்றும்
"பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ளேமியாற் பரவுதும்"[143]

என்றும் பலவாறு திருமாலின் புகழ் சிறப்பிக்கப்படுகிறது. மேற்கூறியவற்றால் திருமால் முல்லைநிலத் தெய்வமாதலும். பாற்கடலில் பள்ளி கொண்டிருத்தலும், தேயா விழுப்புகழுடைமையும் பெறப்படுகின்றன.

### கிருஷ்ணாவதாரம்

கலித்தொகையில் பாரத நிகழ்ச்சிகள் பல உவமைகளாக எடுத்தாளப்பட்டுள்ளன.

"மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை
வாய்புகுந் திட்டுப் புடைத்த ஞான்று"[144]

என்பதால் கண்ணன் கஞ்சனால் அனுப்பப்பட்டுக் குதிரை வடிவமாய் வந்த அசுரனைக் கொன்ற வரலாறு குறிக்கப்படு கிறது.

"மல்லரை மறஞ்சாய்த்த மாஅல்போல்"[145]

என்ற கலித்தொகைப் பாடலில் கண்ணபிரான் மல்லரைக் கொன்ற வரலாறு கூறப்படுகிறது.

"அஞ்சி ரசையியல் கூந்தற்கை நீட்டியா
னெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்
வஞ்சினம் வாய்த்தாலும் போன்ம்"[146]

என்ற பகுதியில், பாஞ்சாலியின் கூந்தலைத் தொட்டிழுத்த துச்சாதனனை வீமன் போரில் கொன்று தன் சபதம் முடித்த செயலைக் காணலாம்.

"புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வி லைவ ரட்ட
பொருகளம் போலும்"[147]

என்பதில் பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் நிகழ்ந்த பாரதப் போர்க்களம் குறிக்கப்படுகிறது.

அரக்கு இல்லில் ஐவரைக் குடிபுகச் செய்து இரவில் அதற்குத் துரியோதனன் தீயிட்ட செய்தியும் அப்பெருந் துன்பத்திலிருந்து வீமன் தன் உறவினரைக் காப்பாற்றியதும்,

"வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முக்கண்ணவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்
ஐவரென் றுலகேத்தும் அரசர்கள் அகத்தராக்
கைபுனை அரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு அகத்தவா

முளிகழை உயர்மலை முற்றிய முழங்கழல்
ஒள்ளுரு அரக்கில்லை வளிமகன் உடைத்துத்தன்
உள்ளத்துக் கிளைகளோடு உயப்போகு வான்போல்''[148]

என்ற பாலைக்கலிப் பகுதியால் அறிகிறோம்.

''மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கறுத் திடுவான்போல்''[149]

என்ற கலித்தொகைப் பகுதியில் வீமன் துரியோதனனைக் கொன்ற செய்தி அறியலாம். இவை தவிரப் பத்துப்பாட்டின் பல இடங்களிலும் மாயோனைப் பற்றிய குறிப்புகள் வந்துள்ளன.

''புள்ளணி நீள்கொடிச் செல்வன்''[150]

என்ற திருமுருகாற்றுப்படை வரியினால் திருமாலின் கொடி கருடக் கொடி என்பதும்,

''நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
வுலகங் காக்கு மொன்றுபுரி கொள்கை''[151]

என்பதால் அவன் காத்தற்கடவுள் என்பதும் பெறப்படும்.

''இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை''[152]

என்றபெரும்பாணாற்றுப்படை அடிகளால் திருமால் ஈரடியால் மூவுலகும் அளந்தவர் என்பதை அறியலாம்.

''நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல மிமிர்ந்த மாஅல் போல''[153]

என வரும் முல்லைப்பாட்டின் தொடக்க அடிகளால் திருமால் ஆழிப்படையினையும் வலம்புரிச் சங்கினையும் கைகளில் தாங்கியுள்ளவர் என்றும், மாவலிச் சக்கரவர்த்தியின்பால் மூன்றடி மண் வேண்டிச் சென்று அவன் அவர் கேட்ட பொருளை அர்க்கிய நீர் வார்த்துக் கொடுத்த அளவில் பேருருவத்தோடு காட்சி அளித்தனன் என்றும் உணர்த்தப்படுகின்றன.

திருமாலின் பிறந்த நாள் திருவோணம் என்பது,
"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாள்"[154]

என்ற மதுரைக்காஞ்சி அடிகளால் அறியப்படுகிறது. மேலும் பெரியாழ்வார்,

"ஆணொப் பாரிவன் நேரில்லை காண்திரு
வோணத் தானுல காளுமென் பார்களே"[155]

என்பதால் திருவோணத்தினைக் கண்ணபிரானுக்குரியதாகக் குறித்துள்ளார்.

திருமாலின் கொப்பூழில் தோன்றிய தாமரையிலிருந்து பிரமன் தோன்றியமையும்[156] பாண்டவர் கௌரவரோடு போர்புரிந்தமையும்[157] பெரும்பாணாற்றுப்படையில் கூறப்படுகின்றன.

சிறுபாணாற்றுப்படையில் வில்விசயன் காண்டல வனத்தைத் தீமடுத்த செய்தியும், வீமன் வகுத்த மடை நூற்படியே ஓய்மாநாட்டு நல்லியக்கோடனின் அரண்மனையில் பற்பல உணவு வகைகள் ஆக்கப்பெற்ற செய்தியும் குறிக்கப்பட்டுள்ளன.[158]

பதினெண்கீழ்க்கணக்கில் ஒன்றான திரிகடுகம் என்னும் நூலில்,

"கண்ணகன் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்
தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்—நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததூஉம் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ண னடி"[159]

என்பதால் திருமால் உலகளந்ததும், குருந்த மரத்தைச் சாய்த்ததும், மாயச்சகடம் உதைத்ததும் ஆகிய கதைக் குறிப்புகள் காணப்படுகின்றன.

தமிழின் முதற்காப்பியமாக விளங்கும் சிலப்பதிகாரத்தில் திருமால்குன்றமும் அதன்கண் உள்ள பிலத்துவாரமும் அவ ணிருந்த பவகாரணி முதலிய மூன்று பொய்கைகளும்,

"திருமால் குன்றத்துச் செல்குவி ராயிற்
பெருமால் கெடுக்கும் பிலமுண் டாங்கு
விண்ணோ ரேத்தும் வியத்தகு மரபிற்
புண்ணிய சரவணம் பவகா ரணியோ
டிட்ட சித்தியெனும் பெயர் போகி
விட்டு நீங்கா விளங்கிய பொய்கை
முட்டாச் சிறப்பின் மூன்றுள வாங்கு"[160]

என்பதால் குறிக்கப்படுகின்றன.

முன்பொரு காலத்துத் திருமால் மேருமலையை மத்தாகவும், வாசுகியை நாணாகவும் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்தான். அங்ஙனம் கடலைக் கடைந்த அவன் கைகள் யசோதைப் பிராட்டியாருடைய கடைகயிற்றாலே கட்டுண்ட கை. இஃது ஒரு மாயமே என்பதனை,

"வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாட் கடல்வயிறு
கலக்கினையே
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றால்
கட்டுண்கை
மலர்க்கமல வுந்தியாய் மாயமோ மருட்கைத்தே"[161]

என்று சிலப்பதிகாரம் குறிக்கிறது.

கண்ணனென்னும் தெய்வக் குழந்தையின் விளையாட்டில் ஈடுபட்டு மூவுலகும் இருள்தீர்ந்து வாழும்படி நடந்த திருவடிகளே பின்னாளில் பஞ்சபாண்டவர்க்குத் தூது நடந்தது என்பதை,

"இரண்டடியால் மூவுலகு மிருடீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி"[161]

என்று இளங்கோவடிகள் அழகுறப் பாடுகிறார். மேலும்,

"கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே"[162]

என்றும்,

"மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்
கடந்தானை நூற்றுவர்பா லாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே"[164]

என்றும் திருமாலைப் புகழ்கிறார். கண்ணகி காணுமாறு மாதரி வீட்டில் ஆய்ச்சியர் ஆடிய குரவைக் கூத்து முழுவதும் திருமாலின் பெருமையைப் பலபடப் பேசுவதாகவே அமைந்துள்ளது.

இவ்வாறு பழந்தமிழ் இலக்கியங்களில் வைணவத்தின் தொன்மையும் சிறப்பும் பேசப்படுகின்றன. திருமாலின் பிறப்பும் செயலும் கூறப்படுகின்றன. இதுகாறும் கூறியவற்றால் பாரத இராமாயணக் கதைகள் பண்டைக் காலந் தொட்டே மக்களிடை நன்கு வழங்கி வந்துள்ளன என்பதும் பழந்தமிழ் இலக்கியங்களிலும் இவ்விரு இதிகாசங்களைப் பற்றிய குறிப்புகள் ஆங்காங்கு உவமைகளாகவும் செய்திகளாகவும் வந்துள்ளன என்பதும் நன்கு விளங்குகின்றன.

பக்தி இலக்கிய மறுமலர்ச்சியைக் குறித்து டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் குறிப்பிடுவது இங்குக் கருதத் தக்கது: "இடையில் தோன்றிய சில நீதி நூல்களை ஒதுக்கி விட்டுப் பார்ப்போமானால் சங்க இலக்கியம் பக்தி இலக்கியமாக மாறிவந்த வளர்ச்சியில் உள்ள சிறப்பை உணரலாம். பெயர் குறிப்பிடப்படாமையால் இன்னார் என்று உணரப் படாத கற்பனை மனிதர் இருவரின் காதலாக இருந்த பாட்டுகள் மாறி, தெய்வத்தின் மீது கொண்ட காதலைப்

பாடும் பாட்டுகளாக வளர்ந்தன. அரசர்களின் வீரச் செயல்களைப் பாடும் நிலைமாறிக் கடவுளின் அற்புத விளையாட்டுகளைப் பாடும் நிலை வளர்ந்தது. வள்ளல்களின் கொடையைப் பாடும் பாடல்களுக்கு ஈடாகக் கடவுளின் அருட்செயல்களைப் பாடும் பாடல்கள் வளர்ந்தன. கற்பனைக் காதலுக்குப் பின்னணியாக அந்தந்த ஊர்களின் இயற்கைச் சூழல் வருணிக்கப்பட்டிருந்ததுமாறிக் கடவுளிடம் செலுத்தும் பக்திக்குப் பின்னணியாக அந்தந்தக் கோயில் தலங்களைச் சூழ்ந்த இயற்கையழகைப் பற்றிய வருணனைகள் அமைந்தன.

வேறுபாடு பெரிதாக விளங்கும் இடம் பாடல்களின் வடிவிலேயே ஆகும். சங்கப் பாடல்கள் கற்றவர்களுக்கு உரியனவாகப் பாடப்பட்ட இலக்கியம் ஆகும். ஆழ்வார் நாயன்மார்களின் பக்திப் பாடல்கள் கற்றவரோடு மற்றவர்களும் கூடிப் பாடுதற்கு ஏற்றவாறு தமிழ் எளிதாய் நெகிழ்ந்து அமைந்தது ஊர்தோறும் பக்தர்கள் கூட்டம் கூட்டமாகப் பாடிக் கோயில்களைச் சுற்றிவந்து வழிபடுவதற்கு ஏற்ற வகையில் இசைப் பாடல்களாய் அமைந்தன. இவ்வாறு நடை எளிமையும் இசை இனிமையும் கூடினமையால் தமிழ் இலக்கியத்தில் ஒரு மாறுதல் ஏற்பட முடிந்தது''[166]

### வைணவ மறுமலர்ச்சி

இத்தகைய தொல்புகழும் ஏற்றமும் வாய்ந்த வைணவ சமயம் களப்பிரர் ஆட்சிக் காலத்தே தன் நிலையில் தாழலாயிற்று. பின்னர்ப் பல்லவர் காலத்தில்தான் வைணவ சமயம் மறுமலர்ச்சி அடைந்தது. ஆழ்வார்கள் தோன்றி அச்சமயத்திற்குப் புத்துயிர் அளித்தனர். வைணவ சம்பிரதாயத்தின்படி அதற்குச் சிறப்பளித்த பெரியோர்கள் இரு வகையினராவர். அவர்களை ஆழ்வார்கள் என்றும், ஆசாரியர்கள் என்றும் வழங்குவர். அவர்களுள் ஆழ்வார்கள் என்போர் அவதார புருஷர்களாகவும், ஞானத்தின் திருவுருவாகவும், வைணவ சமயத்தின் முதல்வராகவும் விளங்கியவர்கள். 'ஆழ்வார்கள்' என்பதற்கு 'பகவத் குணங்களில் ஆழ்ந்து

ஈடுபடுவோர்' எனப் பொதுவாக விளக்கம் கூறுவதுண்டு இப்பெயர் வழக்கிற்குத் திவ்விய பிரபந்தங்களில் சான்று காணப்படவில்லை. வைணவர்கள் ஆழ்வார்களை அவதார புருடர்கள் எனக் கருதி வழிபடுவர்.

ஆசாரியர் என்போர் அவ்வாழ்வார்களுக்குப் பிற் காலத்தே அவர்களுடைய சொற்செயல்களைப் பின்பற்றி நாட்டை உய்யக் கொண்ட பெரியோராவர். இவர்களுக்குத் தலைவர் நாதமுனிகள் என்பவராவர்.

வீரநாராயணபுரத்தில் பிறந்த நாதமுனிகள் என்பவர் ஒரு நாள் தம்மூரிலுள்ள மன்னார்கோயிலில் சில வைணவர் வந்து

"ஆரா அமுதே! அடியேன் உடலம்
நின்பால் அன்பாயே"[1]

என்ற பாசுரத்தைக் கூறி வணங்கி முடிவில் 'ஓர் ஆயிரத்துள் இப்பத்தும்' என்று கூறக்கேட்டு இப்பாசுரங்கள் ஆயிரம் இருந்தன என்பதை அறிந்து அவர்களை வினவி யறிய முடியாமல் நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூர் சென்று அங்கு மதுரகவியின் சீடரான பராங்குசரை வணங்கி நம்மாழ்வாருடைய திருவாய்மொழி மட்டுமன்றி நாலாயிர பிரபந்தம் முழுமையும் பெற்றார் என்பது வரலாறாகும் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் சீடரான பெரியவாச்சான் பிள்ளை நாலாயிர பிரபந்தம் முழுமைக்கும் அரியதொரு உரையை இயற்றியுள்ளார்.

நாதமுனிகள் காலந்தொட்டு மணவாள மாமுனிகள் காலம் வரையிலுள்ள ஆசாரியர் பலரும் நாலாயிர பிரபந்தங் களைப் போற்றிச் சில பாடல்களைப் பாடியுள்ளனர். நாத முனிகளின் சீடர்களில் உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி முக்கியமானவர்கள். ஆயினும் இன்றைய வைணவ சமயவளர்ச் சிக்கு இராமானுசரே முதற்காரணமாவர் விசிஷ்டாத்வைத மதத்தைப் பரப்பிய பெருமை இவரையே சாரும். இவர்கள் வழியாகத் திருமால் நெறி எல்லா நாடுகளிலும்

பரவியது. இவர்கள் வரலாற்றினைக் கூறும் குருபரம்பரை நூல்கள் "நம்மாழ்வார் என்ற முகில் நாதமுனிகள் என்ற மலைமுகட்டில் மழை பொழிந்தது. அந்த ஞானவெள்ளம் உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி என்ற அருவிகளாக இறங்கி, ஆளவந்தார் (யமுனாசாரியார்) என்னும் பேராற்றில் கலந்தது. இப்பேராறு கலந்த கடல் போன்ற தடாகம்தான் இராமானுசர் என்றும் ஏனைய ஆசாரியர்கள் என்றும் மதகு களின் வழியாகப் பாய்ந்து உலகு வளம் கொழிக்கவும் செழிக்கவும் உதவின" என்றும் குறிப்பிடுதலைக் காணலாம்.[167]

பெரியாழ்வார் பாசுரங்களுக்குப் பாண்டிய பட்டர்,

"மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூ ரென்றொருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தா னென்றுரைத்தோம் கீழ்மையினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து"[168]

"பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான்
வந்தானென்று
ஈண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று"[169]

என்று அருளிச் செய்த தனியன்கள் காணப்படுகின்றன.

தமிழகத்தில் தொன்மையும் புகழும் பொருந்திய வைணவ சமயம் இன்று மிகச் சிறந்து விளங்கி நிற்றலைக் காணலாம். இன்றைய வைணவ சமய வளர்ச்சிக்கு ஆழ்வார்களும், ஆசாரி யர்களும் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியதாகும்.

ஆழ்வார்களுள் பெரியாழ்வார் தலைசிறந்தவராவர். அவர் பாசுரங்கள் பக்தி நெறியினையும், வைணவ சமயத் தத்துவங்களையும் நன்கு விளக்குவனவாகும். அக்காலச் சமுதாய நிலையை அறிதற்கு அவர் பாசுரங்கள் பெரிதும் துணைசெய்கின்றன. இவற்றுடன் பல்வேறு இலக்கியச் சிறப்புகளையும் அவர் பாசுரங்களில் காணலாம். ஆழ்வார் களுள் முதன்மையானவரான பெரியாழ்வாருக்கு வைணவ உலகம் பெரிதும் கடப்பாடுடையது.

## வைணவ சமயத்தின் தொன்மையும் வளர்ச்சியும்

## குறிப்புகள்

1. பகவத் கீதை, சுவாமி சித்பவானந்தர் பதிப்பு, அத்தியாயம் 4, சுலோகம் 8.
2. ச எஸ். வரதராச அய்யர், 'தமிழ் இலக்கிய வரலாறு' ப. 214.
3. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் கால நிலை', ப.8. அடிக்குறிப்பு. 12.
4. தொல் அகத். நூற்பா 5.
5. இறை-அகப், நூற்பா 1, உரை.
6. சிலம்பு. பதிகம் 1-2, உரை, ப. 18.
7. நம்பி. 81,
8. க. காந்தி, 'தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்', ப.76.
9. ஐங். 62.
10. பதிற். 30/14-15
11. தொல். அகத். நூற்பா 5.
12. சிலம்பு, 5/72-73
13. சிலம்பு. 5/167-168.
14. மணி. 1/43-47
15. அப்பர் தேவாரம். 5-100-3.
16. பட்டின. 86-87 அடிகள்.
17. பெரியபுராணம், திருக்குறிப்புத் தொண்டர் புராணம், பா. 714.
18. தொல். அகத். நூற்பா 30.
19. தொல். அகத். நூற்பா 30, இளம்பூரணர் உரை.
20. தொல். அகத். நூற்பா 23.
21. சிலம்பு, ஆய்ச்சியர் குரவை, உரைப்பாட்டு மடை, கரும்பம்,

22. கலி. முல்லைக்கலி, 103/63-64.
23 மணி. 19/65-66.
24. சிலம்பு, ஆய்ச்சியர் குரவை, எடுத்துக்காட்டு வரி 21-22.
25. மணி. 19/65 66.
26. சீவக. பாடல் 482/3-4.
27. திருக்கோவை. பாடல் 273.
28. திருவாய். பாடல் 3441/2.
29. பெரியாழ். திரு. 309.
30. ,, 332/3-4.
31. ,, 349/1-2
32. மு. இராகவையங்கார், 'ஆராய்ச்சித் தொகுதி', ப.56
33. பழமொழி பாடல் 335.
34. சிலப்பு, ஆய்ச்சியர் குரவை, பாட்டு 2.
35. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் காலநிலை', ப.5.
36. தொல். எழுத்து. நூ. 285.
37. மு இராகவையங்கார், 'ஆராய்ச்சித் தொகுதி', ப.54.
38. தொல். அகத். நூ. 5.
39. பு. ரா. புருடோத்தம நாயுடு, 'புல.. மப்பரிசு', ப.129.
40. தொல். புறத். நூ.63.
41. தொல். புறத். இளம்பூரணர் உரை, ப.83.
42. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் காலநிலை', ப.5.
43. தொல். அகத். நூ.5. கா. சுப்பிரமணிய பிள்ளை கருத்து. ப.21.
44. தொல். புறத். நூ.85.
45. தொல். புறத். நூ.88, நச். உரை. பக். 267.
46. புறப். வெ மா., நூ.39, 40, 41.
47. திருவள்ளுவமாலை, 1 6.
48. மு. இராகவையங்கார், 'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி' ப. 116.
49. ந.வீ. செயராமன், 'இலக்கண ஆய்வுக் கோவை', ப.34.

50. மறைமலையடிகள், 'மாணிக்கவாசகர் காலமும் வரலாறும்', பக். 656-662.
51. ந. சுப்புரெட்டியார், 'தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை', ப. 498.
52. 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்', எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் எழுதிய 'வைணவத்தின் வளர்ச்சி' என்னும் கட்டுரை, சோதி 29, ஒளி 2-3, ப.2.
53. பரி. 15/63-66.
54. சிலம்பு, 11/41-51.
55. ,, 11135-40.
56. பெரும்பாண். 371-373.
57. ஈ. எஸ். வரதராச அய்யர், 'தமிழ் இலக்கிய வரலாறு'' ப.241.
58. சிலம்பு 5/171-172.
59. ,, 14/8-9.
60. ,, 9/10.
61. ,, 5/171.
62. பரி. 15/65-66.
63 ஆழ்வார்கள் கால நிலை. ப.8
64. சேந்தன் திவாகரம், மக்கட்பெயர்த் தொகுதி, 2.
65. பெரியாழ். திரு 417/3-4
66. திருவாய். 3136.
67. ,, 2946.
68. யாப். விருத்தி, நூ.93, செய்யுளியல், புறனடை.
69. பெரி. திரு. 8-1-1 வியாக்கியானம்.
70. கலி, பாலைக்கலி, 9.
71. கலி. 126.
72. முல்லை. 37–38.
73. தொல். பொருள். மரபியல் 71,
74. கலி. 9. உரை,

75. மணி. 25/98-99.

76. திரு. மாலை, 36.

77. „ 6

78. கல்லாடம், நா. 15/20-22.

79. திருக்கு. 610.

80. „ 1103.

81. பதிற்று. 7ஆம் பத்து, பதிகம்.

82. பெரி. திரு. 1498-1507.

83. பரி. 15.

84. பரி. 1

85. பரி. 1/29-30.

86. கம்ப. அலைபடக்கம்.

87. பரி. 2/16.

88. பரி. 3/1-3.

89. பரி. 3/63-68.

90. பரி. 3/71-72.

91. பரணி, 3.

92. திருவாய். 2946.

93. „ 2979.

94. பரி. 3/81-82.

95. திருச்சந்த. 795.

96. பரி. 4/6-7.

97. பரி. 4/56.

98. திருவாய். 2-3-5.

99. „ 2-5-10

100. திரு. வி. 2573.

101. பரி. 13/61-64.

102. திருவாய். 3681/3-4.

103. பரி. 13/64.

104. திருவாய் 3755/1-2.

105. பரி. 15.

106. புறம். 182

107. புறம். 183.

108. பரி. 15/6-14.

109. பரி. 15/15-16.

110. பரி. 15/29.

111. பரி. 15/34.

112. பரி. 15/37.

113. திருவாய். 2886.

114. பரி. 15/46-48.

115. பரி. 15/51.

116. பெரியாழ். திரு. 348.

117. இரா சாரங்கபாணி, 'பரிபாடல் திறன்', ப. 161.

118. பரி. 15/65-66.

119. நாலாயிரம், இரண்டாந் திருவந்தாதி, 2235.

120. பரி 2/71-72.

121. பரி. 3/15-18.

122. பரி. 4/10-21.

123. பரி. 19/50-52.

124. நற். கடவுள் வாழ்த்து.

125. பதிற்று. 4ஆம் பத்து, 1/1-10.

126. அகம். 59/3-6.

127. அகம். 59, உரை, ப. 232.

128. அகம். 70/13-17.

129. அகம். 220.

130. புறம். 56.

131. புறம். 58/16.

132. தொல். எழுத்து. நூ. 206.

133. புறம். 77.

134. புறம். 174/1-5.
135. பெரியாழ். திரு. 335.
136. புறம். 198/9.
137. புறம். 358.
138. புறம். 378/18-22.
139. ஈ. எஸ். வரதராச அய்யர், 'தமிழ் இலக்கிய வரலாறு.'
140. கலி, 103/76.
141. தொல். பொருள், புறத். 63/10.
142. கலி. 104/78.
143. கலி. 105/71-72.
144. கலி. 103/53-54.
145. கலி. 52/5.
146. கலி. 101/18-20.
147. கலி. 104/57-59.
148. கலி. 25/11-18.
149. கலி. 52/2-3.
150. முருகு. 151.
151. முருகு. 160-161.
152. பெரும்பாண். 29-30.
153. முல்லை. 1-3.
154. மதுரை. 590-591
155. பெரியாழ். திரு. 15/3-4.
156. பெரும்பாண். 402-404.
157. ,, 415-417.
158. சிறுபாண். 238-241.
159. திரிகடுகம், காப்பு.
160. சிலம்பு. 11/91-97.
161, சிலம்பு, 17/1.
162. சிலம்பு, குரவை, முன்னிலைப் பரவல் 3.
163 சிலம்பு 17, படர்க்கைப் பரவல். 2.
164. சிலம்பு 17, படர்க்கைப் பரவல் 3.
165. மு. வரதராசன், 'தமிழ் இலக்கிய வரலாறு', ப. 128.
166. திருவாய். 3194.
167. குருபரம்பரை.
168. பெரியாழ். திரு., தனியன் 2.
169. ,, ,, 3.

# பெரியாழ்வார் வரலாறும் காலமும்.

## தோற்றம்

செந்தமிழ் வளர்த்த பாண்டிய நாட்டிலே திருவில்லி புத்தூரில் அந்தணர் குலத்தில் தோன்றிய முகுந்த பட்டர் என்பவர் பதுமவல்லி என்னும் நங்கையை மணந்து இல்லற மென்னும் நல்லறத்தை நடத்தி வருங்கால் அவர்களுக்கு இறைவன் அருளால் பெரிய திருவடியின் அவதாரமாக ஆனித் திங்கள் சுவாதி நட்சத்திரத்தில் ஒரு குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு விட்டுணுசித்தர் எனப் பெயரிட்டனர்.

## இளமை

இளமையிலேயே இவர் திருமால் அடியாராய் விளங்கி னார்; கிருட்டிணாவதாரத்தில் இறைவன் கம்சனுக்கு மலர் களைக் கொடுத்துப் பணிசெய்து கொண்டிருந்த மாலாகார ருடைய இல்லத்திற்குச் சென்று பூமாலையை இரந்து பெற்று அணிந்து கொண்ட வரலாறு இவர் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிந்திருந்தது. மாலை அணிவதிலேயே கிருட்டிண பெருமானுக்குப் பெருவிருப்பம் என்பதைப் பல அடியார்கள் சொல்லக் கேட்டிருந்தார். ஆகவே பூம்பொழில் ஒன்று அமைத்துப் பூக்கட்டும் தொழிலில் ஈடுபட்டார். நாள்தோறும் நறுமணமிக்க வண்ண மலர்களைக் கொய்து மாலையாகத் தொடுத்து வடபெருங் கோயிலுடையானுக்குச் சாத்தி மகிழ்ச்சி யுடன் தம் வாழ்க்கையை நடத்தி வந்தார்.

## பொற்கிழி பெற்றது

ஆழ்வார் காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையில் கோநெடுமாறன் ஆண்டு வந்தான். அவன் இரவு நேரங்களில் நகர சோதனைக்கு மாறுவேடத்தில் செல்வதுண்டு. அவ்வாறு ஒரு நள்ளிரவு சென்றபோது ஞானஒளி பெற்ற

வழிப்போக்கன் ஒருவனைச் சந்தித்தான். அவனைக் கண்டு தாங்கள் கற்றுணர்ந்தவற்றுள் நன்னெறிக்குச் செலுத்துவதாகிய ஒரு வழியைக் கூறுமாறு கேட்டான். அதற்கு அவன் "மழைக்காலத்திற்கு வேண்டியவற்றை ஏனைய எட்டு மாதங்களிலும், இராக் காலத்திற்கு வேண்டுபவற்றைப் பகலிலும், முதுமைக்கு வேண்டியனவற்றை இளமையிலும், மறுமைக்கு வேண்டுபவற்றை இம்மையிலும் ஒருவன் தேடிக்கொள்ள வேண்டும்" என்று கூற அதன் உண்மையை அரசன் அறிந்தான். மேலும் ஒரு ஞானாசிரியனைக் கொண்டு உபதேசம் பெற விரும்பினான்.

பாண்டிய அரசன் புலவர்களைத் திரட்டிப் பரத்துவத்தை அறுதியிட நினைத்தான். அப்பரம்பொருள் இன்னதென உறுதியுடன் கூறுபவர்க்கு ஒரு பொற்கிழியைப் பரிசளிப்பதாகப் பறையறைவித்து, அக்கிழியை அவையின்கண் தொங்க விட்டான். நாட்டின் நாற்புறங்களினின்றும் புலமை மிக்க அறிஞர்கள் வந்து சேர்ந்தனர்.

திருவில்லிபுத்தூர் வடபத்திரசாயிப் பெருமான், தன் மெய்யடியாரான விட்டுணுசித்தனைக் கொண்டு வேதாந்த சாரமான தன் பரத்துவத்தை நிலைநிறுத்தி உலக மக்களை வாழ்விக்க எண்ணி அவர் கனவில் தோன்றியருளினார். அவர் அக்கனவிடை மதுரையம்பதிக்குச் சென்று திருமாலின் பரத்துவத்தை நிலைநாட்டிப் பொற்கிழி பெற்று வருமாறு பணித்தார். அதற்கு விட்டுணுசித்தர் சாத்திர ஞானம் சிறிதேனும் இல்லாத தாம் எங்ஙனம் அதனைச் சாதிக்க முடியும் என்று கூற, அப்பொறுப்பினைத் தாமே ஏற்பதாக இறைவன் அருள் புரிந்தனன். உடனே, இவர் கண்விழித்தெழுந்து நாரணன் கோயில் புக்குப் பரமனைப் பரவி விடைபெற்று மதுரையை நோக்கி விரைந்து செல்லலானார்.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து"[1]

என்பதற்கேற்ப, விட்டுணுசித்தருக்கு நாரணனின் நற்றுணை

கிடைத்தது. திருமாலின் அருட்டன்மையை உணர்ந்து புலவர்களின் இடையே நான்மறைகள் இதிகாசப் புராணங்களிலிருந்து பல சான்றுகளை எடுத்துக்காட்டி, நாராயணனே பரம்பொருள் என்றும், அவனைச் சரணடைதலே சிறந்த உபாயம் என்றும் நிலைநிறுத்தினார் அரசவையில் தோன்றிய பொற்கிழியும் தானாகவே ஆழ்வார் முன்னிலையில் தாழ்ந்து இழிய, அதனை எம்பெருமானின் அருளாகும் என உணர்ந்து அதனை அறுத்துக் கொண்டருளினார். அரசன் ஆழ்வாருக்கு அடிமையாயினான். இவ்வரலாற்றை,

> "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான்
> வந்தானென்று
> ஈண்டிய சங்க மெடுத்தூத—வேண்டிய
> வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்
> பாதங்கள் யாமுடைய பற்று"[3]

என்று பாண்டிய பட்டர் புகழ்ந்து கூறுகிறார். இக்காரணத்தால் 'பட்டர்பிரான்' என்ற திருநாமத்தையும் எய்தினார்.

**திருக்காட்சியும் பல்லாண்டும்**

இந்நிகழ்ச்சியை ஒரு பெருவிழாவாகக் கொண்டாட வேண்டுமென்று கருதிய அரசன் ஆழ்வாருக்குப் பட்டர்பிரான் என்ற திருநாமம் வழங்கி அவரைப் பட்டத்து யானையின் மீதேற்றி நகரமெங்கும் உலாவரச் செய்தான். மகனுடைய திருவிழாவை மகிழ்ச்சியுடன் காணவரும் தாய்தந்தையர் போல் திருமாலும் பெரிய பிராட்டியுடன் பெரிய திருவடியின் மீது அமர்ந்த வண்ணம் விண்ணில் தோன்றி ஆழ்வாருக்குக் காட்சி தந்து அருளினான். ஆழ்வார் சிறிதும் செருக்கடையாமல் எம்பெருமானின் அனந்த கல்யாண குணங்களுள் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து பக்தி பரவசராய்த் தம் நிலைமையையும் எம்பெருமானுடைய நிலைமையையும் மறந்து, "காலம் நடையாடாத பரமபதத்தில் நிலை பெற்றிருக்கும் இப்பரமபுருடன் காலம் நடையாடுகின்ற இந்த

உலகில் வந்து நிற்கின்றானே, பாவிகளின் கண்ணெச்சில் பட்டு இவனுக்கு என்ன தீங்கு வருமோ?'' என்று அஞ்சினார். அந்தத் திவ்விய மங்களத் திருமேனிக்கு எவ்விதமான தீங்கும் நேரிடா திருக்க வேண்டும் என்று மங்களாசாசனம் செய்கின்றவராய் யானை மணிகளையே தாளமாகக் கொண்டு திருப்பல்லாண்டு என்ற திருப்பாசுரத்தைப் பாடியருளினார். இறைவனுடைய பேராற்றலை மறந்து, தமது நிலையை எண்ணாமல்,

''பல்லாண்டு பல்லாண்டு பல்லாயி ரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்''[3]

என்று இறைவனுக்கே பல்லாண்டு பாடுகிறார். 'பல்லாண்டு' என்று ஒமுறை கூறுவதில் அவர் உள்ளம் அமைதி அடைய வில்லை. ''பல்லாண்டு, பல்லாண்டு'' என்றும், ''பல்லாயிரத் தாண்டு'' என்றும் ''பலகோடி நூறாயிரம்'' என்றும் தம் ஆர்வம் தீரப்பாடுகிறார். நீர்வேட்கை மிக்கவன் வேட்கை தீரும் வகையில் 'தண்ணீர், தண்ணீர்' என்று கூறியவாறு இருப்பதுபோல் இறைவனுக்கு இந்நிலத்தில் யாரால் என்ன தீங்கு விளையுமோ என்ற அச்சம் நீங்கும் வரையும் வாழ்த்துக் கூறுகிறார்.

ஆழ்வாரின் அச்சத்தைக் கண்ட இறைவன் அவருக்குத் தனது பேரழகிடையே மறைந்திருந்த ஆற்றலைக் காட்டி னான். அச்சம் தணியக் காட்டிய தோளைக் கண்டு ஆழ்வார் பெரிதும் அஞ்சினார். இந்த வீர உருவிற்கு யாரால் தீங்கு விளையுமோ என்று கருதி,

''மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா!''[4]

என்று மங்களாசாசனம் செய்தாராம்.

இவருடைய திருப்பல்லாண்டு வெறும் சொற்கோவையாக இல்லாமல், பதிகத்தின் இலட்சியத்தை விளக்கி முதற்பாடலின் கருத்தை வளர்த்துக் கொண்டே செல்கிறது. பின்வரும் பாடல் களில் இறைவனின் மார்பினில் பிரிவின்றி வாழ்கின்ற திரு மகளுக்கும், அவன் கைகளில் தாங்கியுள்ள சங்கு சக்கரங்களுக் கும் வாழ்த்துக் கூறப்படுகிறது. அடியார்களாகிய தங்களுக்கும்

இறைவனுக்குமுள்ள "பிரியாத இணைந்த உறவு" என்றும் நின்று நிலைக்க வேண்டும் என்று வாழ்த்துகிறார். கண்ணனுக்கு ஆட்பட்டவர்களைத் தம் குழுவினில் வந்து கூடிப் பல்லாண்டு கூறுமாறு அழைக்கிறார்.

**சேந்தனாரின் திருப்பல்லாண்டும் ஆழ்வாரின் திருப்பல்லாண்டும்**

ஒன்பதாம் திருமுறையின் இறுதிப் பதிகமாக அமைந்திருப்பது சேந்தனார் அருளிய 'திருப்பல்லாண்டு' ஆகும். இது பதின்மூன்று திருப்பாடல்களைக் கொண்டது. தில்லையம் பதியில் ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப் பெருமான் தம் அடியாராகிய சேந்தனாரின் அன்பின் திறத்தை உலகிற்குக் காட்ட வேண்டுமென்ற அருள் நோக்கத்தினால் மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் தாம் திருத்தேரில் எழுந்தருளும் போது மழை பெய்யுமாறு தம்முடைய தேரை சேற்றிலழுந்துமாறு செய்தார். அப்பொழுது "சேந்தா! தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக!" என்றதொரு தெய்வ ஒலி அனைவரும் கேட்குமாறு வானில் ஒலித்தது. சேந்தனார் திருப் பல்லாண்டு பதிகத்தைப் பாடினார். திருத்தேரும் வடம் பிடிக்காமலேயே தானே அசைந்து ஓடி, நிலையினை அடைந்தது.

சேந்தனார், பொன்னம்பலத்து நடராசப் பெருமானின் பேரருளால் சேற்றில் அழுந்தியிருக்கும் தேர் கோயிலை வலம் வந்து நிலையினை அடையவேண்டும் என்கிறார். இவரது பதிகம் பயனை எதிர்நோக்கிப் பாடியதாகும். திருமாலின் திருவருளால், தான் பரத்துவத்தை நிலைநாட்டியதும், தன்னையும் ஒரு பொருளாகக் கருதித் தனக்குப் பெரிய பிராட்டியாருடன் காட்சி தந்தருளிய பயனை எய்திய பிறகு விட்டுசித்தர் பாடியருளியது அவரது பாசுரங்களாகும். சேந்தனார் திருப்பல்லாண்டில் இறைவனின் திருவருள் வானில் அசரீரியாக வடிவு கொண்டது. பெரியாழ்வார் பாடல்களில் எம்பெருமானின் திருவருள் அவருடைய திவ்விய மங்களத் திருமேனியுடன் காட்சி அளித்தது. எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும்

இறைவன் அடியார்க்கு எளியன் என்பது இரு சமயத்தார்க்கும் பொதுவான கருத்தாகும். விட்டுணுசித்தர்,

''அடியோ மோடும்நின் னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு''

என்று பாடிக் களிக்கின்றார். அவ்வாறே சேந்தனாரும்,

''அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோ முக்கருள் புரிந்து
பின்னைப்பிறவி யறுக்க நெறிதந்த
பித்தர்க்குப் பல்லாண்டு கூறுதுமே''

என்று பாடி மகிழ்கிறார். இரண்டிலும் அடியோமுக்கு என்ற சொல் தம்மையும் தம்முடனிருக்கும் அடியார்களையும் குறித்து நிற்பதைக் காணலாம்

'அன்னநடை மடவாள் உமைகோன்' என்ற சொற்றொடரில் சேந்தனார் அன்னையை நினைந்து போற்றுதலைக் காண்கிறோம்.

பெரியாழ்வாரும்,

''வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு''

என்று பெரிய பிராட்டியாரை மறவாது புகழ்தலைக் காணலாம்.

உபதேச ரத்தின மாலையில் மணவாள மாமுனிகளும்
''மங்களா சாசனத்தில் மற்றுள்ள வாழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றிப்-பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வா ரென்னும் பெயர்''

என்று கூறுகிறார். மேலும்,

''உண்டோ திருப்பல்லாண்டுக் கொப்பதோர் கலைதான்
உண்டோ பெரியாழ்வார்க் கொப்பொருவர்-தண்டமிழ்நூல்
செய்தருளு மாழ்வார்கள் தம்மில்அவர் செய்கலையில்
பைதல்நெஞ்சே நீயுணர்ந்து பார்''

என்று பட்டர்பிரானை வியந்து பாராட்டுகிறார் அவர்.

**விட்டுணுசித்தன்**

விட்டுணுசித்தன் என்பதற்குத் திருமாலை நீங்காது தன் உள்ளத்தே வைத்திருப்பவர் என்று பொருளாகும். ஆழ்வார்கள் அனைவரும் அத்தன்மையராயினும் அவர்களில் பெரியாழ்வாருக்குத் தனிச் சிறப்புண்டு. திவ்விய ஆத்மகுணங்களில் சிறப்புடையவராகத் திகழ்பவன் கருடன். அக்கருடன் திருநாராயணனையும் பெரிய பிராட்டியாரையும் விட்டு என்றும் நீங்கா இயல்பினன். பெரியாழ்வார் அக் கருடாம்சமாய்த் தோன்றியவராதலின் அவருடைய சித்தத்து நாராயணனையன்றி வேறொருவரின் நினைவில்லை என்பது பெறப்படும். நாராயணனே தம் மனத்து வந்து புகுந்த நிலையை,

> "அரவத் தமளியி னோடும்
> அழகிய பாற்கட லோடும்
> அரவிந்தப் பாவையும் தானும்
> அகம்படி வந்து புகுந்து' (பெரியாழ். திரு. 452)

எனக் குறிக்கின்றார். மேலும்,

> "மனக்கடலில் வாழவல்ல
> மாயமணாள நம்பீ" (பெரியாழ். திரு. 471)

என்றும் பாடுகிறார். இவற்றால் விட்டுணுவைச் சித்தத்தில் நீங்காது வைத்திருப்பவர் இவரென்பது விளங்குகிறது. விட்டுணுசித்தன் என்னும் பெயரின் பொருத்தமும் புலப்படுகிறது.

**பட்டர்பிரான்**

பட்டர்பிரான் என்பது பெரியாழ்வாரின் மற்றொரு திருப்பெயர். இதனை,

> "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தா
> னென்று"

எனத் திருப்பல்லாண்டுத் தனியன் கூறுகிறது. (தனியன் 3)

ஆழ்வார்,

"பாரார் தொல்புக ழான்புது
வைமன்னன்" (பெரியாழ் திரு. 151)
"பண்பகர் வில்லிபுத் தூர்க்கோன்" ( ,, 191)
"பொன்திகழ் மாடம் பொலிந்துதோன்
றும்புது வைக்கோன் விட்டுசித்தன்" ( ,, 462)

என்று தம்மைப் பலவாறு கூறிக்கொள்ளும் தன்மையும் அறிகிறோம்.

'பட்டர்பிரான்' என்பது பாண்டியனால் தரப்பெற்ற சிறப்புப் பெயர். 'புதுவை மன்னன்', 'வில்லிபுத்தூர்க்கோன்' என்பன ஊரால் வந்த பெயர்கள்.

**பெரியாழ்வார்—பெயர்க்காரணம்**

வைணவ மரபில் 'பெரிய' என்ற அடைமொழி மிகவும் சிறப்புடையது. இச்சொல்லைப் பூருவாசாரியர்கள் எடுத்து ஆண்டிருக்கின்ற பெற்றி உய்த்துணர்ந்து இன்புறத்தக்கது. பெரியாழ்வார், பெரிய உடையார், பெரிய முதலியார், பெரிய திருமொழி, பெரிய திருமந்திரம், பெரிய கோயில் என்று இப்படி ஒவ்வோரிடத்திலும் இவ்வடைமொழியின் சொல் லாட்சி நுட்பம் பொருந்தியதாய் அமைந்துள்ளது. 'பெரிய' என்ற அடைமொழியைப் பொங்கும் பரிவு மிக்கிருக்குமிடத்தே வழங்கியுள்ளதைக் காணலாம்.

மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னே தோன்றி, நற் றமிழால் நூல்செய்து, நாட்டை உய்வித்த முதலாழ்வார்களும் 'பெரிய' என்ற அடைமொழியைப் பெற்றாரில்லை. நூல் அளவாலும், நூல் வகையாலும் அதிக பிரபந்தங்கள் அருளிச் செய்த திருமங்கையாழ்வாரின் நூல் 'பெரிய' என்ற அடை மொழி பெற்றுப் 'பெரிய திருமொழி' என அழைக்கப்படு கிறது. பிரபன்ன ஜனகூடஸ்தராய் ஆழ்வார்களையெல்லாம் அவயவங்களாய்த் தான் அவயவியாய் உள்ள பரம ஆசாரிய ரான நம்மாழ்வாருக்கும் இவ்வடைமொழி இட்டு வழங்க வில்லை. ஆயினும் இவ்வடைமொழியைப் 'பொங்கும் பரிவு'

சிறப்பிற்கே விசேடமாக இட்டு அது உடையோரை இவ்விசேடணத்தால் அழைத்திருக்கின்றனர்.

ஆழ்வார்கள் அனைவரும் மங்களாசாசனம் செய்தவர்கள். என்றோ நடந்த எம்பெருமானுடைய வீர விளையாடல்களுக்குத் தோற்று, நெக்குருகி, நிலைகுலையப்பெற்று என்றோ நிகழ்ந்த நிகழ்ச்சிதானே என்று ஆறியிருக்கயில்லாதே வயிறுபிடித்து மங்களாசாசனம் செய்வது இவர்களுக்கே உரிய பண்பாகும். இப்பண்பில் மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் பேரன்பு மிகுதியால் எல்லாம் வல்ல பெருமானுக்கே மங்களாசாசனம் செய்த பெருமை விஷ்ணுசித்தர் என்ற வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரானுக்கே உரியதாகும். ஆகையால் இவர் 'பெரியாழ்வார்' எனப்பட்டார்.

மக்கள் தீய வழியில் செல்லாது அவர்களை உய்விக்க இனிய தெளிய வியாக்கியானங்கள் எழுதிய பெருமையால் கிருஷ்ண சூரியும், மா முனிகளும், பெரிய வாச்சான் பிள்ளை என்றும் பெரிய ஜீயர் என்றும் முறையே அழைக்கப்பட்டனர்.

இராவணனிடமிருந்து ஜடாயு சீதையைக் காப்பாற்றி அருளினான். அன்று முதல் இராமபிரான் ஜடாயுவைக்கழுகரசன் என்றோ, ஜடாயு என்றோ கூறாது 'என் தந்தை' என்றே கூறுதலைக் காணலாம். இராமபிரான் அவரைத் தன் சிறிய தந்தையாகவே மதித்துப் போற்றி வந்தான். சுவாமியான தந்தையை உடைமையாளர் அல்லது உடையார் என அழைத்தல் மரபு. தந்தை என்பதும் உடையார் என்பதும் ஒரு பொருட் சொற்கள். எனவே சிறிய தந்தையான ஜடாயு 'சிறிய உடையார்' எனப்பட்டார். அவரது பொங்கும் பரிவின் காரணமாகப் பூர்வாசாரியார்கள் 'பெரிய உடையார்' என்றே அழைத்துப் போற்றுகின்றனர்.

மந்திரங்களில் சிறந்தன விஷ்ணு, நாராயணன், வாயு தேவன் என்று கூறப்படும் வியாபக மந்திரங்கள். அவை மூன்றனுள் எட்டெழுத்து மந்திரம் சிறந்தது. இம்மந்திரம் பொருட்சிறப்பாலும் பயனளிக்கும். உயர்வாலும் உயர்கதிக்

கேற்ற ஒரே உபாயமான தன்மைகளாலும் 'பெரிய' என்று அடைமொழி பெற்றுப் பெரிய திருமந்திரம் எனப்படுகிறது.

"காட்டினான் திருவரங்கம்
உய்பவர்க் குய்யும் வண்ணம்" (திருமாலை 881)

என்று இரு ஆறுகளுக்கு இடைப்பட்ட திருவரங்கத்தில் எம்பெருமான் காட்சியளிக்கிறான். பெருமானாகிய இராமபிரானால் வழிபடப்பட்ட பெருமானாகையாலும், தானே சீடனும் ஆசாரியனுமாய்ப் பிறவிப் பெருங்கடல் நீந்தற்குப் பெரிய திருமந்திரத்தை வெளியிட்ட சிறப்பினாலும் 'பெரிய' என்ற அடைமொழி பெற்றுப் பெரிய பெருமாள் என்று அழைக்கப்படுகிறார்.

ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அழிந்து போகின்ற மக்களின் வாழ்விற்காக இசை கட்டியும், தாளம் வழங்கியும் தாரணியோர்க்களித்த பொங்கும் பரிவே நாதமுனிகளுக்குப் பெரிய முதலியார் என்ற பெயரைத் தந்தது. 'பெரிய' என்பது தன்னளி பற்றியும், முதலியார் என்பது குருபரம்பரை முதல்வன் என்பது பற்றியுமாம்.

தன்னை அடைந்தவர்களைக் காக்கும் பரிவினால் கைங்கரியத்தில் தலைசிறந்த கருடன் பெரிய திருவடி எனப்படுகிறான். சொல்லாற்றலறிந்து இவ்வாறு உரிய இடத்தே உரிய பொருளில் 'பெரிய' என்னும் இவ்வடைமொழியை அழகுபடக் கூறியிருக்கும் அழகு பூர்வாசாரியர்களுக்கே உரியதாகும்.

இத்தகைய சிறப்புகளைக் கருதியே எல்லாம் வல்ல பெருமானுக்கே மங்களாசாசனம் செய்த பட்டர்பிரானுக்குப் பெரியாழ்வார் என்னும் சிறப்புப்பெயர் உண்டாயிற்று

இயற்பெயராய் அமைந்தது விஷ்ணுசித்தன் என்பது; பாண்டிய மன்னனால் தரப்பெற்ற சிறப்புப் பெயராய் அமைந்தது பட்டர்பிரான் என்பது; மேற்கூறியவாறு பொங்கும் பரிவாலும் பிற சிறப்புக்களாலும் அமைந்தது பெரியாழ்வார் என்பது.

பெரியாழ்வார் தவிர ஏனைய ஆழ்வார்கள் இறைவனிடமும் தங்கள் நலன்குறித்து இறைஞ்சினர். "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்ற நீர்மை இனியாம் உறாமை வேண்டும்"[8அ] என்பது நம்மாழ்வார் வேண்டுகோள். "வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால், பெருந்துயர் இடும்பையில் பிறந்து கூடினேன்"[8ஆ] என்பது திருமங்கை மன்னன் முறையீடு. ஆனால் விட்டுணுசித்தரோ தம் வாழ்ச்சிக்காக இறைவனை வேண்டாமல், அவன் நலனுக்காகப் பல்லாண்டு பாடினார். மற்றைய ஆழ்வார்கள் இறைவனைத் தமக்குப் பாதுகாப்பானதாகக் கருதித் தம் அச்சங்களைப் போக்கிக் கொண்டனர். ஆனால் இவரோ இறைவனைக் குழைச்சரக்காகக் கருதித் தம்மை அவனுக்குப் பாதுகாப்பாக நினைத்து, "கலி அரசோச்சும் இவ்விருள்தரு மாநிலத்தில் அழகு வெள்ளமிடும் மென்மையான பெருமாள் காட்சி தருகிறானே, என்வருமோ?"[9] என்று கலங்கி அந்த அச்சத்தை நீக்கும் முறையில் வயிறுபிடித்துப் பல்லாண்டு பாடினார். 'பெரிய' என்னும் அடைமொழியோடு இப்பரிவால் பெற்ற 'பெரியாழ்வார்' என்னும் பெயரே இவருக்கு நிலைத்து விட்டது.

### திருப்பல்லாண்டின் பெருமை

வேதமும் இதிகாசப் புராணங்களும் போலன்றித் திருப்பல்லாண்டு அனைவராலும் ஓதுதற்குரியது. நம்மாழ்வார் திருமொழியோ ஓதுதற் குரியதெனினும் அருமைப்பாடு உடையது; அவ்வருமைப்பாடும் இந்நூலுக்கு இல்லை. இது மகாபாரதம் போலே பெரும்பரப்பு உடையதாக அமையாமல் ஓம் என்னும் பிரணவ மந்திரம் போலஅமைந்து, எல்லா வேதப்பொருளும் நிறைந்து அப்பொருளைத் தேட வேண்டிவரும் குறையுமின்றிப் பன்னிரண்டு பாட்டாய் அமைந்து உயர்ந்த பேறாகிய கடவுள் தொண்டினை எடுத்து மொழிகிறது. தன்னைப் பேசுறுபவன் கையில்பரம் பொருளையே கைப்படுத்தும் ஆற்றல் உடையது என்று அதன் பெருமையைப் பேசுகிறார் பெரியவாச்சான் பிள்ளை.[10]

**வழிவழி ஆட்செயல்**

பெரியாழ்வார் நந்தவனம் அமைத்துப் பெருமானுக்கு மலர் மாலை பணித்து வந்தனர் என்பதும், சிவில்லிபுத்தூர்க் கோயில் மரியாதைகளைப் பெற்ற பெரியார் என்பதும் இவர் பாடிய,

"நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும்
அத்தாணிச் சேவகமும்,
கையடைக் காயும் கழுத்துக்குப் பூணொடு
காதுக்குக் குண்டலமும்,
மெய்யிடை நல்லதோர் சாந்தமும் தந்தென்னை
வெள்ளுயி ராக்கவல்ல
பையுடை நாகப் பகைக்கொடியான்"[11]

என்ற திருப்பல்லாண்டினாலும்,

"தோட்டம் இல்லவள் ஆத்தொழு ஓடை
துடவை யும்கிண றுமிவை யெல்லாம்,
வாட்ட மின்றியுன் பொன்னடிக் கீழே
வளைப்ப கம்வகுத் துக்கொண் டிருந்தேன்"[12]

என்ற பெரியாழ்வார் திருமொழியினாலும் தெளியலாம்,

திருவில்லிபுத்தூரில் ஏழு தலைமுறையாகப் பழிப்பில்லாத பாகவதர்களாக இவர் குடும்பத்தினர் வாழ்ந்து வந்தார்கள் என்று இவர் பாசுரங்களிலிருந்து, தெரிய வருகிறது. இதனை,

"ஏழாட் காலும் பழிப்பிலோம் நாங்கள்"[13]

என்று இவர் கூறுவதால் அறியலாம். மேலும் இவர்,

"எந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன்
ஏழ்படி கால்தொடங்கி,
வந்து வழிவழி ஆட்செய்கின் றோம்"[14]

என்றும் கூறியுள்ளார்.

**செல்வநம்பி**

இவ்வாறிருக்கும் நாளில் திருக்கோட்டியூரில் வாழும் செல்வநம்பியின் நட்பு பெரியாழ்வாருக்குக் கிடைத்தது. பாண்டியன் பெரியாழ்வாரின் சீடனாவதற்கும், பெரியாழ்வார் கிழியறுத்துத் திருப்பல்லாண்டு பாடியதற்கும் செல்வநம்பி ஒரு முக்கிய காரணமாக விளங்கினார் என்று குருபரம்பரைக் கதைகள் கூறுகின்றன.[14] அ இந்தச் செல்வநம்பியைப் பெரியாழ்வார் தம் திருப்பல்லாண்டுப் பதிகத்தில்,

"அல்வழக் கொன்றுமில் லாவணி கோட்டியர்
கோன், அபி மானதுங்கன்,
செல்வனைப் போலத் திருமா லே! நானும்
உனக்குப் பழவடியேன்"[15]

என்று குறிப்பிடுகிறார், இதனால் நீதியின் நிலைக்களனாகத் திகழ்ந்தவர் செல்வநம்பி என்பது அறியப்படுகிறது. ஏழு தலைமுறையாகத் தம்மைத் திருமாலின் அடியார் என்று அறிவிக்கும் பெரியாழ்வார், செல்வநம்பியைப் போலத் தம்மையும் திருமாலின் பழவடியாராக அறிவித்துக் கொள்வதைக் காணலாம்.

செல்வ நம்பியை 'அபிமானதுங்கன்' என்று குறிப்பிடுவதிலிருந்து பெரியாழ்வாரும் செல்வநம்பியும் பாகவத அபிமானம் என்ற அன்புத் தளையால் பிணைக்கப்பெற்ற ஒரு கூட்டத்தைச் சேர்ந்த உயிரனைய அன்பர்கள் என்பது அறியக் கிடக்கின்றது.

திருக்கோட்டியூர்ப் பதிகத்திலும்,

"நளிர்ந்த சீலன் நயாசலன் அபி
மானதுங்கனை நாடொறும்
தெளிந்த செல்வனைச் சேவகங்கொண்ட
செங்கண்மால்திருக் கோட்டியூர்"[16]

என்று செல்வநம்பியைப் பற்றிய ஒரு குறிப்பு வருகிறது. திருப்புல்லாண்டுப் பதிகத்தில் கூறியபடி 'அல்வழக்கு' (அநியாய

வழக்கு) ஒன்றும் இல்லாத செல்வநம்பியை 'நயாசவன்' என்று குறிப்பிட்டு நீதிக்கோர் சிகரமாகக் காட்டுகிறார். 'அபிமான துங்கன்' என்ற சொற்றொடர் மேற்கூறிய இவ்விரண்டிடங் களில் வருவதிலிருந்து இவ்விரு பெரியோர்களின் பெருநட்பும் இவர்களுடைய பொதுநோக்கும் உறுதிப்படுகின்றன.

**பெரும்பேறு**

இவ்விதமாகத் தொண்டில் ஈடுபட்டிருந்த ஆழ்வார் ஒரு நாள் திருத்துழாய்ச் செடியினிடையே கண்வளரும் மண் மகளின் அம்சமான குழந்தையைக் கண்டெடுத்து வளர்த்து அதற்கு வளர்ப்புத் தந்தையானார். அக் குழந்தையைப் பக்திப் பாலூட்டி வளர்த்து, இறைவன் திருவருளின்படி அவள் சூடிய பாமாலையே அவருக்கு அணிவிக்கக் கொடுத்தும், திருவரங் கனிடம் அழைத்துச் சென்று விடுத்தும் அரங்கனார்க்கே மாமனாராகிப் பிறர் பெறாத பெரும்பேறு பெற்றார்.

**பிரபத்தி நிலை**

பெரியாழ்வார் அருளிச் செயல்களை நோக்குமிடத்துத் திருமால் அவதாரங்களிலே சிறப்பாகக் கண்ணன் தோற்றம் முதல் நிகழ்ந்த இளமை வரலாற்றினை அப்பெருமானை எடுத்து வளர்த்த யசோதைப் பிராட்டியார் நடையனவும் கோபி யருடையவுமான பேச்சுகளால் மொழிந்து படும் அழகினைக் காணலாம். இவர் கண்ணன்பால் கொண்டிருந்த ஈடுபாடுகளை யன்றித் திருமழிசையாழ்வார், திருமங்கை மன்னன் முதலிய ஆழ்வார்கள் வாக்கிற் போலத் தம் காலத்திலிருந்த பிற சமயங் களைப் பற்றிய யாதொரு குறிப்பும் இவர் திருவாக்கு களினின்றும் அறியக் கூடவில்லை. பாண்டியன் முன் சமய வாதம் செய்து வெற்றி பெற்றவராகக் கூறப்படும் இவ் வாழ்வார் தம் காலத்தில் திருமாலடியாராக விளங்கிய பாண்டிய னொருவனைச் சிறப்பிப்பது தவிர வேறு உலக நிலைமையொன்றையும் குறிப்பிடவில்லை. அவ்வாறு குறிப்பிடாததற்கு அவ்வரசனை அடிமையாக்கி அவனால் பெற்ற பெரும்பொருளைத் திருமால் தொண்டிற்குச் செலவிட்டு உலகப் பற்றின்றிப் பிரபத்தி நிலையில் முனைந்து நின்றதே காரணமாய் இருத்தல் வேண்டும்.

**கண்ணன் பெருமை**

பெரியாழ்வார் திருமொழியில் கண்ணபெருமான் சிறப்பே மேலோங்கி நிற்கிறது. கிருட்டிணாவதாரம் ஏனைய அவதாரங்கள் போலன்றிச் சமகாலத்திய அவதாரம்; இராமாவதாரத்தில் தந்தையோ சம்பராசுரனை அழித்த மாவீரன்; பிள்ளைகளோ ஆண்புலிகள்; குடியோ பகையேதுமற்ற குடி. இவையெல்லாம் மிகையாம்படி குணத்தாலே நாட்டையெல்லாம் ஒரு மார் வெழுத்தாக்கி அடிமையாக்கி—கொண்டிருப்பார்கள்; ஆகையால் பகைவர்கள் என்ற பேச்சுக்கே இடமில்லை. இங்கு, அங்ஙனமின்றிக்கே, தகப்பன் மிக மென்மையானவன்; பிறந்ததோ கம்சன் சிறையில்; வளர்ந்ததும் அவன் அகத்தருகே; பிருந்தாவனத்தில் எழும் பூண்டுகள் அகப்பட அனைத்தும் கொடியதாயிருக்கும். பாதுகாப்பவர்கள் பாம்பின் வாயில் விழும்படியாய் இருப்பது கண்ணன் தன்மை—இவ்வாறு இராமாவதாரத்திற்கும் கிருட்டிணாவதாரத்திற்கும் வேறுபாடு காட்டிக் கிருட்டிணனின் நீர்மை விளக்கப்படுகின்றது.[11]

**பெரியாழ்வார் திருமொழி**

பெரியாழ்வார் இயற்றியன 'பெரியாழ்வார் திருமொழி' என வழங்கப்பட்டு நாலாயிரப் பிரபந்தத்தில் முதலாயிரத்தில் சேர்க்கப்பட்டுள்ளது.

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளிந்து வளர்கின்றான் கண்ணன். தேவகி வசுதேவருக்கு மகனாய்ப் பிறந்த அவன் நந்தகோபன் இல்லத்தில் யசோதைச் செல்வனாக வளர்கின்றான். கண்ணனைச் சீராட்டிப் பாராட்டும்பேறு யசோதைக்குக் கிடைக்கிறது. கோகுலத்தில் கண்ணன் குழந்தையாக வளர்ந்த காட்சிகளைப் பெரியாழ்வார் தம் பாசுரங்களின் மூலம் நமக்கு அளித்து நம்மையும் பெரு மகிழ்ச்சி கொள்ளச் செய்கிறார்.

கோபியர் ஆய்ப்பாடியிலே நந்தகோபனுக்கும் யசோதைக்கும் ஆண்மகவு பிறந்தது கேட்டு மகிழ்ச்சி

வெள்ளத்தில் திளைக்கின்றனர். அறிவிழந்து இன்னது செய்கிறோமென்று அறியாது செயல்படத் தொடங்குவதை,

"ஓடு வார்விழு வாருகந் தாலிப்பார்
நாடு வார்நம்பி ரானெங்குற் றானென்பார்
பாடு வார்களும் பல்பறை கொட்டநின்று
ஆடு வார்களு மாயிற்றாய்ப் பாடியே"[18]

"உறியை முற்றத் துருட்டிநின் றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்
செறிமென் கூந்த லவிழத் திளைத்தெங்கும்
அறிவ ழிந்தன ராய்ப்பாடி யாயரே"[19]

என்று உணர்த்துகிறார்.

குழந்தையின் 'காட்சி இன்பம்' பெரியாழ்வாரை அழுந்தி அனுபவிக்கச் செய்வதனை,

"நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்துநீ ராட்டுமிந் நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே
மொய்குழ லீர்வந்து காணீரே"[20]

என்ற பாசுரத்தால் அறியலாம்.

குழந்தைக் கண்ணனை ஆய்ச்சியர்கட்குக் காட்ட விரும்பிய யசோதைப் பிராட்டியைப் போலத் தம்மைக் கற்பனை செய்துகொண்டு குழந்தையின் மேனி அழகைத் திருவடி முதல் முடிவரை (பாதாதிகேசம்) அனுபவிப்பதனை,

"பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே"[21]

"பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட் டிருந்தவா காணீரே"[22]

"கணைக்கா லிருந்தவா காணீரே"[23]

"முழந்தா ளிருந்தவா காணீரே"[24]

"குறங்கு களைவந்து காணீரே"[25]

"அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய அச்சுதன்
முத்த மிருந்தவா காணீரே"[26]

"நெருங்கு பவளமும் நேர்நாணும் முத்தும்,
மருங்கு மிருந்தவா காணீரே"

"உதர மிருந்தவா காணீரே"[28]

"குருமா மணிப்பூண் குலாவித் திகழும்
திருமார் பிருந்தவா காணீரே"[29]

"தோள்க ளிருந்தவா காணீரே"[30]

"செந்தொண்டை வாய்வந்து காணீரே"[31]

"கண்க ளிருந்தவா காணீரே"[32]

என்று பேரின்பக் காட்சியாகக் காட்டுகிறார்.

திருமால் அழகின் பிழம்பாகக் காட்சியளிக்கிறான். அவன் கண்களின் வனப்பை வருணிக்க முடியாமல் பலர் ஓர் இன்பத் தடுமாற்றம் அடைந்திருக்கின்றனர். யசோதையின் தன்மையை யேற்ற பெரியாழ்வாரும் குழந்தைக் கண்ணனின் கண்களின் பேரழகினை,

"கண்க ளிருந்தவா காணீரே
கனவளை யீர்வந்து காணீரே"[33]

என்று அறைகூவி அழைக்கிறார். ஆண்டாளும் தம் திருப் பாவையில்,

"செங்கண் சிறுச்சிறிதே யெம்மேல் விழியாவோ
திங்களு மாதித் தியனு மெழுந்தாற்போல்"[34]

என்று வினவுகிறாள்.

திருப்பாணாழ்வார் அரங்கநாதனின் கண்களின் பேரழகில் ஈடுபட்டு,

"கரிய வாகிப் புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரி யோடி நீண்டவப்
பெரிய வாயகண்க ளென்னைப் பேதைமை
செய்தனவே"[35]

என்று அருளிச்செய்கிறார். குலசேகரரும் தேவகியின் தன்மையில் புலம்புங்கால்,

"அம்புயந்தடங் கண்ணினன் தாலோ"[30]

என்று தாலாட்டித் தான் கண்ணனை வளர்க்கமுடியாமற் போன வருத்தத்தை மறக்க முயல்கிறார். பரகால நாயகியும் பெருமானின் வனப்பை வருணிக்கப் புகுந்து,

"கைவண்ணம் தாமரைவாய் கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே"[31]

என்று பாடுவானாயினாள். நம்மாழ்வாரும் பல பாசுரங்களில் திருமாலின் கண்களின் இணையற்ற பேரழகை அனுபவிப்பாராகி,

"என்செய்ய தாமரைக்கண் பெருமானார்"[32]

என்றும்,

"தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும்
தலைமகனை"[33]

என்றும் பாடி இன்புறுகிறார்.

ஒரு சமயம் யசோதை வெண்ணெய் அளைந்த குணுங்கும் விளையாடு புழுதியும் போக நீராட்டுங் காலத்து நாக்கை வழிக்க அவனது வாயைத் திறந்தாள். அப்போது ஏழுலகங்களும் குழந்தையின் வாய்க்குள் அடங்கியிருப்பதைக் கண்டாள் தாய். இதனைக் கண்ட கோபியர்,

"ஆயர் புத்திர னல்ல னருந் தெய்வம்
பாய சீருடைப் பண்புடைப் பாலகன்"[34]

என்று மகிழ்ந்தனர்.

**கண்ணனின் நட்சத்திரம்**

கண்ணன் பிறந்தது ரோகிணி நட்சத்திரத்தில் என்பது அனைவரும் அறிந்ததாகும். இவ்வவதாரத்தில் பெரிதும் ஈடு

பட்டவரான பெரியாழ்வார் கண்ணன் திருவோணத்தில் பிறந்ததாகப் பலவிடங்களில் அருளிச் செய்கிறார். இதனை,

"அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய அச்சுதன்"[41]

என்றும்,

"நின்ற மராமரம் சாய்த்தாய்
நீபிறந் ததிரு வோணம்
இன்றுநீ நீராட வேண்டும்"[42]

என்றும்,

"திண்ணார் வெண்சங் குடையார் திருநாள்
திருவோண மின்றேழா நாள்"[43]

என்றும் அவர் அருளிச்செய்த பாசுரங்களால் அறியலாம்.

"அழகியசிங்கர் அவதரித்தது சுவாதி நட்சத்திரமாயிருக்கச் செய்தேயும் 'திருவோணத் திருவிழவில் அந்தியம் போதி லரியுருவாகி'[44] என்று அவரையும் திருவோணத்தில் அவதரித்தவராகப் பெரியாழ்வார் அருளிச் செய்துள்ளார். இவற்றையெல்லாம் ஆராயுமிடத்து 'வேதப் பயன் கொள்ள வல்ல விட்டுசித்தன்' எனப்பட்ட இவ்வாழ்வார் வேதத்தை யடியொற்றி அருளிச் செய்கிறாரென்பது தெரியவரும். அப்பெருமான் எந்த நட்சத்திரத்தில் அவதரித்தாலும் அது திருவோணத்தின் அம்சம் பொருந்தியதாகவே இருக்கும் என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம். ஆகவே 'நீபிறந்த திருவோணம்' என்று கண்ணனை நோக்கிக் கூறியதும் 'திருவோணத் திருவிழாவில் அரியுருவாகி' என்று நரசிம்ம மூர்த்தியைப் பற்றிப் பேசியதும் பொருந்துவதே யாகும்"[45] என்று கண்ணன் பிறந்த நட்சத்திரம் குறித்து விளக்கம் தருவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்க ராசாரியர் சுவாமிகள்.

**தாய்ச் சொற் கேட்டல்**

'தந்தை தாயர் சொற்பேணுதல்' என்ற நற்குணம் இராம பிரானுக்கே உரியது என்று கருதுவாருளர். ஆனால் பெரியாழ்வார்,

"தாயர்வாய்ச்சொல் கருமங்கண்டாய்
சாற்றிச் சொன்னேன் போகவேண்டா"[46]

என்றும்,

'தாய்சொல்லுக் கொள்வது தன்மம் கண்டாய்
தாமோதரா! இங்கே போத ராயே"[47]

என்றும் அருளிச் செய்வதனால் தாயர் வாய்ச்சொல் கேளாதவன் கண்ணன் என்று கூறுவாருமுளர். இங்கு நம் ஆசாரியர்கள் தத்துவமுணர்த்துகிறபடி யென்னெனில், இராம பிரான் தாய் தந்தையர் சொற் பேணியது வயது முதிர்ந்த பின்னராகும். ஆனால் கண்ணபிரான் பிறந்த அன்றே "இந்தத் திருவாழித் திருச்சங்குகளை மறைத்துக் கொள் பிரானே" என்று வசுதேவ தேவகிகள் வேண்டியவுடனே அல்வாறே மறைத்துக் கொண்டான் என்பதாகும்.

**கண்ணன்-இராமன் இளமை**

அயோத்தி மாநகரில் அவதரித்த இராமபிரானுடைய வரலாற்றைப் பன்னிரண்டாண்டளவும் நாம் ஒன்றும் அறிய முடியவில்லை. விசுவாமித்திர முனிவரது வேள்வி காத்தது முதலாகவே இராமனது வரலாறு இராமாயணத்தில் ஆரம்ப மாகின்றது. அப்போது இராமனுக்கு வயது பன்னிரண்டாகும். அதற்கு முந்திய வரலாறு கிடைக்கப் பெறவில்லை. ஆனால் கண்ணபிரான் வரலாறு, பிறந்த அன்றே, தொடங்கிப் பன்னிரண்டு ஆண்டளவும் பேரின்பமும் இன்சுவையும் வடிவெடுத்த நிகழ்ச்சிகளாகக் காட்சியளிக்கிறது. கண்ணனை இங்கு அன்பு செலுத்துவதற்கு என ஆழ்வார்களுக்கு இருந்த ஒரு பெரும் வாய்ப்பு, அவன் தேவகி மகனாய்ப் பிறந்து யசோதையின் மகனாக ஆயர்பாடியில் வளர்ந்து இளமையில் நிகழ்த்திய தெய்வக் குறும்பு பற்றிய சரிதையேயாகும். பெரியாழ்வார் இச்சரிதையில் பெரிதும் ஈடுபட்டே பாடு கிறார். இவர் அளவிற்குக் கண்ணனின் தெய்வக் குறும்பில் ஈடு பட்ட ஆழ்வார் இல்லை எனலாம். ஆண்டாள் தன்னுடைய திருப்பாவைக்குக் கண்ணனுடைய கதைகளை இலக்காகக் கொண்டிலனென்றால்,

"கோதைதமிழ் ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதூஉம் வம்பு"[11]

என்னும்படியான ஏற்றம் அதற்கு ஏற்பட்டிராது எனலாம்.

**பதிகம்—பத்து:**

பெரியாழ்வார் இயற்றிய பிரபந்தங்கள் திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி ஆகிய நானூற்று எழுபத்துமூன்று பாசுரங்கள் அடங்கியதாகும்.

திவ்வியப் பிரபந்தத்தில் 'பத்து' என்ற பிரிவு, இருக்கு வேதத்தில் மண்டலங்களின் உட்பிரிவுகள் வகுக்கப்பெற்றுள்ள மரபினை ஒட்டியதாகும். அந்த உட்பிரிவுகள் 'ஸூக்தம்' என வழங்கப் பெறுகின்றன. அத்தகைய ஸூக்தம் போன்றதே தமிழில் திருமொழி என வழங்கப்பெறுவது.

சங்க இலக்கியத்தே 'பத்து' என்னும் ஒரு பாட்டு நெறி முகிழ்த்தது. அப்பொழுதே பத்துப் பாடல்களாகப் பாடும் வளர்ச்சியும் காணப்பட்டது. ஒருபொருள் மேல் மூன்றடுக்கியதே பத்தடுக்கிய நிலைக்குக் கொண்டு சென்றிருக்கலாம். பத்துக்களாகப்பாடுவது பத்துப்பத்துகளாகப் பாடும் மரபிற்கு இட்டுச் சென்றது. பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு இதன் வளர்ச்சியே ஆகும். பதிற்றுப் பத்து என்பது பத்து பத்துகள் கொண்ட புறப்பாடல் தொகை. ஐங்குறுநூறு ஐந்து நூறாக ஐந்திணை பற்றித் தொகுக்கப் படினும், ஒவ்வொரு நூறும் பத்துப்பத்துகளாக அமைந்த அகப்பொருள் இலக்கியமாகும்.

பத்துப் பாடல்களால் வருவது 'பதிகம்' என்றும் கூறப்படும். 'பதிகம்' என்ற அமைப்பு முதன்முதலாகப் பதிற்றுப்பத்தில் உள்ளது. ஆனால் ஒவ்வொரு பத்துப்பாடல்களின் பின்னர்த் தொகுப்புப் பின்னுரையாக இப்பதிகம் அமைக்கப்பட்டுள்ளது. ஆயினும் இப்பத்துப் பாடல்களின் தொகுதியைக் குறிப்பாகப் பொருள்கொள்ளும் வகையில் இப் பதிற்றுப்பத்தின் பதிகம் அமையவில்லை. பதிற்றுப்பத்தின் பதிகத்தில் ஒவ்வொருபத்தின் பாட்டுடைத் தலைவன் இன்ன வேந்தன் என்றும்,

அவன் ஆற்றிய அருஞ்செயல்கள் இன்னவை என்றும் கூறப்படு கின்றன. கி. பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து பதிகம் என்ற சொல்லுக்குப் பத்துப் பாடல்களின் தொகுதி என்னும் பொருள் தோன்றத் தொடங்கியமையால் அதற்கு முன் சங்க மருவிய காலத்தில் பதிற்றுப்பத்தின் பதிகங்கள் தோன்றியிருக்க வேண்டும் எனக் கருதலாம்.[48]அ சங்க இலக் கியங்களில் பத்துப் பாடல்கள் கொண்ட தொகுதி 'பத்து' என்றே அழைக்கப்பட் டதனை அவற்றால் அறிகிறோம்.

பதிகம் என்ற சொல்லுக்குத் தொகுப்புரை என்னும் பொருள் வழக்கு சங்க மருவிய காலத்திலும் தொடரப் பெற்றதை இரட்டைக் காப்பியங்களாகிய சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களின் பதிகங்களாலும் அறிகிறோம். பாடல்களின் இறுதியில் தொகுப்புப் பின்னுரையாக அமைந்த பதிற்றுப்பத்து மரபு இக்காப்பியங்களின் தொகுப்பு முன்னுரை யாக மாற்றம் பெற்றுள்ளதை உணரலாம்.

பதிகம் என்னும் வகையில் முதல் நூலாக விளங்குவது காரைக்கால் அம்மையாரின் 'திருவாலங்காட்டு மூத்த திருப் பதிகம்' ஆகும். இதில் திருக்கடைக்காப்பையும் சேர்த்துப் பதினொரு பாடல்கள் உள்ளன. திருக்கடைக்காப்புச் செய்யுளை நீக்கி எஞ்சியுள்ள பத்துப்பாடல்களைப் 'பதிகம்' என்ற இலக்கிய வகையால் குறிப்பிடுகின்றனர்.[48]ஆ

காரைக்காலம்மையார் காலத்திற்குப் பின்னர் தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறை இலக்கியங்களில் பத்துப் பாடல்களைப் பதிகம் எனக் கூறும் வழக்காறு தொடர லாயிற்று.

திருவாசகத்தில் கோயில் மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம், திருக்கழுக்குன்றப் பதிகம், திருப்பாண்டிப் பதிகம், எண்ணப் பதிகம், அச்சோப்பதிகம் ஆகிய பதிகஇலக் கியங்கள் அமைந்துள்ளன.

ஆகவே சங்க காலம் முதற்கொண்டு 'பத்து' என்னும் எண்ணிக்கை அளவோடு பாடல்களை அமைக்கும் ஒரு பாட்டு

நெறிஉருவாகிப் 'பதிகம்' முதலான பல வகைகளில் வளர்ந்தது.

பக்தி இலக்கியங்களும், நீதிநூல்களும் இந்தப் பத்து என்னும் பிரிவு அடிப்படையில் அமைந்தன.

ஆழ்வார்களும் 'பத்து' என்னும் பாட்டுநெறியைப் போற்றினர். அந்த வகையிலேயே பெரியாழ்வாரின் பாசுரங்களும் அமைந்தன. திருமொழிகளின் தொகைகளைக் கொண்டே 'முதல் பத்து', 'இரண்டாம் பத்து' என்று இவ்வாறு வரையறை ஏற்பட்டது என்பது தெளிவு. இதன்படி 'பெரியாழ்வார் திருமொழி'யின் முதற்பத்தில் பத்துத் திருமொழிகள் இருத்தல் வேண்டும். ஆனால் அதில் ஒன்பது திருமொழிகளே காணப்படுகின்றன.

**திருப்பல்லாண்டு தனிநூலா?**

பெரியாழ்வார் திருமொழியின் இறுதிப் பாசுரமான 'வேயர் தங்கள் குலத்துதித்த'[49] என்பதில் 'கோயில் கொண்ட கோவலனை' என்னும் சொற்றொடரை விளக்குமிடத்துத் "திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் மனத்திலிருக்கின்ற கிருஷ்ணன் தான் பிறந்தபடியையும் வளர்ந்தபடியையும் இவரைக்கொண்டு கேட்டான்" என்று பெரியவாச்சான் பிள்ளை கூறியிருப்பதனாலும், இதற்கு முன்னர்த் 'திருப் பல்லாண்டின் அர்த்தத்தை நியமிக்கிறார்' என்று பலமுறை கூறியிருப்பதனாலும் ஒரு பிரபந்தமானால்தான் 'தொடக்கம்' என்பது சேருமாதலானும் இவர் கருத்துப்படி 'திருப் பல்லாண்டு' தனிப்பிரபந்த மன்று.

உபதேச ரத்தின மாலையில்,

"பல்லாண்டு பாடிய நம்பட்டர் பிரான்"[50]

"ஆதி திருப்பல்லாண் டானதுவும்"[51]

"உண்டோ திருப்பல்லாண்டுக் கொப்பதோர் கலை"[52]

என்ற தொடர்களில் வரும் திருப்பல்லாண்டு என்ற தொடர் பாலும், திருக்கோயில்களுள் ஏதாவது ஒரு பிரப்ந்தம் ஓத

நேரிடும் போதெல்லாம் திருப்பல்லாண்டு முதலில் ஓதப்பெற்று அதன் பின்னரே அக்குறிப்பிட்ட பிரபந்தம் ஓதப் பெறுகின்ற வழக்கம் இருப்பதனாலும் அது தனிப் பிரபந்தம் என்பது வலியுறுகின்றது என்பர் மற்றையோர். இக்கருத்தே ஏற்புடையதாக விளங்குகிறது.

**மங்களாசாசனச் சிறப்பு**

ஆழ்வார்கள் பிறரனைவரும் எம்பெருமான் மீதுள்ள ஆராக் காதலால் 'பகவானுக்குக் குறைவொன்று மில்லாமல் இருப்பதே நமக்கு மங்களம்' என்று மங்களாசாசனம் என்பதனைச் செய்திருக்க, இவர் எம்பெருமானுடைய வாழ்வையே தம் வாழ்வாக நினைத்து, சர்வ இரட்சகனையும் இரட்சிக்க வழிதேடித் தருவதுபோல் மங்களாசாசனம் செய்துள்ளார். இதனை,

"சோராத காதல் பெருஞ்சுழிப் பால்தொல்லை
மாலையொன்றும்
பாரா தவனைப்பல் லாண்டென்று காப்பிடும்
பான்மையன்"[53]

என்ற அமுதனாரின் திருவாக்கால் அறியலாம்.

"யாதினும் உயர்ந்தோன் தன்னை யாவர்க்கும்
கண்ணனென்றே
ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி
விட்டான்"[54]

என்பதில் கம்பர் கண்ணன் என்பதற்கு 'யாவர்க்கும் கண் போன்றவன்' என்ற பொருளைப் போற்றுதலைக் காணலாம். பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாகக் கற்பனை செய்து பக்திப் பாடல்கள் பல பாடியுள்ளதைக் காண்கிறோம். கண்ணனுடைய அவதாரத்தில் மகிழ்ந்து கொண்டாடும் கொண்டாட்டம் பத்துப் பாடல்களில் காணப்படுகின்றன. கண்ணனுடைய புல்லாங்குழல் ஊதும் சிறப்பிற்கு ஒரு பதிகம் அருளிச் செய்துள்ளார். ஆநிரை மேய்க்கச் சென்ற இடத்தில் வேய்ங்குழல் எடுத்தூதி அனைத்துயிரையும் பரவசப்படுத்திய

செய்தி இசை இனிமை தோன்றக் காணப்படுகிறது. கண்ணனின் அறம்பிறழா அற்புதச் செயல்களைக் கண்ட யசோதை அவனைக் குழந்தையாகத் தழுவிப் பால்கொடுக்க அஞ்சுவது பற்றி ஒரு பதிகம் பாடியுள்ளார். இவ்வாறு கிருட்டிணாவதாரத்தில் ஈடுபாடு கொண்ட இந்தியாவின் மிகப் பழைய இலக்கியச் செல்வம் பெரியாழ்வாரால் பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் இனிய தமிழ்ப் பாடல்களாகப் படைக்கப் பட்டுள்ளது.

இவரது பாசுரங்களே பிற்காலத்தில் எழுந்த 'பிள்ளைத்தமிழ்' என்ற சிற்றிலக்கிய வகைக்கு வழிகாட்டியாக அமைந்தன எனலாம். பாசுரங்களில் குழந்தையைத் தாலாட்டுதல், அம்புலியை அழைத்தல், செங்கீரை ஆடுமாறு கூறல், சப்பாணி கொட்டுதல், தளர்நடை நடத்தல் முதலியன அமைத்துப் பாசுரங்களை அருளிச் செய்துள்ளார் பெரியாழ்வார்.

கண்ணன் மீது அவர் கொண்டிருந்த அன்பின் பெருக்கே கவிதை வெள்ளமாக வழிந்தோடி உள்ளது எனின் அது மிகை யாகாது.

**கண்ணன் குறும்பு**

கண்ணனாகிய குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்கவும் விளையாட்டுகளைக் காணவும் விரும்பாத உள்ளம் அவனுடைய குறும்புச் செயல்களையும் அதிமானுடச் செயல்களையும் காண விரும்பியதை,

''புள்ளினை வாய்பிளந் திட்டாய்
பொருகரி யின்கொம்பொ சித்தாய்
கள்ள வரக்கியை மூக்கொடு
காவல னைத்தலை கொண்டாய்''[15]

என்றும்,

''எருதுக ளோடு பொருதி
யேதுமு லோபாய்காண் நம்பீ

கருதிய தீமைகள் செய்து
கஞ்சனைக் கால்கொடு பாய்ந்தாய்
தெருவின்கண் தீமைகள் செய்து
சிக்கென மல்லர் களோடு
பொருது வருகின்ற பொன்னே"[56]

என்றும் பலவாறாகப் பாடுவதனால் அறியலாம்.

**பாசுரங்களில் பாரதக்கதை**

ஆழ்வார் தம் பாசுரங்களில் பாரதக்கதை புதிய பொலிவு பெற்றது. பாரதப் பாத்திரங்களில் ஒருவனாகிய கண்ணன் ஆழ்வார் பாசுரங்களில் அவதாரமாகத் தலைமை பெற்றான். அது முதல் பாரதம் கண்ணபிரானின் பெருமை பேசும் காப்பிய மாயிற்று. "மன்னு மாதவன் சரிதம்" இடையிடையே வரு கின்ற காரணத்தினால் பாரதம் பாடியதாக வில்லிபுத்தூராரே குறிப்பிடுகிறார். இப்பற்று ஆழ்வார் பாசுரங்களினால் தோன்றிய விளைவாகும். அதனால்தான் பருவந்தோறும் சருக்கந்தோறும் கண்ணன் வணக்கம் கூறப்படுகின்றது.

கண்ணன் தேரோட்டிய செய்தி பல இடங்களில் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் கூறப்படினும் கீதை உபதேசம் குறிக்கப்படவில்லை. "மகாபாரதத்தில் அர்ச்சு னனுக்குக் கீதையை உபதேசித்தான் என்ற சரித்திரம் உண்டு. இந்தக் கீதை தான் பகவத் கீதை என்று பிரசித்தமாய் விளங்கு வது. இக்கீதையைப் போற்றாத மக்களில்லை. இதைப்பற்றி ஆழ்வார் பாடல்களில் யாதொருகுறிப்பும் கிடையாது என்பது இங்கே மனங்கொள்ளத் தக்கது"[57] என்று பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை கூறுகின்றார்.

பாரதப் போரில் கண்ணன் தூது சென்றதும், பார்த்த னுக்குத் தேர்ப்பாகனாய் அமைந்ததும் அவன் எளிமை காட்டு தலின் ஆழ்வார்களைப் பெரிதும் கவர்ந்தன. முதற் காப்பியப் புலவராகிய இளங்கோவடிகள்,

"திரண்டமரர் தொழுதேத்துந் திருமாலின் செங்கமல
விரண்டடியான் மூவுலகு மிருடீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமோ மருட்கைத்தே"[58]

என்று கண்ணனின் செயலை ஆர்வமுறப் பாடினரெனின் ஆழ்வார்கள் உளங்குளிரப் பாடியதில் வியப்பொன்றுமில்லை.

"பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து"[59]

என்று பெரியாழ்வாரும்.

"...பஞ்ச பாண்டவர்க் காகி
வாயுரை தூதுசென் றியங்கும்
என்றுணை எந்தை தந்தைதம் மானைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே"[60]

என்று திருமங்கை மன்னனும்,

"நாடுடை மன்னர்க்குத் தூதுசெல் நம்பிக்குஎன்
பாடுடை அல்குல் இழந்தது"[61]

என்று நம்மாழ்வாரும் கண்ணன் தூதினைப் பாராட்டிப் பாடுவர்.

கண்ணன் தேர்ப்பாகனாய்ப் பணி செய்தமையை,

"தேரொக்க வூர்ந்தாய் செழுந்தார் விசயற்காய்"[62]

என்று பெரியாழ்வாரும்,

"தேரேறு சாரதியா யெதிர்ந்தார் சேனை
செருக்களத்துத் திறலழியச் செற்றான்"[63]

என்று திருமங்கை ஆழ்வாரும்,

"போர்ப்பாகு தான்செய்தன் றைவரை வெல்வித்த
மாயப்போர் தேர்ப்பாக னார்"[64]

என்று நம்மாழ்வாரும் பாராட்டுவர்.

மகாபாரதத்தில் கண்ணனை அரசியல் தந்திரியாகவும், அறத்தில் பற்றுள்ள பாண்டவர் நண்பனாகவும், அவர்கள் தூதனாகவும் காண்கிறோம். பாரதப் பேரிதிகாசம் போர்க்

களத்தில் தேரோட்டும் பார்த்தசாரதியாகவும் கண்ணனைக் காட்டுகிறது. பார்த்தசாரதி பகவத் கீதையை அருளிய மேதையைக் காட்டிலும் அதிக அளவில் குழந்தையாகிய கண்ணனது திருவிளையாடல்களே இந்தியாவின் கவியுள்ளத்தையும் பக்தியுள்ளத்தையும் சிறப்பாகக் கவர்ந்திருக்கின்றன எனலாம்.

### திருப்பதிகள்

பெரியாழ்வார் பாசுரங்களில் திருவரங்கம், திரு வெள்ளறை, திருப்பேர்நகர், திருக்குடந்தை, திருக்கண்ணபுரம், திருச்சித்திரகூடம், திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர், சிவில்லிபுத்தூர், திருக்குறுங்குடி, திருவேங்கடம், திருவயோத்தி, சாளக்கிராமம், வதரியாச்சிரமம், திருக்கண்டங்குடி, துவாரகை, வடமதுரை, திருவாய்ப்பாடி, திருப்பாற்கடல், பரமபதம் முதலிய தலங்களைப் பற்றிய பாடல்கள் காணப்படினும் இவர் மேற்கூறிய எல்லாத் தலங்களையும் நேரில் சென்று பாடினர் என்பதற்கு அவரைப் பற்றிய வரலாறுகளில் சான்றில்லை. சிலவற்றை நேரில் கண்டிருக்கக்கூடும்; பிறவற்றைத் தமது நகரிலிருந்தவாறே புகழ்ந்து பாடியிருத்தல் வேண்டும்.

### திருவரங்கம்

பக்தி வளத்திற் சிறந்து விளங்கும் திருவரங்கம் 'பூலோக வைகுந்தம்' என்று போற்றிப் புகழப் பெறுகின்றது. ஆழ்வார்கள் பாடிய திருத்தலங்களுள் இதுவே முதன்மை பெற்று விளங்குகின்றது. வடநாட்டினரும் தென்னாட்டினரும் இதனை இந்தியாவின் புனிதத் தலங்களுள் மிகச் சிறந்ததாகக் கருதுகின்றனர்.

> ''தென்னாடும் வடநாடும் தொழநின்ற
> திருவரங்கத் திருப்பதி''[65]

என்று பெரியாழ்வார் அருளிச் செய்கிறார். இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவரங்கம்,

"பக்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்
முனிவர்களும் பரந்த நாடும்
சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய்
நிற்கின்ற திருவ ரங்கமே"[66]

என்று அவர் காட்சியளிக்கும் தன்மையைப் பெரியாழ்வார் நமக்கு உணர்த்துகின்றார்.

**திருவெள்ளறை**

திருவெள்ளறையில் எழுந்தருளியுள்ள பங்கயக் கண்ணனைப் பெரியாழ்வார் பதினொரு பாசுரங்களாலும், திருமங்கையாழ்வார் பதின்மூன்று பாசுரங்களாலும் மங்களா சாசனம் செய்துள்ளனர்.

"செம்பொன் மதில்வெள் ளறையாய்
செல்வத்தினால் வளர் பிள்ளாய்"[67]

என்று பெரியாழ்வாரும்,

"திசையெல் லாம்கம ழும்பொழில் சூழ்திரு
வெள்ளறை நின்றானே"[68]

என்று திருமங்கையாழ்வாரும் போற்றுகின்றனர்.

**திருக்குடந்தை**

திருக்குடந்தை எம்பெருமானைப் பூதத்தார், பேயார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், திருமழிசையாழ்வார் என்ற ஏழு ஆழ்வார் களும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

பெரியாழ்வார் திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை.

"குடந்தைக் கிடந்தானே தாலேலோ"[69]

என்று அன்பு மீதூரப் பாடுகிறார்.

ஆண்டாளும் ஆராவமுதனிடம் அளவுகடந்த ஈடுபாடு கொண்டவர். கண்ணன் என்னும் கருந்தெய்வத்தின் மீது பெருங்காதல் கொண்டு,

"ஆரே யுலகத் தாற்றுவார்
ஆயர்பாடி கவர்ந்துண்ணும்
காரேறுழக்க வுழக்குண்டு
தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை
ஆரா வமுத மனையான்றன்
அமுத வாயி லூறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே
பருக்கி யிளைப்பை நீக்கீரே"[10]

என்று தம்மையும் இழந்து பாடுகிறாள்.

திருமங்கையாழ்வாரும் ஆராவமுதனிடம் பேரன்பு கொண்டு,

"தூவிசே ரன்னம் துணையொடும் புணரும்
சூழ்புனல் குடந்தையே தொழுது"[11]

என்று பாடுவதைக் காணலாம்.

### வடநாட்டுத்தலங்கள்

பெரியாழ்வார் பல வடநாட்டுத் தலங்களையும் புகழ்ந்து பாடும்போது சாளக்கிராமத்தையும் குறிக்கின்றார். இளம் பருவத்தில் கண்ணன் செய்த குறும்புகளைக் கூறும்போது,

"சாளக்கி ராம முடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்"[12]

என்று ஓர் இடைப்பெண் கறந்து அடுப்பேற வைத்திருந்த பாலைத் திருவமுது செய்ததாக எடுத்துக் காட்டுகின்றார் இந்த ஆழ்வார்.

கண்ணபிரான் பசுக்களுக்குப் புல்லும் நீரும் நல்கி வளர்த்தமையால் அவனுக்குக் கோவர்த்தனன் என்னும் திருநாமம் உண்டு. இந்தத் திருநாமத்தையே மலைக்கு இட்டு வழங்கினன். இதை நினைத்த பெரியாழ்வார்,

"தன்பே ரிட்டுக்கொண்டு தரணி தன்னில்
தாமோ தரன்தாங் குதடவரை"[13]

என்று போற்றுகின்றார். இக்கோவர்த்தனத்தை ஆண்டாள், நம்மாழ்வார் ஆகியோரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

ஆண்டாள் கண்ணனின்பால் மையல்கொண்டு,

"கற்றன பேசி வசையுணாதே
காலிக ளுய்ய மழைதடுத்துக்
கொற்றக் குடையாக வேந்திநின்ற
கோவர்த் தனத்தென்னை யுய்த்திடுமின்"[74]

என்று வேண்டுகிறாள்.

நம்மாழ்வாரும் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த நிகழ்ச்சியை,

"உண்ண வானவர் கோலத் தாயர்
ஒருப்ப டுத்த அடிசி லுண்டதும்
வண்ணமால் வரையை யெடுத்து மழைகாத்ததும்
.. .. .. ..
எண்ணுந் தோறுமென் னெஞ்செரி வாய்மெழு
கொக்கும்"[75]

என்ற பாசுரத்தில் ஆழங்கால்பட்டுத் தீயிடைப்பட்ட மெழுகு போல் உருகுகின்றார்.

பெரியாழ்வார் துவரைநாதனை,

"பல்லாயிரம் பெருந்தேவி மாரொடு
பௌவ மெறிதுவரை
எல்லாரும் சூழச்சிங் காசனத்தே
இருந்தான்"[76]

என்றும்,

"பதினாறா மாயிரவர் தேவிமார்
பணிசெய்யத் துவரை யென்னும்
மதில்நா யகராகி வீற்றிருந்த
மணவாளர்"[77]

என்றும் போற்றிப் புகழ்கின்றார்.

பெரியாழ்வாரின் திருமகளான ஆண்டாளும் கண்ணன் பால் காதல் மீக்கூர,

''சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும்
துவரா பதிக்கென்னை உய்த்திடுமின்''[78]

என்று வேண்டுகிறாள்.

**திருமாலிருஞ்சோலை**

திருமாலிருஞ்சோலைப் பதியைப் பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்துள்ளனர். திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களுள் இப்பதியானது நூற்று இருபத்தாறு பாசுரங்களைப் பெற்று மூன்றாவது பதியாக விளங்குகிறது.

"குலமலை கோலமலை
குளிர்மாமலை கொற்றமலை
நிலமலை நீண்டமலை
திருமாலிருஞ் சோலையதே"[79]

என்று பெரியாழ்வாரும்,

"தேசமெல் லாம்வணங்கும் திருமாலிருஞ் சோலை''[80]

என்று திருமங்கையாழ்வாரும்,

''தென்கொள் திசைக்குத் திலதமாய்
நின்ற திருமா லிருஞ்சோலை"[81]

என்று நம்மாழ்வாரும் இப்பதியைப் போற்றுவர்.

**திருவில்லிபுத்தூர்**

திருவில்லிபுத்தூரில் எழுந்தருளிய பிரானைப் பெரியாழ்வார் போற்றிப் பாடுகையில்,

''மின்னனைய நுண்ணிடையார்
விரிகுழல்மேல் நுழைந் தவண்டு

இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்
இனிதமர்ந்தாய்"[82]

என்று அருளிச் செய்கிறார்.

பெரியாழ்வார் கண்ணனுடைய திருவிளையாடல்களில் ஈடுபட்டவர். கண்ணனுடைய இளமை விளையாட்டுகளைப் பாடிப் பாடி மகிழ்ச்சி அடைகிறார். அவருடைய பாடல்கள் இனிய ஓசை அமைந்தவை; கருத்துக்கள் நிறைந்தவை.

**பெரியாழ்வார் காலம்**

இனிப் பெரியாழ்வாரின் காலத்தைப் பற்றி ஆராயப் புகுவோம். இவர் வாழ்ந்த கி. பி. எட்டாம் நூற்றாண்டில் பல்லவரும் பாண்டியருமாகிய அரசர்களே பெரிதும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இவர்கள் புறச் சமயங்களைத் தழுவாது வைதிகக் கொள்கைகளில் ஆழ்ந்த பற்றுடையவர்களாய் விளங்கினர் என்பதை அக்காலத்துச் சாசனங்களால் அறிகிறோம். இவர்களுள் பல்லவர் வைணவ சமயத்தையும் பாண்டியர் சைவ சமயத்தையும் பெரிதும் தழுவியிருந்தனர். அரசர்கள் எச்சமயத்தை மேற்கொண்டு ஒழுகுகின்றார்களோ அச்சமயமே நாட்டில் செல்வாக்குப் பெற்றுச் சிறப்பது இயல்பாயிருந்தது. ஆனால் வைதிகப் பற்றுடைய அரசர்கள் புறச் சமயங்களை அழிக்கும் பண்புடையவராய் இல்லை எனலாம்.

இவர் காலத்தில் தமிழ்நாட்டின் வடபகுதியை ஆண்ட பல்லவர்கள் திருமாலடிமையிற் சிறந்து விளங்கியதைப் போலத் தென் பகுதியை ஆண்ட பாண்டியர் சிவபக்தியில் சிறந்து விளங்கினர். இந்நிலையில் பெரியாழ்வார் தம் ஞான விசேடத்தாலும், சொல்வன்மையினாலும் திருமாலின் பரத்துவத்தை அறுதியிட்டுக் கூறிப் பாண்டியனது பொற்கிழியைப் பெற்றதோடு அவனையும் தம் அடிமையாக்கினர் என்று அறிகிறோம்.

"இவ்வாழ்வாருக்கு அடியவனான பாண்டியன் பெயர் ஸ்ரீவல்லபதேவன் என்று குருபரம்பரைகள் கூறுகின்றன."[82அ]

ஆனால் பெரியாழ்வார்,

"கொன்னவில் கூர்வேல் கோனெடு
மாறன்தென் கூடற்கோன்
தென்னன்கொண் டாடும் தென்திரு
மாலிருஞ் சோலையே"[83]

என்ற பாசுரத்தால் அப்பாண்டியன் கோன் நெடுமாறன் என்று கூறுதலைக் காணலாம். 'கூடற்கோன்', 'தென்னன்', என்பவற்றால் அரசன் பாண்டியனே என்பதை ஆழ்வார் தெளிவுபடுத்துகிறார். இனி, அப்பாண்டியன் யாவன் என்று ஆராய்வோம்.

மு. இராகவையங்கார் அவர்கள் வேள்விக்குடி, சின்னமனூர்ச் சாசனங்களில் கூறப்படும் நான்கு மாறவர்மர்களைத் தனித்தனியே ஆராய்ந்து கடுங்கோனையடுத்து அரசுசெய்த மாறவர்மன் திருமழிசையாழ்வார் காலத்தவனென்றும், அவனையடுத்துக் கூறப்படும் அரிகேசரி மாறவர்மன் ஞான சம்பந்தரால் சமணசமயத்தினின்றும் சைவசமயத்திற்கு மாற்றப்பெற்றுப் பரமசைவனான கூன்பாண்டியன் என்றும், இவர்கள் இருவரும் பெரியாழ்வாரால் வைணவராக்கப்பட்டனர் என்று கொள்ளுவதற்கில்லையென்றும், இந்த நெடுமாறனது பெயரன் இராசசிம்மன் (கி. பி. 830-867) பரமசைவனாயினும் பெரியாழ்வாரால் திருத்திப் பணிகொள்ளப் பெற்றவனாக இருக்கலாம் என்றும் கருதுகிறார்.[84] மேலும் இவன் மகன் பராந்தகன் நெடுஞ்சடையனிடம் உத்தர மந்திரியாக இருந்தவன் மாறன்காரி என்பதும், இவ்வமைச்சனே நெடுஞ்சடையன் தந்தையாகிய மாறவர்மனுக்குக் கங்கராசன் மகள் பூசுந்தரியை மணம் செய்வித்தவன் என்பதும்,

"கொங்கரவ நறுங்கண்ணிக் கங்கரா சனொடு
சம்பந்தஞ் செய்தும்"[85]

எனவரும் வேள்விக்குடி சாசனத்தால் அறியப்படும். மாறன் காரிக்குப் பின்னர் அவன் தம்பி மாறன் எயினன் பராந்தகன் நெடுஞ்சடையனுக்குத் தலைமை யமைச்சனானான். இச்

சகோதரர் இருவரும் பரம வைணவர்கள் என்பது, மதுரையை யடுத்துள்ள ஆனைமலை அடிவாரத்தில் அழகாகக் கட்டப் பெற்றிருக்கும் நரசிங்கப் பெருமாள் கோயில் சாசனங்களால் தெளியப்படுகிறது. "இந்த வைணவர்களின் முயற்சியாலேயே கோநெடுமாறன் வைணவனாக மாறியிருத்தல் கூடும் என்பர்."[85] அ உத்தர மந்திரியாயிருந்த மாறன்காரியின் ஊராகிய களக்குடி பெரியாழ்வார் அவதரித்த திருவில்லிபுத் தூருக்கு அருகே உள்ளது.

மற்றும் தந்தை மாறவர்மனது ஆட்சி முடிந்ததும் அவன் மகன் நெடுஞ்சடையன் தக்க பருவத்தில் ஆட்சிக்கு வந்தனன் என்பது வேள்விக்குடி சாசன வரலாறுகளால் அறிய முடி கின்றது. இப்பாண்டியனது பதினேழாவது ஆட்சியாண்டில் உள்ள சீவரமங்கல சாசனத்தில் இவன்,

"பராந்தகன் பரம வைஷ்ணவன் றானாகி
நின்றிலங்கு மணிநீள்முடி நிலமன்னவ
நெடுஞ்சடையன்"[86]

என்று புகழப்பட்டுள்ளான்.

"மாறன் என்பது பாண்டியர்க்குரிய பொதுப்பெயரேயா யினும், 7, 8ஆம் நூற்றாண்டிலிருந்த அவ்வரசர் சிலர் இதனைத் தம் இயற்பெயராகச் சூட்டிக் கொண்டிருந்தவர் என்பது சாசனங்களால் தெளிவாகின்றது."[86]அ தந்தையைப் போலன்றி இவன் பிறவி வைணவனாக விளங்கியவன். சீவர மங்கலச் சாசனத்துக் கூறப்பட்ட நெடுஞ்சடையன் பெருமை களுள்ளே,

"மநுதர்சித மார்க்கத்தினால் குருசரிதம் கொண்டாடி"[87] வருபவன் என்ற செய்தியும் காணப்படுகிறது. இங்ஙனம் அவனால் கொண்டாடப்பட்ட குரு பெரியாழ்வார் என்றே கூறலாம்.

இங்ஙனம் பரம வைணவனான நெடுஞ்சடையன் கொங்கர் பூமியைக் கவர்ந்தபின்,

"பூஞ்சோலை மணிபுறவிற் காஞ்சிவாய்ப் பேரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக் குன்ற மன்னதோர் கோயி
லாக்கினான்"[88]

என்று வேள்விக்குடி சாசனம் கூறுகிறது. காஞ்சிவாய்ப் பேரூர் என்பது கொங்கு நாட்டில் நொய்யலாறு என வழங்கும் காஞ்சி மாநதிக்கரையின் பக்கத்திலுள்ள பேரூர் என்ற புகழ்வாய்ந்த சிவத்தலமாகும். இதனை 'மேலைச் சிதம்பரம்' என்றும் கூறுவர். இத்தகைய சிறப்புப் பொருந்திய சிவத்தலத்தில் திருமாலுக்குப் பெரியதோர் கோயில் அமைத்தவன் இப்பாண்டியன் என்பதால் அக்கடவுளிடத்தும் இவன் கொண்டிருந்த பக்தியின் பெருமையை அறியலாம். இப்பாண்டியன் கொங்கு நாட்டில் புரிந்த இவ்வரிய திருப்பணியை,

"கொங்குங் குடந்தையும் கோட்டியூ ரும்பேரும்,
எங்குந் திரிந்து விளையாடு மென்மகன்"[89]

என்ற பெரியாழ்வார் அருளிச்செயலால் அறியலாம். கொங்கு நாட்டில் ஆழ்வாரால் பாடப்பெற்ற தலங்களே இல்லாமையால் 'கொங்குங் குடந்தையும்' என்ற தொடருக்கு 'வாசனைமயமான குடந்தையும்' என்று பொருள்கூறிச் சென்றனர். 'கொங்குக் குடந்தையும்' என்று இருக்க வேண்டியது 'கொங்குங் குடந்தையும்' என்று மெலிந்தது என விசேடமும் பண்டைய வியாக்கி யானங்களால் அறியக் கிடக்கிறது.

இனிக் கோநெடுமாறனைப் பற்றி மற்றொரு பாசுரம் பின் வருமாறு உணர்த்துகிறது:

"மன்னர் மறுக மைத்துனன்
மார்க்கொரு தேரின்மேல்,
முன்னங்கு நின்று மோழை
யெழுவித்த வன்மலை,
கொன்னவில் கூர்வேல் கோனெடு
மாறன்தென் கூடற்கோன்,
தென்னன்கொண் டாடும் தென்திரு
மாலிருஞ் சோலையே"[90]

தன் மைத்துனர்க்காகத் தேரேறிச் சென்று பகையரசரை வருத்திய அழகர் மலையைக் கோநெடுமாறன் கொண்டாடினான் என்பது இப் பாசுரத்தின் பொருளாகும். இந்த நெடுமாறனும் தன் மைத்துனர்க்காகப் போராடிப் பகையரசர்களை வருத்தியவன் என்பதும், அதனால் இவன் இம்மலையைக் கொண்டாடுவதற்கு ஒரு சிறப்பு உண்டு என்பதும் குறிப்பாகப் பெறப்படுகின்றன.

மாறவர்மனாகிய இந்நெடுமாறன் கங்கராசனுடைய மகளான பூசுந்தரியை மணம்செய்ய விரும்பி அவளைப் பெற முயன்றபோது வடநாட்டு அரசர் பலர் ஒருங்குகூடி எதிர்த்தனர். பாண்டியன் அவர்களனைவரையும் தன் பெரும்படையால் அழித்தோடச் செய்து பூசுந்தரியை மணம் செய்துகொண்டதாக வேள்விக்குடி சாசனங் கூறுகிறது. அப்போது கங்கராசன் மக்களும் பூசுந்தரியின் சகோதரர்களுமான அரசிளங்குமரர்கள் அந்த வடநாட்டு அரசர்களுடன் போர் செய்ய முனைந்தார்கள் என்று ஊகிக்க இடமுண்டு. அந்த மைத்துனர்களுக்கு உதவியாக வடநாட்டு அரசரைத் தோற்கடித்த கோநெடுமாறனின் செயலைப் பெரியாழ்வாரும் தம் பாசுரங்களில் குறிப்பிட்டிருக்கிறார்.'[1]

இங்ஙனம் தம் அடியவனான நெடுமாறனுக்குத் திருமால் பகையழித்து அருள்புரிந்த தன்மையை,

"குறுகாத மன்னரைக் கூடு
கலக்கிவெங் கானிடைச்
சிறுகால் நெறியே போக்குவிக்
குஞ்செல்வன் பொன்மலை"[92]

என்று வரும் பாசுரத்தாலும் ஆழ்வார் அருளிச் செய்கிறார். 'குறுகாத மன்னரை' என்ற தொடருக்கு நெடுமாறனுக்குப் பகைவரான அரசர் என்பதே பொருளாகும், அப்பகையரசர் திருமாலால் அழிக்கப்பட்டனர். எனவே திருமால் தன் அடியார்க்கு அருள்புரியும் தன்மையுடையவர் என்பதும் தன் அடியாரின் பகைவரை அழிக்கும் இயல்பினன் என்பதும் விளங்குகிறது. இதனை,

"உரிமையால் பல்லவர்க்குத் திறைகொடா
மன்னவரை மறுக்கம்செய்யும்
பெருமையாற் புலியூர்ச் சிற்றம்பலத்து"[93]

எனவரும் சுந்தரர் பாடலாலும்,

"கூற்றைவென் றாங்கைவர் கோக்களையும்வென்
றிருந்தழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியும் தானுமோர் மீனவன்பால்
ஏற்றுவந் தாருயிருண்ட திறலொற்றைச் சேவகனே"[94]

எனவரும் மாணிக்கவாசகர் பாடலாலும் அறியலாம்.

ஆனைமலைக் கற்றளியில் வடமொழியில் ஒரு கல்வெட்டும், தமிழ்மொழியில் ஒரு கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளன. நெடுஞ்சடையனே பொறித்த வேள்விக்குடி சாசனமும் வட மொழி தென்மொழி யாகிய இரண்டிலும் அமைந்துள்ளது. வடமொழிப் பொறி சிவ வணக்கத்தோடு ஆரம்ப மாகிறது. நெடுஞ்சடையன் குலகுரு அகத்தியர் என்றும் அதில் கூறப்பட்டிருக்கிறது. திருமாலைப் பற்றியோ பெரியாழ்வாரைப் பற்றியோ யாதொரு குறிப்பும் அதில் காணப்படவில்லை. அது நெடுஞ்சடையன் ஆட்சி தொடங்கிய மூன்றாம் ஆண்டில் பிறப்பிக்கப்பட்டது. அக்காலத்தில் இவன் சைவ சமயத்தைச் சார்ந்திருந்தான் என்பது தெளிவாக விளங்குகிறது. அதன் காலம் கி. பி. 769-770. ஆனைமலைக் கல்வெட்டுக்காலத்தில் பாண்டிய அரசன் பரம வைணவனா வான். ஆதலால் நெடுஞ்சடையன் பெரியாழ்வாரை ஞானாசிரிய னாகக் கொண்டது வேள்விக்குடி சாசனத்திற்குப் பின்னும் ஆனைமலைச் சாசனத்திற்கு முன்னும் இருத்தல் வேண்டும்.

இவற்றால் பெரியாழ்வார் கி.பி. 769-770க்கு முன்னரே இருந்திருக்க வேண்டுமென அறியலாம்.

நெடுஞ்சடையன் எத்தனை ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என்பதை அறிய முடியவில்லை. எனினும் அப்பாண்டியனது பதினேழாம் ஆண்டு ஆட்சியில் அமைந்த சீவரமங்கலத்துச்

சாசனத்தால் கி. பி. 784-ல் அவன் அரசனாயிருந்தான் என்பது அறியப்படும்.

"கோபிநாதராவ் கருத்தின்படி, பெரியாழ்வார் காலத்து மன்னன் சீமாறன் சீவல்லபன் ஆவான்."[9]

இம்மன்னன் கி.பி. 862 ஆம் ஆண்டில் அரசுகட்டில் ஏறியதாக அவன் மகன் வரகுண பாண்டியனது சாசனம் கூறுகிறது. இவனது ஆட்சிக் காலத் தொடக்கமே வைணவ ஆசாரியரான நாதமுனிகள் வாழ்ந்த காலமாகும். இந்தக் காலத்தில் பெரியாழ்வார் இருந்திருப்பின் வைணவப் பெரியார்களான இவ்விருவரும் அளவளாவிய செய்திகள் குறிக்கப்பட்டிருக்கும். அத்தகைய செய்திகள் ஒன்றும் காணப்படாமையாலும், ஆழ்வார்கட்கும் ஆசாரியர்கட்கும் இடைப்பட்ட காலம் ஒன்றிரண்டு நூற்றாண்டுகளேனும் இருந்திருக்க வேண்டும் என்பது தெளியப்படுதலானும் கோபிநாதராவ் அவர்களின் கூற்றுப்படி கி பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரெனப் பெரியாழ்வாரைக் கருதுதற்கில்லை.

பெரியாழ்வார் எண்பத்தைந்து ஆண்டுகள் வரை வாழ்ந்தார் என வரலாறுகள் அறிவிக்கின்றன. இவர் சுமார் கி.பி. 690 ஆம் ஆண்டில் அவதரித்தவராயின் கி.பி. 775ஆம் ஆண்டு வரை வாழ்ந்திருக்கலாம். அவ்வாறாயின் இந்த ஆழ்வார் கோநெடுமாறனின் தந்தை, கோநெடுமாறன், நெடுஞ்சடையன் ஆகிய வேந்தர்களின் ஆட்சிக் காலத்தில் விளங்கியவர் எனக் கருதலாம்.

## பெரியாழ்வார் வரலாறும் காலமும்

## குறிப்புகள்

1. திருக்கு. 398
2. பெரியாழ். திரு. தனியன் 2.
3. திருப்பல். 1.
4. திருப்பல். 1/2
5. திருப்பல், 2
6. சேந். திருப்பல். 1
7. திருப்பல். 2
8. உபதேச. 18.
9. உபதேச. 20

9அ. திருவி. 2478

9ஆ. பெரிய திரு. 948.

9இ. தெ. ஞானசுந்தரம், 'வைணவ உரையாசிரியர்கள்', ப. 389

10. திருப்பல். பெரியவாச்சான்பிள்ளை அவதாரிகை.
11. திருப்பல். 8
12. பெரியாழ். திரு. 437
13. திருப்பல். 3/3
14. ,, 6

14 அ. குருபரம்பரை

15. திருப்பல் 11
16. பெரியாழ். திரு. 367
17. ,, மணவாள மாமுனிகள் அவதாரிகை.
18. ,, 14
19. ,, 16
20. ,, 37
21. ,, 23
22. ,, 24
23. ,, 25
24. ,, 26
25. ,, 27
26. ,, 28
27. ,, 29
28. ,, 31

29. பெரியாழ். திரு. 32
30. ,, 33
31. ,, 36
32. ,, 38
33. ,, 38
34. திருப் 495
35. அமலனா. 934/3-4
36. பெருமாள் திரு. 708
37. பெரி. திரு. 2072/3
38. திருவாய் 2709
39. ,, 2842
40. பெரியாழ். திரு 19/2-3
41 ,, 28/3
42 ,, 153/3-4
43. ,, 252
44. திருப்பல். 6/3
45. அண்ணங்கராசாரியார், திருப்பல், திவ்வியார்த்த தீபிகை,6
46. பெரியாழ். திரு, 132/3
47. ,, 209/4
48. ஆண்டாள் வாழி. 2
48அ. ந.வீ. செயராமன், 'சிற்றிலக்கியத் திறனாய்வு', ப.114.
48ஆ. ,, ,, ப.114.
49. பெரியாழ். திரு. 473
50 உபதேச. 16/3
51. ,, 19/2
52. ,, 20
53. இராமா. நூற். 15
54. கம்ப, உலாவியல் படலம், 6/3-4.
55. பெரியாழ். திரு. 186.
56. ,, 187
57. எஸ். வையாபுரிப் பிள்ளை, 'அகராதி நினைவுகள்', ப.97.
58. சிலம்பு. 17.

59. பெரியாழ். திரு. 99
60. பெரி. திரு. 1072
61, திருவாய். 3285
62. பெரியாழ். திரு 102/2
63. பெரி. திரு 1145/2
64. திருவாய். 3062
65, பெரியாழ். திரு. 422/2
66. ,, 417/3-4
67. ,, 199/3
68. பெரி. திரு. 1369/4
69. பெரியாழ். திரு. 50/4
70. நாச்சி. 630
71. பெரி. திரு 949/3
72. பெரியாழ். திரு. 206/3
73. ,, 272/2
74. நாச்சி. 624/3-4
75 திருவாய். 3220
76. பெரியாழ். திரு 333/3-4
77 ,, 415
78. நாச்சி. 625/4
79. பெரியாழ். திரு. 353/3-4
80. பெரி. திரு. 1833/3
81 திருவாய். 3736/3.
82. பெரியாழ். திரு. 133
82அ. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் காலநிலை', ப. 57.
83. பெரியாழ். திரு. 344/3-4
84. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் காலநிலை', ப. 61.
85. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து', ப. 40.
85அ. ச. எஸ். வரதராஜ ஐயர், 'தமிழ் இலக்கிய வரலாறு', ப. 275
86. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து', ப 66.

86அ. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் காலநிலை', ப. 59. அடிக்குறிப்பு.

87. 'பாண்டியர் செப்பேடுகள் பத்து ப. 66.

88. மே. நூல். ப. 65.

89. பெரியாழ். திரு. 173

90. பெரியாழ். திரு. 344

91. மு. இராகவையங்கார், 'ஆழ்வார்கள் காலநிலை', ப. 70.

92. பெரியாழ். திரு. 345

93. சுந்தரர் தேவாரம், 916.

94. திருவாசகம் திருப்பாண்டி. 10.

95. ஈ. எஸ். வரதராஜ ஐயர், 'தமிழ் இலக்கிய வரலாறு' ப. 275.

# பெரியாழ்வார் உணர்த்தும் பிள்ளைமை இன்பம்

## பிள்ளைத்தமிழ்: தோற்றமும் வளர்ச்சியும்

பிள்ளைத்தமிழ் தொல்காப்பியர் காலத்தில் வித்திடப் பெற்று, மெல்ல மெல்ல வளர்ச்சி அடைந்து, கி.பி. எட்டாம் நூற்றாண்டில் ஆழ்வார்களின் காலத்தில் தனியொரு இலக்கிய மாகும் தகுதி பெற்றது. பிறகு பன்னிரண்டாம் நூற்றாண்டில் முழுச் சிற்றிலக்கியமாகத் தோன்றியது. இரண்டாம் குலோத் துங்கனின் ஆசிரியரும் அவைக்களப் புலவருமாகிய ஒட்டக் கூத்தர் இரண்டாம் குலோத்துங்கன் மீது பிள்ளைத்தமிழ் நூல் ஒன்றனைப் பாடிப் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகையைத் தோற்றுவித்தார். ஒட்டக்கூத்தர் தோற்றுவித்த பிள்ளைத்தமிழ் பிற்காலத்தில் அருணாசலக் கவிராயர், வஞான முனிவர், வீரராகவ முதலியார், கச்சியப்ப னிவர், துறைமங்கலம் சிவப்பிரகாசர், சிதம்பர சுவாமிகள், ழிக்கூத்தர், குமரகுருபரர், திரிசிரபு மீனாட்சிசுந்தரம் ளை முதலான புலவர் பெருமக்கள் பலரால் மேலும் ொலிவு அடைந்தது.

ஒட்டக்கூத்தர் இயற்றிய இரண்டாம் குலோத்துங்கன் பிள்ளைத் தமிழே காலத்தால் முந்திய பிள்ளைத்தமிழ் இலக்கிய மாகும்.[1] இது, இரண்டாம் குலோத்துங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அவன் பிள்ளைமைப் பருவத்தைப் போற்றும் நிலையில் இயற்றப்பெற்றது. சோழ மன்னர்களின் வீரச்செயல்களும், இரண்டாம் குலோத்துங்கனின் பண்பு நலன் களும் இந்நூலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

பிள்ளைத்தமிழின் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல், இந்திர காளியப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், வெண்பாப் பாட்டி

யல், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், பிரபந்த தீபிகை, சுவாமிநாதம் ஆகிய நூல்கள் கூறுகின்றன.

பிள்ளைத்தமிழின் இலக்கணத்தைப் பற்றி விளக்கும் நூல்களுள் ஒன்றான சிதம்பரப் பாட்டியல்,

"துறுகொலைநீக் கித்தெய்வக் காப்பாய்ச் சுற்றத்
தொகையளவு வகுப்பகவல் விருத்தந் தன்னால்
முறைகாப்புச் செங்கீரை தால்சப் பாணி
முத்தம்வா ரானையம் புலிபி னோடு
சிறுபறைசிற் றிற்சிறுதே ரிவைபின் மூன்றுந்
தெரிவையர்க்குப் பெறாசழங்கும் மானை யூசல்
பெறுமூன்று முதலிருபத் தொன்று ளொற்றை
பெறுந்திங்க டதனிற்பிள்ளைக் கவியைக்
கொள்ளே"[2]

என்று கூறுகிறது.

வைத்தியநாத தேசிகர் தாம் இயற்றிய இலக்கண விளக்கப் பாட்டியலில்,

"கடுங்கொலை நீக்கிக் கடவுள் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடும் அம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் என்னப்
பெறுமுறை ஆண்பால் பிள்ளைப் பாட்டே"[3]

என்று கூறப்படுகிறது.

பிள்ளைத்தமிழ் நூல் மூன்று மாதம் முதலாக இருபத்தொரு மாதம் வரையிலும் அமைந்த ஒற்றித்த மாதங்களாகிய பத்து மாதங்களுக்கும் உரியனவாம் என்பதை,

"பிள்ளைப் பாட்டே தெள்ளிதிற் கிளப்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே"[4]

என்ற நூற்பாவால் அறியலாம்.

"மூன்று முதல்மூ வேழு திங்களின்
ஒற்றை பெற்ற மூற்றுறு மதியின்
கொள்ளும் பிள்ளைக் கவியைக் கூர்ந்தே"[5]

என்று இலக்கண விளக்கப் பாட்டியலும் விளக்குகிறது

ஆண்பால் பிள்ளைத்தமிழிற்கு உரிய சிறுபறை, சிற்றில், சிறுதேர்ப் பருவங்கட்கு முறையே குழந்தையின் ஐந்தாண்டு, ஆறு ஆண்டு, ஏழாண்டுப் பருவங்களில் பிள்ளைத்தமிழ் பாடுக என்னும் குறிப்பு இலக்கண விளக்கப் பாட்டியலில் வரும்

"மூன்றுஐந்து ஏழாம் ஆண்டிலும் ஆகும்"[6]

என்னும் நூற்பாவில் விளக்கியுள்ளனர். இதே குறிப்பு வெண்பாப் பாட்டியலில் வரும்,

"முறைதரு மூன்றாதி மூவேழீ றாந் திங்கள்
அறைக நிலம்பத்து மாண்டைந் தேழ்"[7]

என்ற அடிகளாலும் அறியப்படுகிறது.

பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறு தேர் எனப் பத்துப் பருவங்கள் கூறப்படுகின்றன. இப்பருவங் களை,

"காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகஎன் றல்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர்"[8]

எனப் பன்னிரு பாட்டியல் கூறுகிறது. இந்நூற்பாவில் 'மற்றவை' என்றதனால், அச்சோவச்சோ எனல், புறம்புல்கு வான் எனல், அப்பூச்சி காட்டுகின்றான் எனல், முலையுணாய் எனல், நீராட வாராய் எனல், குழல் வாராயக்காக்காய் எனல், ஓர் கோல் கொண்டுவா எனல், பூச்சூட்ட வாராய் எனல், காப்பிடவாராய் எனல், இன்று முற்றும் எனல் முதலி யனவும் கொள்க. "இங்குக் கூறியவற்றைப் பெரியாழ்வார்

திருமொழியிற் காண்க" என்று விளக்கம் தருவர் கா. ர. கோவிந்தராச முதலியார்.[9]

பெண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதியில் உள்ள மூன்று பருவங்களுக்கும் பதிலாகச் சிற்றில் இழைத்தல், சிறுசோறாக்கல், குழமகன், ஊசல், காமவேள் நோன்பு முதலியவற்றுள் யாதானும் மூன்று இடம்பெறும்.[10]

**காப்புத் தெய்வங்கள்**

திருமால், அரன், பிரமன், விநாயகர், முருகன், சூரியன், வடுகன், ஏழு மங்கையர், இந்திரர், சாத்தர், குபேரன், நீலி, முப்பத்துமூன்று தேவர்கள், திருமகள், நாமகள், சந்திரன் ஆகியோர் பிள்ளைப்பாட்டின் காப்பில் இடம் பெறுபவர்கள்.[11]

இவர்களுள்ளும் காப்புப் பருவத்தில் முதற்பாடலில் முதற் கடவுளாகத் திருமால் கூறப்படுகிறார். இதனை,

"காப்பின் முதல் எடுக்கும் கடவுள் தானே
பூக்கமழ் துழாய்முடி புனைந்தோன் ஆகும்"[12]

எனப் பன்னிரு பாட்டியல் விளக்குகிறது. காப்புப்பருவம் பாடும் முறையையும் இலக்கண விளக்கப் பாட்டியலில்,

"மங்கலம் பொலியும் செங்கண் மாலே
சங்கு சக்கரம் தரித்த லானும்
காவற் கடவுள் ஆக லானும்
பூவினள் புணர்த லானும்முற் கூறி"[13]

என்று கூறப்படுதலான் அறியலாம். காப்புப் பருவத்தின் முதல் வணக்கம் திருமால் வணக்கமாக இருத்தல் வேண்டும் என்பதையும், அதற்குரிய காரணங்கள் இன்ன என்பதையும் இந்நூற்பா எடுத்தியம்புவதைக் காண்கிறோம். இக்கருத்தையே,

"அவன்றான்,
காவற் கிழவன் ஆகலானும்
பூவின் கிழத்தியைப் புணர்த லானும்
முடியும் கடகமும் மொய்பூந் தாரும்
குழையும் நூலும் குருமணிப் பூணும்

அணியும் செம்மல் ஆக லானும்
முன்னுற மொழிதற் குரியன் என்ப"[14]

என்று பன்னிரு பாட்டியல் வலியுறுத்துகிறது.

**எண்ணிக்கை**

பிள்ளைத்தமிழ் என்பது பாட்டுடைத் தலைவனைப் பிள்ளைப் பருவத்தினனாக எண்ணிப் பாடும் தமிழ் இலக்கிய வகை என்னும் பொருளைத் தரும். பிள்ளைக்கவி, பிள்ளைப்பாட்டு என்பன இச்சிற்றிலக்கிய வகையின் வேறு பெயர்களாகும்.

பாட்டுடைத் தலைவனுக்குத் தக்கவாறு பாடல்களின் எண்ணிக்கையும் வேறுபடும் என்பதனை,

"இமையவர் வேதியர் இயல்புடை வைசியர்
சூத்திரர் என்னச் சொற்றஐ வருக்கும்
முறையே நூறு முதல்அறு பான்வரை
கணிக்கும் பிள்ளைக் கவியின் தொகையே"[15]

என்று பிரபந்த மரபியல் கூறுகின்றது. இமையவர், வேதியர், வைசியர், சூத்திரர் என நால்வரைக் கூறி ஐவருக்கு எனத் தொகை கூறுதலால் அரசர் என்பது விடுபட்டிருக்கலாம்.[16] இந்த ஐவருக்கும் நூறு முதல் அறுபது வரை பாடல் எண் ணிக்கை கூறப்படுதலால் தேவருக்கு நூறு, அரசருக்குத், தொண்ணூறு, அந்தணருக்கு எண்பது, வைசியருக்கு எழுபது வேளாளருக்கு அறுபது என்று முறையாகக் கொள்ளப்படுதல் வேண்டும். பிரபந்த மரபியல் தவிர ஏனைய பாட்டியல் நூல்கள் இத்தகைய எண்ணிக்கையை வரையறுத்துக் கூற வில்லை. மேலும் பிள்ளைத்தமிழ் பாடியபுலவர்களும் இவ் வரையறையைப் பின்பற்றிப் பாடல்கள் பாடவில்லை. எனவே பிரபந்த மரபியல் கூறும் எண்ணிக்கை பற்றியவிதி பிள்ளைத் தமிழ் இலக்கியங்களில் போற்றப்பெறவில்லை எனலாம்.

**யாப்பு**

பிள்ளைத்தமிழில் இடம்பெறும் யாப்பு வகையையும் பாட்டியல் நூல்களில் சிறப்பாகக் காண்கிறோம்.

"அகவல் விருத்தமும் கட்டளை யொலியும்
கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே"[17]

என்னும் பன்னிரு பாட்டியல் ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலி, கலிவிருத்தம் ஆகியன பிள்ளைத்தமிழில் இடம்பெறும் யாப்புவகைகள் எனக் கூறுகின்றது.

பிள்ளைத்தமிழில் பஃறொடை வெண்பாவும் சிறுபான்மை இடம்பெறும் என்பதனை,

"பிள்ளைப் பாட்டே நெடுவெண் பாட்டெனத்
தெள்ளிதிற் செப்பும் புலவரு முளரே"[18]

என்று பன்னிரு பாட்டியல் கூறுகிறது.

" அழிவின் அக வலின் விருத்தத்து
அறைதல்பிள்ளைக் கவியாம்"[19]

என்பதனால் ஆசிரிய விருத்தமே பிள்ளைத்தமிழுக்குரிய யாப்பு வகை என்று சுவாமிநாதம் கூறுகிறது. இக்குறிப்புக்களை நோக்குங்கால் பிள்ளைத்தமிழுக்குரிய யாப்புவகை இன்னதென வரையறையின்றிப் புலவர்கள் விரும்பியவாறு வரப்பெறும் என அறியப்படுகிறது.

**பருவங்கள்**

ஆண்பாற் பிள்ளைத்தமிழில் காப்பு, தால், செங்கீரை, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறு தேர் எனப் பத்தாகவும், பெண்பாற் பிள்ளைத்தமிழில் இறுதியில் உள்ள மூன்று பருவங்களுக்குப் பதில் கழங்கு, அம்மானை, ஊசல் என்பன பெரும்பான்மையாகவும் இடம்பெறும் பருவங்களாகும்.

ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் முறைவைப்பிற்கு மாறாகச் சிற்றில், சிறுபறை, சிறு தேர் என முறைமாறியும் பருவங்கள் காணப்படுகின்றன. இறுதியில் உள்ள இம்மூன்று பருவங்களுக்கும் திங்கள் கணக்கிடுவதற்குப் பதிலாக மூன்றாம், ஐந்தாம், ஏழாம் ஆண்டுகள் என்றும் எண்ணிக் கூறுவதுண்டு. பறை முழக்குவதும்,

சிற்றிலைச் சிதைத்தலும், சிறுதேர் உருட்டலும் ஏறக்குறைய ஒன்றரை ஆண்டுக் குழந்தையால் இயலாது என எண்ணி இங்ஙனம் கொண்டதாகக் கூறலாம்''[20]

பிள்ளைத்தமிழின் முதற்பருவமாகிய காப்புப் பருவத்தில் திருமால் முதல் பல்வேறு தெய்வங்களையும் வணங்கிப் பிள்ளைத்தமிழின் பாட்டுடைத்தலைவனையோ, பாட்டுடைத் தலைவியையோ காக்குமாறு பாடப்பெறும். ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்த்தி முகம் அசையுமாறு ஆடும் பிள்ளையின் செங்கீரையாட்டத்தைப் பாடும் பகுதி இரண்டாவது அமைந்த செங்கீரைப் பருவம்.

''ஒருதா ளூந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதிர்ந்துநிமிர்ந்
தருள்மொழி திருமுக மசைய வசைந்தினி
தாடுக செங்கீரை''[21]

என்று குமரகுருபர சுவாமிகளும்,

''ஏனமக வனையதா மரைபதித் தொருதா
ளிருத்தியொரு தாளெடுத்தே
யெழினணி கனிந்தமுக தாமரை மலர்ந்தசைய
விருமணிக் குழைவில் வீசத்
தேனமர் நறுங்குதலை சீர்ப்பமங் களவல்லி
செங்கீரை யாடி யருளே''[22]

என்று மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களும் பாடிய பாடல்களால் இதனைத் தெளியலாம். குழந்தையை மாணிக்கம் கட்டி, வயிரம் இடை கட்டி, ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச் சிறு தொட்டிலில் அன்புடன் கிடத்தி முன்னைச் சிறப்பெல்லாம் கூறித் தாலாட்டுப் பாடுவது தாலப் பருவமாகும்.

குழந்தை நிமிர்ந்து உட்கார்ந்து, இருகைகளையும் ஒன்று சேர்த்துக் கொட்டி முழக்குதலைக் கண்டு மகிழ்ந்து போற்றிப் பாடும் நிலையில் உள்ளது சப்பாணிப் பருவம். குழந்தையைப்

போற்றி மடியில் வைத்து அதன் மதலை ஒழுகும் வாய்முத்தத்திற்குக் கடல் முத்தும், மருப்பின் முத்தும், ஏனைய முத்துக்களும் நிகராகா என்று கூறி வாய் முத்தத்தை வேண்டிப் படுவது முத்தப் பருவமாகும்.

தளர்நடையிட்டு வரும் குழந்தையை வருக என வேண்டி அழைக்கப் பாடுவது வருகைப் பருவமாகும். வானத்தில் ஒளிப் பிழம்பாய்க் காட்சி அளிக்கும் வெண்மதியைப் பிள்ளையுடன் விளையாட வருமாறு சாம, பேத, தான, தண்டம் என்னும் நால்வகை முறைகளும் அமையுமாறு பாடுவது அம்புலிப் பருவம்.

தெருவில் இளஞ்சிறுமியர் சிறுவீடு கட்டி விளையாடுங்கால் சிறுவர் தம் காலால் அதனை அழித்தல் உண்டு. தம் சிற்றிலைச் சிதைக்கவரும் சிறுவரைச் சிறுமியர் 'எஞ்சிற்றில் சிதையேல்' என வேண்டிப் பாடுவது சிற்றில் பருவம். குழந்தை வீதியில் சிறுபறை கொட்டி விளையாடுவதைப் பாடுவது சிறுபறைப் பருவமாகும். அவ்வாறே வீதியில் சிறுதேர் உருட்டி விளையாடுவதைப் பாடுவது சிறுதேர்ப்பருவம்.

இளஞ்சிறுமிகள் கழங்காடுவதாகவும், ஊசலாடுவதாகவும், அம்மானை யாடுவதாகவும் வருகின்ற பகுதிகளே கழங்கு, ஊசல், அம்மானை முதலிய பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவங்களாகும்.

இப்பாடல்கள் பிள்ளைமைப் பருவத்தை முதன்மையாக வைத்துப் பாடப்பெற்றிருந்தாலும், பாட்டுடைத் தலைவனின் வீரச் செயல்கள், திருக்குணங்கள் முதலியன இவற்றுள் சிறப்பாகக் கூறப்படுகின்றன.

**பருவங்களில் வேறுபாடு**

சிதம்பரப் பாட்டியலும், இலக்கண விளக்கப் பாட்டியலும் பெண்பாற் பிள்ளைத் தமிழின் இறுதியில் கழங்கு, அம்மானை, ஊசல் ஆகிய மூன்று பருவங்கள் பாடுதல் வேண்டும் எனக் கூறுகின்றன. சிற்றிலிழைத்தல், சிறுசோறாக்கல், குழமகன்,

காமவேள் நோன்பு முதலிய பருவங்களையும் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூலில் வைத்துப் பாடலாம் என்பதை,

"சிற்றில் இழைத்தல் சிறுசோ றாக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி ஊசல்
ஆண்டீ ராறதில் எழிற்காமன் நோன்பொடு
வேண்டுதல் தானுள விளம்பினர் புலவர்"[23]

என்று பன்னிருபாட்டியல் கூறுகிறது. மேலும் பிங்கலந்தை நோன்பு, நீராடல், பாவையாடல், அம்மானை, கழங்கு, பந்தடித்தல், சிறுசோறடுதல், சிற்றிலிழைத்தல், ஊசலாடல் முதலியவை பெண்பாற் பிள்ளைத்தமிழில் வைத்துப் பாடுதற் குரியவை என்கிறது.[24]

இங்ஙனம் பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களின் இறுதியில் அமைய வேண்டிய மூன்று பருவங்களைக் குறித்துப் பாட்டியல் நூல்களுக்கிடையே வேறுபாடு நிறைந்திருக்கின்றது. ஆயினும் பெரும்பான்மையான நூல்களில் அம்மானை நீராடல், ஊசல் ஆகியவை இடம் பெற்றுள்ளன. ஆண்டாள் பிள்ளைத்தமிழில் காமவேள் நோன்பும், சிவயோகநாயகி பிள்ளைத்தமிழில் கழங்காடுதலும் இடம்பெற்றுள்ளன.

**பாடல் எண்ணிக்கையில் மாற்றம்**

ஒவ்வொரு பருவத்திற்கும் பத்துப்பாடல்கள் பாடுவதே பெரும்பான்மையான பிள்ளைத்தமிழ் நூல்களின் மரபாகும். ஆயினும் படிக்காசர் இயற்றிய சிவந்தெழுந்த பல்லவன் பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஏழு பாடல்களே காணப்படுகின்றன. கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஐந்து பாடல்கள் உள்ளன, பழனி பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் மூன்று பாடல்கள் உள்ளன. வ. சு. செங்கல்வராயபிள்ளை எழுதிய திருஞானசம்பத்தர் பிள்ளைத்தமிழிலும், மு.கோ. இராமன் எழுதிய திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழிலும் ஒவ்வொரு பருவத்திற்கு ஒரு பாடல் வீதம் நூல் முழுவதுமே பத்துப்பாடல்கள் அமைந்துள்ளன. இவை பிள்ளைத்தமிழ்

பாடல்களின் எண்ணிக்கையளவில் காணப்பெறும் மாற்றங்களாகும்.

**பெயர்**

பிள்ளைத்தமிழ் நூல்கள் பெயர்பெறுவதிலும் ஒரு வரையறைக்கு உட்பட்டிருப்பதைக் காணலாம். இறைவன்மீது அல்லது இறைவி மீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ் நூல்கள் அவர்கள் பெயராலோ, எழுந்தருளியிருக்கும் அவர்களின் பெயர்களோடு சார்த்தியோ வழங்கப்படுகின்றன. அழகர் பிள்ளைத்தமிழ், சேது பர்வதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ், சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் முதலியன இம்முறையில் பெயர்பெற்று அமைந்தவையாகும். பெயர்பெறும் முறையைப் பொறுத்த வரை ஏறக்குறைய எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களும் இவ் வரையறையில் அடங்குவதைக் காணலாம்.

**சிவபெருமான்**

பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானுக்குப் பிள்ளைத்தமிழ் பாடும் மரபு இல்லை. 'குழவி மருங்கினும் கிழவதாகும்'[25] என்னும் நூற்பா விளக்கத்தில் 'மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்க' என்று நச்சினார்க்கினியர் விளக்கம் உரைத்திருப்பினும் பிற்காலத்தில் தெய்வக் குழந்தைக்கும் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடுகின்ற ஒரு மரபு ஏற்பட்டது. ஆயினும் திருமால், அம்மை, விநாயகர், முருகன் முதலிய தெய்வங்கட்குத்தான் பிள்ளைத் தமிழ் பாடப்பட்டனவேயன்றிச் சிவபெருமானுக்குப் பிள்ளைத்தமிழ் பாடப்பெறவில்லை என்பது அறியத்தக்கதாகும்.

பிள்ளைத்தமிழில் சிவனைக் குழந்தையாகக் காண இயலாவிட்டாலும் திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதியார்,

"எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத் தலம்பவன்பரிதய மென்னுஞ்
செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத் தேன்றதும்பு தெய்வக் கஞ்சத்

தொழுதருசிற் றடிப்பெரிய விரல்சுவைத்து மைக்கணீர்
துளும்ப வாய்விட்
டழுதனையா டையிற்கிடந்தா னனைத்துயிரு மீன்றுகாத்
தழிக்கு மப்பன்''[26]

என்று குறிக்கின்றார். இச்செய்யுள் இறைவனாகிய சிவ பெருமான் குழவியாகி அழுகின்ற காட்சியினை எடுத்துரைக் கின்றது.

**பிள்ளைமை இன்பம்**

பிள்ளைத்தமிழ் பாடுதற்கு அன்புள்ளமே அடிப்படையா கும் மக்கள் தங்கள் குழந்தைகளைப் பெருஞ் செல்வமாகப் போற்றி வந்தார்கள். இதனை,

''மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு''[27]

என்பதனால் அறியலாம். இதனால் குழந்தைகள் வாழ்வின் செல்வங்கள் என்பதை வள்ளுவர் நன்கு எடுத்துகாட்டுகின் றார். மேலும் அவர், 'அமிழ்தத்தைக் காட்டிலும் இனிமை யானது குழந்தைகள் தங்கள் கைகளை இட்டுத் துழாவிய கூழ்' என்றும், 'யாழைக் காட்டிலும் குழலைக் காட்டிலும் செவி களுக்கு இன்பம் அளிப்பது அவர்களுடைய மழலைச் சொற் களே' என்றும் சிறப்பாகக் குறிப்பிட்டுப் பேசுவதனை,

''அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்''[28]
''குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளாதவர்''[28அ]

என்னும் குறட்பாக்களால் அறியலாம்.

பெரியாழ்வாரின் திருமொழியிலே உள்ள தால், முத்தம், செங்கீரை, சப்பாணி, அம்புலி, தளர்நடை (வருகை) முதலியன பிற்காலப் பிள்ளைத்தமிழ் நூல்களில் தனித்தனிப் பருவங்க ளாக அமைந்தன. அச்சோ, புறம்புல்கல், அப்பூச்சி காட்டுதல் (ஒளிந்திருந்து பூச்சி காட்டுதல்), தாய்ப்பால் உண்ண

அழைத்தல், காதுகுத்தல், குழல்வாரக் காக்கையை வாவெனல், பூச்சூட்டவாராய் எனல், காப்பிட வாராய் எனல், ஆயர் மங்கையர் முறையிடல் முதலியன பிள்ளைத்தமிழ் நூல்களில் இடம்பெறாதவை. 'சிற்றில் சிதையேலெனல்' ஆண்டாளின் நாச்சியார் திருமொழியிலும் (நாமமாயிரம்), சப்பாணி, வெண்ணெய் உணல் முதலியன திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியிலும் காணப்படுகின்றன. இவை யனைத்தும் திருமாலின் பிள்ளைப்பருவத்தைப் போற்றி ஆழ்வார்கள் அன்பால் விளைவித்த அருந் தமிழ்ச் செய்யுட்களாகும்; பிற் காலத்து எழுந்த பிள்ளைத்தமிழின் இலக்கியப் போக்கினைப் பெற்றனவாகும்.

## தாலாட்டு

குழந்தைகளைத் துயிலுறச் செய்வோர் நாவை (தால்-நாக்கு) அசைத்து ஒலியெழுப்பிப் பாடல்பாடித் 'தாலேலோ' என்று சொல்லிக் குழந்தையினை உறங்கவைப்பர். பக்தி யினாலே கனிந்த பெரியாழ்வாரின் உள்ளத்தில் பூவைப்பூ வண்ணனாகிய கண்ணன் குழந்தைக் கோலம் கொண்டு காட்சி யளிக்கிறான். அவன் உருவ அழகினை உள்ளங்கால் முதல் உச்சிவரை பாதாதிகேசமாகப் பார்த்து அனுபவிக்கிறார்.

குழந்தைக் கண்ணன் அழுகிறான் என்ற ஓர் எண்ணம் ஆழ்வாருக்குத் தோன்றுகிறது. உலகினைப் படைத்த பிரமனே படைத்துத் தேர்ந்த தன் கைகளால் அழகிய சிறு தொட்டிலை ஆணிப் பொன்னாலே செய்து, அதில் மாணிக்கமும் வயிரமும் இழைத்துச் செய்து அனுப்புகிறான். ஆழ்வார் கண்ணனை,

"மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி,
ஆணிப்பொன் னாற்செய்த வண்ணச் சிறுத்தொட்டில்,
பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்,
மாணிக் குறளனே தாலேலோ,
வையம ளந்தானே தாலேலோ"[20]

என்று பாடித் தாலாட்டுகிறார்.

தொட்டிலில் கிடத்திய குழந்தைக்கு ஆழ்வார் பல அணி களைப் பூட்டி அலங்கரிக்க வேண்டுமென்று விரும்புகிறார். அவர் நினைத்தவுடன் தேவர்களெல்லாம் ஓடிவந்து பற்பல அணிவகைகளையும் கொண்டுவந்து குவிக்கின்றனர். சின்னஞ் சிறுகாலில் அணிவதற்கேற்ற கிண்கிணியொன்றை இந்திரன் தந்து அனுப்பினான் என்பதனை,

"எந்தம் பிரானா ரெழில்திரு மார்வர்க்குச்
சந்த மழகிய தாமரைத் தாளர்க்கு
இந்திரன் தானு மெழி லுடைக் கிண்கிணி
தந்துவ னாய்நின் றான் தாலேலோ
தாமரைக் கண்ணனே தாலேலோ"[30]

என்ற பாடலால் சுட்டியுள்ளார் ஆழ்வார். குழந்தையைக் கண்குளிரப் பார்க்கவேண்டுமென்ற விருப்பத்தினாலும், குழந்தையாயினும் இறைவனாயிற்றே என்ற பக்தியினாலும், குழந்தையை விட்டு வெகுதொலைவிலும் போகாமல் அதிக சமீபத்திலும் வந்து விடாமல் நடுவே நின்று உற்று உற்றுப் பார்க்கிறான் என்று இந்திரனைப் பற்றிக் கூறுகிறார்.

சங்கின் வலம்புரியும், சேவடிக்கேற்ற பல கிண்கிணிகளும், அங்கைக்கேற்ற சரிவளையும், அரையிலணிதற்கு நாணும் தேவர்கள் கொண்டுவந்து தருகின்றனர். குபேரனோ மார்பில் அணிதற்கென்று மாலையும், ஐம்படைத்தாலியும் தருகிறான்.

"ஓதக் கடலி னொளிமுத்தி னாரமும்,
சாதிப் பவளமும் சந்தச் சரிவளையும்,
மாதக்க வென்று வருணன் விடுதந்தான்,
சோதிச் சுடர்முடியாய் தாலேலோ,
சுந்தரத் தோளனே தாலேலோ"[31]

என்னும் பாடலில் வருணன் கடல் முத்து, உயர்ந்த சாதிப் பவளம், அருமையான சங்குவளை ஆகியவற்றை அனுப்பிய தாகக் கூறுகிறார்.

ஈசனோ அழகுமிக்க மணிகளும் ஒளிமிக்க மாதுளம்பூவும் தெழ்கும் (இடைச்சரிகை) இடைவிரவிக் கோத்த அணிகலனை அனுப்பிச் சிறப்பித்தான் என்கிறார் ஆழ்வார்.

இத்தகைய அணிவகைகளை ஆழ்வார் கண்ணனுக்குக் கற்பனையாக அணிவித்து,

"உடையாய் அழேலழேல் தாலேலோ
உலக மளந்தானே தாலேலோ"[32]

என்று தாலாட்டுகிறார்.

அணிகள் பல பெற்றும் அம்மாயக் குழவி அழுகையை நிறுத்தவில்லை. அவனுக்கு என்னதான் ஆடைகளும் அணி கலன்களும் பிறர்கொண்டு வந்து கொடுத்த போதிலும் அவன் மனத்திலே நிறைவு ஏற்படவில்லை. அவனுக்கு உரியவளான திருமகள் ஒன்றையும் அனுப்பாதது ஒரு குறையாகத் தெரிந்தது. திருமால் திருமகளைத் தம் மார்பில் வைத்திருக்கிறார். அவ்வளவு அருமை பொருந்திய திருமகளின் அன்புக்கு அடையாளமான பொருள் ஏதேனும் வராததால் அவன் அழுகிறானாம்.

ஆழ்வார் தொட்டிலில் கண்வளர்த்திய மாயக் கண்ணனுக்குத் திருமகளும் விரைந்து அன்போடு ஒரு கையுறை அனுப்புகிறாள். காட்டிலே தழைத்து அருமையான மணம் வீசும் துழாய் மாலையே அவள் தந்தது. அந்த மாலையில் திருமகளின் கைவண்ணமெல்லாம் அமைந்திருக்கிறது.

"கானார் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்
வானார் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்
தேனார் மலர்மேல் திருமங்கை போத்தந்தாள்
கோனே அழேலழேல் தாலேலோ
குடந்தைக் கிடந்தானே தாலேலோ"[33]

என்பது ஆழ்வாரின் பாசுரம்.

திருமகள் கண்ணனுக்குத் தன் கையுலறயை அனுப்பியதும் பூமிதேவி தானும் சில கையுறைகளை அனுப்புகிறாள். கச்சு, சுரிகை, பொன்வளை, சுட்டி, தான் அணியும் பொற்பூக்கள் என்றெல்லாம் பல பொருள்களை அச்சுதனுக்கென்றே அவள் தருகிறாள் என்பதனை,

"கச்சொடு பொற்சுரிகை காம்பு கனகவளை,
உச்சி மணிச்சுட்டி ஒண்தாள் நிரைப்பொற்பூ,
அச்சுத னுக்கென் றவனியாள் போத்தந் தாள்"[34]

என்னும் பாசுரத்தான் தெரிவிக்கிறார்.

திருமகளையும் புவிமகளையும் இவ்வாறு எண்ணி அழைத்துக் தாலாட்டிய ஆழ்வாருடைய கலையுள்ளத்தில் இச் சக்திகளுக்கெல்லாம் மூல சக்தியாகிய அன்னை பராசக்திக்கு இடமில்லாமல் போகவில்லை. உறங்கி விழித்தெழுந்தவுடனே அவனை நீராட்ட வேண்டுமென்ற கருத்தோடு பராசக்தி யானவள் வந்து நிற்கிறாள். குழந்தையை நீராட்டுவதற்கேற்ற நானப் பொடியும், மஞ்சளும் வைத்திருக்கிறாள். நீராட்டிய பின் நெற்றியில் திலகமிடுவதற்காக சிந்துரமும், கண்ணில் அழகுபெற இடுவதற்கான அஞ்சனமும் அவள் கொண்டு வந் திருக்கிறாள். இவ்வளவையும் கற்பனைசெய்து ஆழ்வார்,

"மெய்திமிரும் நானப் பொடியோடு மஞ்சளும்,
செய்ய தடங்கண்ணுக் கஞ்சனமும் சிந்துரமும்,
வெய்ய கலைப்பாகி கொண்டு வளாய்நின்றாள்,
ஐயா அழேலழேல் தாலேலோ;
அரங்கத் தணையானே தாலேலோ"[35]

என்று தாலாட்டுகிறார்.

இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் தாலாட்டுப் பாடுகின்ற ஒரு தாயை நமக்குப் படைத்துத் தந்திருக்கிறார். கவிஞரே தாயாகப் பாடுகிறார். கவிஞருடைய மனம் ஆழ்வார்களின் அருட்பாடல் களில் பெரிதும் ஈடுபாடு கொண்டது. ஆதலால் அதற் கேற்றவாறு குழந்தையும் காட்சியளிக்கிறது.

"நாலா யிரக்கனியின்
நல்லமுதம் உண்டிடமால்
பாலாழி நீங்கியொரு
பாலகனாய் வந்தானோ"[36]
"ஆயர் பதியில்
அற்புதங்கள் செய்துநின்ற
மாயவனே இங்கெமக்கு
மகனாகி வந்தானோ"[37]
"பெண்கள் சிறுவீட்டைப்
பேணா தழித்தவர்தம்
கண்கள் சிவக்கவைக்கும்
கண்ணபிரான் நீதானோ"[38]

என்று அவருடைய பக்தி, தாலாட்டாக வெளிப்படுவதைக் காண்கிறோம்.

**அம்புலிப்பருவம்**

மழலைகள் உணவுண்ண மறுப்பினும், சிறுகுறும்பு செய்யினும் மதியம் காட்டுவது பண்டைத் தமிழர் மரபு. சங்க இலக்கியங்களில் இதைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

"மறப்புலி யுரைத்து மதியங் காட்டியு
நொந்தனை ளாகி"[39]

என்று புறநானூறு கூறுகிறது. அம்புலி காட்டும் வழக்கினை இன்றும் தமிழ்நாட்டில் காணலாம்.

கண்ணபிரானுக்குத் தொட்டில் பருவம் நீங்கித் தவழ்ந்து விளையாடத்தக்க பருவமான பின்பு அவன் நிலாமுற்றத்திற்கு வந்து சந்திரனை அழைப்பதான படியை யசோதை அனுபவித்து அவனை மகிழ்விக்க மதியத்தை வரக்கூறித் தான் பலகாலும் அழைத்த தன்மையை ஆழ்வார் தானும் பேசி இனியராகிறார்.

"இளஞ்சந்திரனே! நெற்றிச் சுட்டியானது அசைந்தாட, காலில் அணிந்துள்ள பொன் கிண்கிணிகள் ஆரவாரிக்க என்

மகன் கோவிந்தன் தவழ்ந்து சென்று புழுதியில் அளைந்து கூத் தாடுகின்ற அழகினை உன் முகத்தில் கண்ணிருந்தால் பார்த்து மகிழ்வாயாக" என்பதனை,

"தன்முகத் துச்சுட்டி தூங்கத்
தூங்கத் தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணி யார்ப்பப்
புழுதி யளைகின்றான்
என்மகன் கோவிந்தன் கூத்தி
னை இள மாமதீ
நின்முகம் கண்ணுள வாகில்
நீஇங்கே நோக்கிப்போ"[40]

என்னும் பாசுரம் அறிவுறுத்தக் காணலாம்.

"என்னுடைய இன்னமுதம் போன்றவனாகிய கண்ண பிரான் தன் அழகிய சிறு கைகளினால் உன்னைக்காட்டி அழைக்கின்றான். இந்த அஞ்சன வண்ணனோடு விளையாடக் கருதுவாயாகில் மேகத்தில் மறையாமல் விரைந்தோடி வருவாயாக" என்று வேண்டுவதனை அடுத்த பாடல் உணர்த் துகிறது. 'மஞ்சில் மறையாதே மாமதி மகிழ்ந்தோடிவா'[41] என்னும் ஈற்றடியில் அன்பு கனிந்து காணப்படுகிறது.

இவ்வாறு அவள் குழந்தையுடன் விளையாடிக் கொண்டி ருக்கும் போது மேகத்திலிருந்து முழுமதி வெளிப்படுகிறது. அந்தச் சந்திர வட்டத்தையும் தன் மகனின் முகமதியையும் ஒப் பிட்டுப் பேசுகிறாள் யசோதை. மதியம் க்ஷயமும் களங்கமும் நீங்கப்பெற்று வந்தாலும் கண்ணனுடைய திருமுக மண்டலத் திற்குச் சிறிதும் ஒப்பாக மாட்டாது என்னும் கருத்தமைய அடுத்த பாசுரம் விளக்குகிறது:

"சுற்று மொளிவட்டம் சூழ்ந்து
சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யினும் என்ம
கன்முகம் நேரொவ்வாய்

வித்தகன் வேங்கட வாணன்
உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே அம்பு
லீ!கடி தோடிவா''[42]

அந்த ஒளிவட்டம் சுற்றிச் சூழ்ந்து பார்த்துப் பார்த்துப் பல விதமாகத் தன்னைத் திருத்தித் திரைமறைவிலே சென்று அழகு செய்துகொண்டு எவ்வளவு சோதியைப் பரப்பிவந்த போதிலும் தன் மகனுடைய முகத்திற்கு நிகராகாது என்று கூறுகிறது தாயுள்ளம்.

''மக்கள் பெறாத மலடன் அல்லையேல் வாகண்டாய்''[43] என்று கூறுகிறது அடுத்த பாசுரம்.

கண்ணனுடைய அழகிய வாயில் ஊறும் அமிர்தத்தில் மழலைச் சொல் தோய்ந்து வருகிறது. அச்சொல்லினை மழலை முற்றா இளஞ்சொல் என்கிறாள் யசோதை. அது காதில் விழவில்லையென்றால் செவி துளையற்றதோ என்று வினவுகிறாள்.

''அழகிய வாயில் அமுத
ஊறல் தெளிவுறா
மழலை முற்றாத இளஞ்சொல்லா
லுன்னைக் கூவுகின்றான்
குழகன் சிரீதரன் கூவக்
கூவநீ போதியேல்
புழையில வாகா தேநின்
செவிபுகர் மாமதீ''[44]

என்ற அன்னையின் சொல்லில் சினக்குறிப்பைக் காண்கிறோம்.

''அவனைச் சிறுவன் என்று இகழாதே. ஊழி முடிவில் ஆலிலையில் கண்வளர்ந்த பெருமான் இவன். உன்மேல் சீற்றம் கொள்வானாயின் பாய்ந்து உன்னைப் பிடித்துக்கொள்ளுவான். என் இளஞ்சிங்கத்தைச் சிறியவனென்று இகழ்ந்து கூறாதே. அவ்வாறு இகழ்ந்த மாவலியினிடத்தில் அவன் பெருமையைக்

கேட்பாயாக" என்று தாய் சந்திரனை அச்சுறுத்திப் பேசுகிறாள்:

"சிறியனென் றென்னிளஞ் சிங்கத்தை
இகழேல் கண்டாய்
சிறுமையின் வார்த்தையை மாவலி
யினிடைச் சென்றுகேள்"[45]

என்கிறது பாசுரம்.

"ஆழிகொண்டு உன்னை எறியும் ஐயுறவில்லைகாண்"[46] என்று அவன் சக்கரப்படையிலிருந்து தப்பிக்க வேண்டுமானால் உடன் மகிழ்ந்தோடி வருகவென்கிறாள்.

அம்புலி காட்டுதல் என்ற வழக்கினைக் கம்பரும் தம் காப்பியத்தில் கையாள்கிறார். இலக்குவன் ஏவிய அம்பினால் இந்திரசித்து நிலத்திடை வீழ்ந்து இறந்து கிடக்கிறான். அந்த நிலையைக் கண்டு அவன் அன்னை மண்டோதரி மயங்கி,

"அம்புலி யம்ம வாவென் றழைத்தலு மவிர்வெண்
டிங்கள்
இம்பர்வந் தானை யஞ்ச லெனவிரு கரத்தி னேந்தி
வம்புறு மறுவைப் பற்றி முயலென வாங்கும் வண்ணம்
எம்பெருங் களிறே காண வேசற்றே னெழுந்
திராயோ"[47]

என்று புலம்புகிறாள்.

மதியினிடத்துள்ள மறுவை மானாகவும், முயலாகவும் கூறுதல் மரபு. இந்திரசித்து என்ற மேகநாதன் சிறு குழந்தையாயிருந்தபோது அவனுடைய தாயானவள் அவனைத் தன் இடையிலே வைத்துக் கொண்டு அம்புலி காட்டுகின்றாள். அப்போது குழந்தை அம்புலியை விளையாட அழைக்கிறது. சுரபதியாகிற அகண்டலனையே வெல்லும் ஆற்றல் படைத்த சிறுவன் அழைப்பிற்கிணங்கிச் செல்லாவிடின் என்ன துன்பம் ஏற்படுமோ என்று அஞ்சி அம்புலி கீழே இறங்கிவருகிறது. உடனே குழந்தை தன் முன் நடுங்கிநின்ற மதியைக் கண்டு

அஞ்சாதே எனக்கூறி அதில் உள்ள மறுவை முயல் எனக்கருதி அதனைத் தன் விளையாட்டிற்காக எடுத்துக் கொண்டது இந்தப் பண்டைய நிகழ்ச்சி மயன்மகள் நினைவில் தோன்ற அவள் மிக்க வருத்தத்துடன் "களிறு போல்வானே உன் இளம்பிராயத்தில் நீவிளையாடிய வண்ணம் மீண்டும் ஒரு முறை விளையாட மாட்டாயா? அதனை நான் காணமாட்டேனா?" என்று கல்நெஞ்சம் உருகுமாறு கூறுவதைக் காணலாம்.

அம்புலியை மகனுடன் ஆட அழைப்பதில் பெரியாழ்வார் மேற்கொள்ளும் வழிவகைகளை எல்லாம் பிற்காலப் பிள்ளைத் தமிழ் நூல்களில் சாம, பேத, தான, தண்ட உபாயங்களாக வகுத்துக் கூறக் காண்கிறோம்.

**மழலை/முத்தம்/சப்பாணிப் பருவங்கள்**

கண்ணனின் முத்தப் பருவம், மழலைப் பருவம், சப்பாணிப் பருவம் ஆகியவற்றைப் பெரியாழ்வார் சுருக்கமாகப் பாடியுள்ளார். அமரகவி பாரதியார் எழுதிய 'கண்ணன் பாட்டு' என்ற நூலில் உள்ள 'கண்ணம்மா—என் குழந்தை' என்ற பாடலில் ஆழ்வார் பாசுரங்களின் மணம் வீசுகிறது.

"அழகிய வாயில் அமுத
ஊறல் தெளிவுறா
மழலை முற்றாத இளஞ்சொல்லால்"[48]

என்று கண்ணனின் மழலைச் சொல்லைப் பாராட்டிப் பாடினார் பெரியாழ்வார். பாரதியார் கண்ணனாகிய குழந்தையின் மழலைச் சொல்லையும் இளமைச் சிரிப்பையும் அழகுத் தோற்றத்தையும் இன்புற்றுப் பாடுங்கால்,

"பிள்ளைக் கனியமுதே—கண்ணம்மா
பேசும் பொற்சித்திரமே"[49]
"சொல்லு மழலையிலே—கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்திடுவாய்"[50]
"இன்பக் கதைகளெல்லாம்—உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ?"[51]

"சீர்பெற்று வாழ்வதற்கே—உன்னைப்போல்
செல்வம் பிறிது முண்டோ?"[52]

என்றெல்லாம் அழகும் இன்பமும் ததும்பப் பாடுகிறார்.

கண்ணன் முத்தந்தரும் அழகினைப் பெரியாழ்வார் மிகவும் சுவைத்துப் பாடுகிறார்.

"கன்னற் குடம்திறந் தாலொத் தூறிக்
கணகண சிரித்துவந்து
முன்வந்து நின்று முத்தந் தருமென்
முகில்வண்ணன் திருமார்வன்"[53]

என்பது பாசுரம். பாரதியார் இதனை,

"கன்னத்தில் முத்தமிட்டால்—உள்ளந்தான்
கள்வெறி கொள்ளுதடி'?[54]

என்று உணர்ச்சிமிகப் பாடுகிறார்.

பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது செங்கீரைப் பருவமாகும். இவ்வொலி மழலையைக் காட்டிலும் இளம் பருவத்தையுடையது. மழலையேனும் ஒரு வகையில் பொருள்செய்தற்குரியதாகும். இது வெறும் ஒலி மாத்திரமாய்த் தோற்றுவது. தொடையமைதிகள் இல்லாத ஒன்றைச் செந்தொடை என்பது போலச் சொல்லுக்கு அமைதி இல்லாததைச் செங்கீரை செய்தல் என்றனர்.[55]

(கீர்—சொல்) 'செங்கீரை யாடுக' என்னும் வழக்கை நோக்கி அதனைக் குழந்தைகள்பால் இயல்பினமைந்த ஆடற் சிறப் பென்று கொள்வது உண்டு. "ஒரு காலைப் பதித்து ஒரு காலைத் தூக்கி இருபுறத்தும் தலையசைத்துக் கிளி சாய்ந் தாடுவது போலக் குழந்தை யாடுவது" செங்கீரை என்பர்.[56]

குமரகுருபரர் இந்த இரண்டாவது பொருளிலேயே செங் கீரைப் பருவத்தைப் பாடி மகிழ்கிறார்.

"ஒருதா ளுந்தி யெழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்
தருள்மொழி திருமுக மசைட வசைந்தினி
தாடுக செங்கீரை"[57]

என்று குமரகுருபரர் முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழில் அழகாகப் பாடியுள்ளார்.

கண்ணன் தான் பிறந்த ஐந்தாம் மாதம் தலையை நிமிர்த்தி அசைந்து அசைந்து ஆடுகிறான். மேலும் மேலும் இந்த விளையாட்டைக் கண்டு களிக்கவேண்டுமென யசோதைக்குத் தோன்றுகிறது. இதனை,

"செய்யவள் நின்னகலம் சேமமெனக் கருதிச்
செல்வுபொ லிமகரக் காது திகழ்ந்திலக
ஐயவெனக் கொருகா லாடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே ஆடுக ஆடுகவே"[58]

என்கிறார் ஆழ்வார்.

கண்ணன் இரு கைகளையும் முழங்கால்களையும் ஊன்றித் தலை நிமிர்ந்ததுமே யசோதையின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவ்வாறு தலைநிமிர்ந்து ஆடும்போது குழந்தையின் காதுகளிலுள்ள மகரகுண்டலங்கள் ஒளிவீசுகின்றன. இந்தக் குண்டலங்கள் அவனுடைய அழகுக்கு அழகு சேர்ப்பது போலிருந்தன. "இன்னும் இளநகை முற்றவில்லை. முத்துப் போன்ற பற்கள் வெளிப்படும்படியாகச் சிரிக்கத் தெரியவில்லை. அதற்குரிய பருவமாகவில்லை" என்றெல்லாம் தனக்குள் கூறிக் கொண்டு அந்தப் புன்னகையில் மயங்கிவிடுகிறாள் யசோதை.

"முத்தினி ளமுறுவல் முற்றவ ருவதன்முன்
முன்னமு கத்தணியார் மொய்குழல் களலையு
அத்த! எ னக்கொருகா லாடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே ஆடுக ஆடுகவே"[59]

என்று குழந்தையைப் பாராட்டி யசோதை பெருமகிழ்ச்சி அடைகிறாள்.

"கோல நறும்பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளிமுளைப் போல்சில பல்லிலக
நீலநி றத்தழகா ரைம்படை யின்நடுவே
நின்கனி வாயமுத மிற்றுமு றிந்துவிழ
ஏலும றைப்பொருளே ஆடுக செங்கீரை
ஏழுல கும்முடையாய் ஆடுக ஆடுகவே"[60]

என்னும் அழகான குழந்தைச் சித்திரத்தைப் பெரியாழ்வார் படம்பிடித்துக் காட்டுகிறார். பவளம் போன்ற இதழ்களிடையே கோமளமான வெள்ளி முளைபோல் சில பற்கள் இலங்குகின்றன. கண்ணன் வாய்திறந்து நகைக்கும்போது 'பவளத்திற்கிடையே வெள்ளியரும்புகள்' என்று கூறுமாறு அச் சிறுபற்கள் காட்சியளிக்கின்றன என்கிறார்.

கண்ணன் கைகொட்டி விளையாடும்போது மாணிக்கத்தை உள்ளே இட்டுச் செய்த அரைச் சதங்கைகள் கிண்கிண் என்று ஒலி செய்கின்றன. இதைக் காணலுற்ற ஆழ்வார்,

"மாணிக்கக் கிண்கிணி யார்ப்ப மருங்கின்மேல்
ஆணிப்பொன் னாற்செய்த ஆய்பொன் னுடைமணி
பேணிப் பவளவாய் முத்திலங்கப் பண்டு
காணி கொண்ட கைகளால் சப்பாணி
கருங்குழற் குட்டனே சப்பாணி"[61]

என்று கண்ணனை நோக்கிக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டுகிறார். இது குழந்தையை இரு கைகளையும் ஓசையெழக் கொட்டும்படி கேட்கும் பருவமாகும். இப்படிக் கை கொட்டுவது 'சப்பாணி' எனப்படும்.

"பண்டு காணிகொண்ட கைகளால் சப்பாணி" கொட்டும்படி இப்பாடலில் யசோதை வேண்டுகிறாள். முற்காலத்தில் மாவலியிடமிருந்து இந்தக் கைகளே தமக்கு உரிய நிலத்தை வாங்கிக் கொண்டன என்பது கருத்து.

இத்தகைய கைகளால் சப்பாணி கொட்டிக் கண்ணன் விளையாடிக் கொண்டிருந்தபோது தந்தையான நந்தகோபன்

அருகே உட்கார்ந்து அவ்விளையாட்டைக் காணலுற்றார். அப்போது யசோதை குழந்தையைப் பார்த்துத் தன் மடியிலிருந்து இறங்கிச் சென்று அவர் மடியிலிருந்து கைகொட்டு மாறு கேட்கிறாள். தன் மடியிலிருந்து சப்பாணி கொட்டுவதுடன் நந்தனது மடியிலுமிருந்து சப்பாணி கொட்டிக் காண்பதிலே பேரின்பம் காண்கிறார்.

தங்க அரை நாணொடு மாணிக்கக் கிண்கிணியும் அரையிலே ஒலிக்க, நெற்றிச் சுட்டி தாழ்ந்து ஆடக் குழந்தை தன் மடியிலிருந்து இறங்கிச் செல்லும்போது யசோதை,

"பொன்னரை நாணொடு மாணிக்கக் கிண்கிணி
தன்னரை யாடத் தனிச்சுட்டி தாழ்ந்தாட
என்னரை மேல்நின் றிழிந்தங்க ளாயர்தம்
மன்னரை மேல்கொட்டாய் சப்பாணி
மாயவனே! கொட்டாய் சப்பாணி"[62]

என்று பாடுவதாகப் பாசுரம் அமைந்துள்ளது.

**தளர்நடைப் பருவம்**

பெரியாழ்வார் தம்மை யசோதையாகக் கருதிக் கண்ணன் தளர்நடையிட்டு நடக்கும் நடையினைக் காண விரும்பி,

"தொடர்சங் கிலிகை சலார்பிலா ரென்னத்
தூங்குபொன் மணியொலிப்ப
படுமும் மதப்புனல் சோர வாரணம்
பையநின் றூர்வதுபோல்
உடன்கூடிக் கிண்கிணி யாரவா ரிப்ப
உடை மணி பறைகறங்க
தடந்தாளினை கொண்டு சார்ங்க பாணி
தளர்நடை நடவானோ"[63]

என்று கேட்கிறார்.

கண்ணன் தளர்நடை நடக்குங் காலத்து அரைச் சதங்கை நழுவி விழுந்து அடிகளில் இழுப்புண்டு ஒலிக்கிறது. நடக்கும்

களைப்பால் வியர்வை பெருகுகிறது. மதங்கொண்ட யானை யானது கட்டுத்தறியை முறித்துக் காலில் இட்ட இரும்புச் சங்கிலியைச் 'சலார்பிலார்' என்று இழுத்து இருபுறமும் தொங் கும் மணிகள் ஒலிக்க மதநீர் பெருக மெல்ல நடந்து வருவது போல் கண்ணபிரான் தளர்நடை நடந்து வருகிறான். அந்த நடையை மேன்மேலும் பார்க்க விரும்புகிறது யசோதையின் அன்பு உள்ளம்.

**அச்சோப் பருவம்**

குழந்தைக் கண்ணன் வரும்போதே 'சலன்சலன்' என்று சலங்கைகள் ஆரவாரிக்கின்றன. நீலமேகம் மின்னலுடன் கூடி வருவது போல் ஓடி வருகின்றான் கண்ணன். அப்படி ஓடிவந்து தன்னை அணைத்து இடையில் ஏறிக் கொள்வதை விரும்பி நிற் கிறது தாயின் உள்ளம்.

''பொன்னியற் கிண்கிணி சுட்டி புறங்கட்டி,
தன்னிய லோசை சலன்சல னென்றிட,
மின்னியல் மேகம் விரைந் தெதிர் வந்தாற்போல்,
என்னிடைக் கோட்டரா அச்சோ அச்சோ
எம்பெரு மான்வாரா யச்சோ அச்சோ''[6]

என்று கூறிக் குழந்தையைத் தன்னை வந்து அணைத்துக் கொள்ளுமாறு வேண்டுகிறாள் அன்னை. 'சலன்சலன்' என்று சலங்கைகள் ஒலிப்பது மின்னலோடு தோன்றும் மேகத்திலே சின்னஞ்சிறு இடிகள் இடிப்பதை நினைவுபடுத்துகின்றன.

கண்ணன் ஓடி விளையாடுதற்கு முன் தலையை வாரிவிட் டிருந்தாள் யசோதை. குழந்தை விளையாடியதால் தலைமுடி கலைந்து செந்நிறமான வாய்வரை தொங்கிக் கொண்டிருந்தது. இது செந்தாமரை மலரில் கரிய வண்டுகள் மொய்த்துக் கிடப் பதுபோல் காட்சியளித்தது. அந்நிலையில் கண்ணன் விரைந்து வந்து தன்னைத் தழுவிக் கொள்ள வேண்டுமென்கிறார்.

''செங்கம லப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல்,
பங்கிகள் வந்துன் பவளவாய் மொய்ப்ப,

சங்குவில் வாள்தண்டு சக்கர மேந்திய,
அங்கைக ளாலேவந் தச்சோ அச்சோ
ஆரத் தழுவாய்வந் தச்சோ அச்சோ"[65]

என்பது அக்கருத்தமைந்த பாசுரமாகும்.

இப்பாடலிலுள்ள பெரியாழ்வாரின் தாயுள்ளம் நம் உள்ளம் கவர்வதாகும். அதனால்தான் சங்கு முதலான ஐம் படைக் கருவிகள் ஏந்திய அழகிய கைகளால் தன்னைத் தழுவிக் கொள்ளுமாறு ஆழ்வார் வேண்டுகிறார். குழந்தைக் கண்ணன் பெரியாழ்வாருக்குத் தெய்வக் குழந்தையாவான். இதே உணர்ச்சியும் அன்பும் கொண்டு,

"பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து
நஞ்சுமிழ் நாகம் கிடந்தநற் பொய்கைபுக்கு
அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த
அஞ்சன வண்ணனே அச்சோ அச்சோ
ஆயர் பெருமானே அச்சோ அச்சோ"[66]

என்று பாடுகிறார். காளியனை அடக்கியது முன்னும், பாரதப் போர் செய்தது அதற்குப் பின்னும் நிகழ்ந்ததாயினும் பெரியாழ்வாரின் தாயன்பு அந்த வரலாற்று முறைமையினையும் மறந்து விடுகிறது. அந்தத் தெய்வக் குழந்தையின் வடிவழகில் பெரியாழ்வாராகிய யசோதை தன்னை மறந்து மயங்கி விடுகிறாள்.

**புறம்புல்கல்**

கண்ணபிரான் ஓடிவந்து தன்னை முதுகில் கட்டிக் கொள்வதை யசோதை அனுபவித்துக் கூறினாற் போலப் பெரியாழ்வாரும்,

"பொத்த வுரலைக் கவிழ்த்ததன் மேலேறி
தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயிறார விழுங்கிய
அத்தன்வந் தென்னைப் புறம்புல்குவான்
ஆழியா னென்னைப் புறம்புல்குவான்"[67]

என்று அருளிச் செய்கிறார்.

### பூச்சி காட்டுதல்

இளஞ்சிறுவர்கள் பூச்சிகாட்டி விளையாடுவது போலக் கண்ணபிரானும் பூச்சி காட்டி விளையாடியதை ஆழ்வாரும் அனுபவித்து இனியராதலை அவர் பாசுரங்கள் காட்டு கின்றன.

''மெச்சூது சங்க மிடத்தான்நல் வேயூதி
பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்
பத்தூர் பெறாதன்று பாரதம் கைசெய்த
அத்தூத னப்பூச்சி காட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்''[68]

என்பது இரண்டாம் பத்தில் உள்ள 'பூச்சி காட்டுதல்' பகுதியில் அமைந்த முதற்பாடல்.

### காக்கையை வாவெனல்

''பின்னை மணாளனைப் பேரில் கிடந்தானை
முன்னை யமரர் முதல்தனி வித்தினை
என்னையு மெங்கள் குடிமுழு தாட்கொண்ட
மன்னனை வந்துகுழல் வாராய்அக் காக்காய்
மாதவன் தன்குழல் வாராயக் காக்காய்''[69]

என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களில் ஆழ்வார் கண்ணனது குழல்வாரக் காக்கையை வாவென அழைக்கிறார். இப்பகுதியில் குழந்தையிடம் அவர் கொண்டுள்ள 'வாத்ஸல்ய பாவம்' காணப்படுகிறது.

### பூச்சூட்டல்

பெரியாழ்வார் கண்ணனைப் பூச்சூட்ட அழைக்கின்ற பகுதியில் செண்பகம், மல்லிகை, பாதிரி, செங்கழுநீர், புன்னை, குருக்கத்தி, இருவாட்சி, கருமுகை என்னும் எட்டுப் பூக்களையும் சூட்டவாராய் என்று பாடுகிறார்.

''தேனி லினிய பிரானே
செண்பகப் பூச்சூட்ட வாராய்''[70]

"மருவி மணங்கமழ் கின்ற
மல்லிகைப் பூச்சூட்ட வாராய்"[71]
"பச்சைத் தமனகத் தோடு
பாதிரிப் பூச்சூட்ட வாராய்"[72]
"தெள்ளிய நீரி லெழுந்த
செங்கழு நீர்சூட்ட வாராய்"[73]
"புன்னைப்பூச் சூட்டிட வாராய்"[73அ]
"குடந்தைக் கிடந்தவெங் கோவே
குருக்கத்திப் பூச்சூட்ட வாராய்"[74]
"இருவாட்சிப் பூச்சூட்ட வாராய்"[75]
"கருமுகைப் பூச்சூட்ட வாராய்"[76]

என்று பலவாறாக அருளிச் செய்து, இறுதியில்,

"செண்பக மல்லிகை யோடு
செங்கழு நீரிரு வாட்சி
எண்பகர் பூவும் கொணர்ந்தேன்
இன்றிவை சூட்டவா"[77]

என்று தான் எட்டு மலர்களையும் கொண்டு வந்ததாகக் கூறுகிறார்.

திருமங்கையாழ்வாரும்,

"கந்த மாமல ரெட்டுமிட்டு நின்காமர்
சேவடி கைதொழுதெழும்
புந்தியேன்"[78]

என எட்டு மலர் பற்றிக் கூறுகிறார்.

கன்னற்கட்டியும் தேனும் கலந்ததைப் போன்று இனிக்கும் கெடிலவீரட்டனார் சேவடி செல்பவராய், எட்டுவகைப்பட்ட நாண் மலர்களாகிய தேனவிழும் மலர்களை இட்டு வழிபடுபவருடைய வினைகள் மாயும் என்பதனை,

"எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்ட லரிடு வார்வினை மாயுமால்

கட்டித் தேன்கலந் தன்ன கெடிலவீ
ரட்ட னாரடி சேரு மவருக்கே''9

என்னும் பாடலால் குறிப்பிடுகிறார் திருநாவுக்கரசர்.

எட்டு நாண்மலர் என்பது அஷ்ட புஷ்பங்கள் எனப்படும்: புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், பாதிரி, குவளை, அலரி, செந்தாமரை என்பவை அவர் குறிப்பிடும் எண்வகை மலர்கள் ஆகும். அவர் எட்டு மலர்கள் கொண்டு இறைவனை வழிபட வேண்டும் என்ற கருத்தை இத்திருப் பதிகம் முழுதும் உரைக்கின்றார்.

கடவுளை வழிபடுதற்கு அன்பு, கொல்லாமை, பொறி யடக்கம், வாய்மை, பொறை, அருள், அறிவு, தவம் என்னும் எண்வகை மலர்கள் இன்றியமையாதன என்பதை இத்திருப் பதிகத்தில் குறிப்பிடுகிறார் அப்பர்.

பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் குறிப்பிடும் எண் வகை மலர்களையும் இவ்வாறே வழிபடுவோரின் எண்வகைப் பண்புகளுக்குக் குறியீடாகக் கொள்ளலாம்

**நீராட்டம்**

கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளையாய் இருந்தான். அவன் செய்த குறும்புகளுக்கும் அளவில்லை. கன்றுகள் ஓட அவற்றின் செவிகளில் கட்டெறும்புகளைப் பிடித்து விடுவான். இத்தகைய குறும்புச் செயல்களைப் பெரியாழ்வார் தம் பாசுரங் களில் பாடிக் காட்டுகிறார்.

கண்ணனை 'நீராட வாராய்' என்று அழைப்பதாக அமைந்த பகுதியில் ஆழ்வார்,

''கன்றுகளோடச் செவியில்
கட்டெறும் புபிடித் திட்டால்
தென்றிக் கெடுமாகில் வெண்ணெய்
திரட்டி விழுங்குமா காண்பன்''10

என்று குறிப்பிடுகிறார். பெரியாழ்வாரைப் போன்றே பாரதியாரும் கண்ணனின் குறும்புச் செயல்களைப் பாடுகிறார். கண்ணனின் வேடிக்கை விளையாடல்களைக் குறிப்பிடும் போது,

"அங்காந் திருக்கும்வாய் தனிலே—கண்ணன்
ஆறேழு கட்டெறும் பைப்போட்டு விடுவான்
எங்கா கிலும்பார்த்த துண்டோ—கண்ணன்
எங்களைச் செய்கின்ற வேடிக்கையொன் றா?"[81]

என்று இனிமையாகப் பாடி எல்லோரையும் இன்பத்தில் ஆழ்த்துகிறார்.

மேலும் கண்ணபிரான் எண்ணெய்க் குடத்தை உருட்டி இளம் பிள்ளைகளைக் கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்துத் தீம்புகள் பல செய்தான். இதனை ஆழ்வார்,

"எண்ணெய்க் குடத்தை யுருட்டி
இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக்
கண்ணைப் புரட்டி விழித்துக்
கழகண்டு செய்யும் பிரானே"[82]

என்று அருளிச் செய்கிறார்.

"கன்றினை வாலோலை கட்டிக்
கனிகளுதிர எறிந்து
பின்தொடர்ந் தோடியோர் பாம்பைப்
பிடித்துக்கொண் டாட்டினாய்"[83]

என்று பிறிதொரு பாட்டில் அவன் குறும்புகளைச் சுட்டுகிறார் ஆழ்வார்

**பிற நிகழ்ச்சிகள் — விளையாடல்கள்**

கண்ணபிரான் கண்ணில் மணல் தூவி விளையாடிய செயலை ஒரு பாடலில் ஆழ்வார் அருளிச் செய்கிறார்.

"கண்ணில்மணற்கொடு தூவிக்
காலினால் பாய்ந்தனை யென்றென்று

எண்ணரும் பிள்ளைகள் வ
டிவரால்மு றைப்படு கின்றார்"[84]

என்னும் பாசுரத்தால் இது கூறப்படுகிறது.

"மச்சொடு மாளிகை யேறி
மாதர்கள் தம்மிடம் புக்கு,
கச்சொடு பட்டைக் கிழித்துக்
காம்பு துகிலவை கீறி,
நிச்சலும் தீமைகள் செய்வாய்"[85]

என்று மகளிரிடத்தில் கண்ணன் தீம்புகள் செய்வதைப் பெரியாழ்வார் பாசுரம் சித்திரிக்கிறது.

பாரதியாரும் ஆழ்வாரைப் பின்பற்றிக் கண்ணனைப் பலவாறாகப் பாடி மகிழ்கிறார்:

"தின்னப் பழங்கொண்டுதருவான்—பாதி
தின்கின்ற போதிலே தட்டிப் பறிப்பான்
என்னப்பன் என்னையன் என்றால்—அதனை
எச்சிற் படுத்திக் கடித்துக் கொடுப்பான்"[86]

"தேனொத்த பண்டங்கள் கொண்டு—என்ன
செய்தாலும் எட்டாத உயரத்தில் வைப்பான்
மானொத்த பெண்ணடி என்பான்—சற்று
மனமகிழும் நேரத்தி லேகிள்ளி விடுவான்"[87]

"பின்னலைப் பின்னின் றிழுப்பான்—தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்
வண்ணப் புதுச்சேலை தனிலே—புழுதி
வாரிச் சொரிந்தே வருத்திக் குலைப்பான்"[88]

"அழகுள்ள மலர்கொண்டு வந்தே—என்னை
அழஅழச் செய்துபின் கண்ணை மூடிக்கொள்
குழலிலே சூட்டுவேன் என்பான்—என்னைக்
குருடாக்கி மலரினைத் தோழிக்கு வைப்பான்"[89]

ஆழ்வார் நெறிநின்ற பாரதியார், பிருந்தாவனத்தில் ஆயர் குலப் பெண்களுடன் கண்ணன் செய்யும் சிறு குறும்புகளை யெல்லாம் நம்முன் கொண்டுவந்து நிறுத்துகிறார்.

கண்ணன் அழகுள்ள மலர்கொண்டு வருகிறான். பெண்கள் அவனைச் சுற்றிச் சூழ்ந்து கொள்கின்றனர். மலர்களுக்காகப் பேரிரைச்சல் இடுகின்றனர். ஆனால் அவர்களுடன் தானும் ஒருவனாக ஆகாமல் 'கண்ணை மூடிக்கொண்டால் குழலிலே சூட்டுவேன்' என்று அவர்களுக்கு ஆசைகாட்டுகிறான். ஒன்றும் அறியாப் பெண்கள் அவன் சொற்படி கண்களை மூடிக் கொள் கின்றனர். ஆனால் கண்ணன் அவர்களை ஏமாற்றி மலர்களை அவர்களுக்குச் சூட்டாமல் வேறு பெண்களுக்குச் சூட்டுகிறான். இச்சூழ்நிலையை வருணிக்கும்போது பாரதியார் 'குருடாக்கி' என்ற சொற்றொடரைப் பயன்படுத்தியுள்ளார். அது காதல் வயப்பட்ட இருவகைக் குருட்டு நிலையையும் விளக்குகிறது. காதல் புறக்கண்களை மட்டும் குருடாக்குவதோடு அல்லாமல் அகக் கண்ணையும் இருளடையச் செய்கிறது.

"வெண்ணெய் எல்லாம் திருடி உண்டுவிட்டு, வெறுங்கலத் தைப் பாறைமேல் வீசி அதன் ஓசை கேட்டு மகிழ்கிறான் கண்ணன். அவன் கற்ற இவ்விளையாட்டைத் தடுக்க எங்க ளால் முடியவில்லை புண்ணில் புளி இடுவதுபோல் தீமையைச் செய்யவல்ல மகனைப் பெற்ற தாயே! யசோதை! உன் மகனை உன்னிடம் கூப்பிட்டுக்கொள்" என்று அயலார் முறையிடுகின் றார்கள். இதனைப் பெரியாழ்வார்,

"வெண்ணெய் விழுங்கி வெறுங்க லத்தை
வெற்பிடை யிட்டத னோசை கேட்கும்
கண்ண பிரான்கற்ற கல்வி தன்னைக்
காக்ககில் லோமுன் மகனைக் காவாய்
புண்ணில் புளிப்பெய்தா லொக்குந் தீமை
புரைபுரை யாலிவை செய்ய வல்ல
அண்ணற்கண் ணானோர் மகனைப் பெற்ற
அசோதை நங்காய்உன் மகனைக் கூவாய்"[91]

என்று 'பாலக்கிரீடை' பாசுரத்தில் அருளிச் செய்கிறார்.

'காப்பிடல்' என்ற பகுதியில் மேலும் ஒரு காட்சியைச் சித்திரிக்கிறார் பெரியாழ்வார்.

செப்போது மென்முலை யார்கள்
சிறுசோறு மில்லும் சிதைத்திட்டு,
அப்போது நானுரப் பப்போம்
அடிசிலு முண்டிலை யாள்வாய்,
முப்போதும் வானவ ரேத்தும்
முனிவர்கள் வெள்ளறை நின்றாய்,
இப்போது நானொன்றும் செய்யேன்
எம்பிரான் காப்பிட வாராய்''[1]

இது 'சிற்றில் சிதைத்தல்' என்னும் பிள்ளைத்தமிழ்ப் பருவச் செய்தியை உணர்த்துகிறது.

இடைக்குல நங்கை ஒருத்தி கறந்த பாலைப் பானையிலே ஊற்றி அடுப்பில் காய்ச்சுவதற்கு ஏற்றி வைக்கிறாள். அவள் தாய் மேலண்டை வீட்டிற்கு நெருப்பு வாங்கச் சென்றிருந்தாள் அவ்வாறு சென்றவள் அங்கே சிறிது நேரம் பேசிக்கொண் டிருந்து விட்டாள். அவ்வமயம் குறும்புக்காரனாகிய கண்ணன் அவ்வீட்டில் புகுந்து பாலைப் பருகி வெளியில் வந்துநின்றான். இதைக் கண்டவர்கள்,

''பாலைக் கறந்தடுப் பேற வைத்துப்
பல்வளை யாளென் மகளிருப்ப
மேலைய கத்தே நெருப்பு வேண்டிச்
சென்றிறைப் பொழுதங்கே பேசி நின்றேன்
சாளக்கி ராம முடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்
ஆலைக்க ரும்பின் மொழி யனைய
அசோதை நங்காய்உன் மகனைக் கூவாய்''[2]

என்று முறையிடுவதாக ஆழ்வார் பாடுகிறார்.

''கரும்புச் சாற்றில் செய்த அடை, சீடை, கரும்பு, எள்ளின் உருண்டை எல்லாவற்றையும் கலத்தில் இட்டு என்வீடு

ஆயிற்றே என மூடிவைத்து வந்தேன். உன் மகன் புகுந்து அவற்றையெல்லாம் தின்றுவிட்டு மேலும் வீட்டினுள் புகுந்து உறியைப் பார்த்து வெண்ணெய் இருக்கிறதா என்று ஆராய்கிறான். யசோதை நங்காய், உன் மகனை உன்னிடம் கூப்பிடு'' என்று ஆய்ச்சியர் முறையிடுவதாகப் பெரியாழ்வார் ஒரு பாடலில் குறிக்கின்றார்.[93]

கண்ணபிரான் ஆய்ச்சியர் வீட்டில் புகுந்து அவளுடைய கையிலிருந்த வளைகளைக் கழற்றிக்கொண்டு சென்று கொல்லையில் அங்கே நாவல் பழம் விற்ற ஒருத்திக்கு அவ்வளையலைக் கொடுத்துவிட்டு அவள் கொடுத்த நாவற் பழங்களை வாங்கிக் கொண்டு தன் களவு வெளியானதைத் தானே அறிந்து நகைத்தானாம். இதனைப் பெரியாழ்வார்,

''சொல்லி லரிசப் படுதி நங்காய்
குழலுடையனுன் பிள்ளை தானே
இல்லம் புகுந்தென் மகளைக் கூவிக்
கையில் வளையைக் கழற்றிக் கொண்டு
கொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற
அங்கொருத்திக்கவ் வளைகொ டுத்து
நல்லன நாவற் பழங்கள் கொண்டு
நானல் லேனென்று சிரிக்கின் றானே''[94]

என்ற பாசுரத்தால் அருளிச் செய்கிறார்.

கண்ணன் குறும்புகள் பல செய்பினும், துன்பம் கொடுப்பினும் யசோதைக்கு அது பெருமகிழ்ச்சியாகவே இருந்தது. கண்ணன் சகடம் உதைத்துச் சகடாசுரனைக் கொன்றது, தாய் போல் பால்கொடுக்கவந்த பேய்மகளைக் கொன்றது முதலான இளமை விளையாட்டுகள் தாய் உள்ளத்தை வருத்தியதில் வியப்பில்லை. எனவே அவள்,

அம்மா! உன்னை யறிந்துகொண் டேனுனக்
கஞ்சுவன் அம்மம் தரவே''[95]

என்றும்,

"பொய்யா உன்னைப் புறம்பல பேசுவ
புத்தகத் துக்குள கேட்டேன்
ஐயா உன்னை யறிந்துகொண் டேன் உனக்
கஞ்சுவன் அம்மம் தரவே"[6]

என்றும் பாடுகிறாள்.

கண்ணன் செய்த தீம்புகள் 'அயலகத்தார் முறைப்பாடு' என்னும் பகுதியிலும் காணப்படுகின்றன. ஆயமகளிர் யசோதையிடம் கூறும் சொற்களாக ஆழ்வார் இவற்றைப் பாடியுள்ளார். "ஆற்றில் இருந்து விளையாடிக் கொண்டிருந்த எங்களைச் சேற்றால் எறிந்து எங்கள் வளைகளையும் ஆடைகளையும் எல்லாம் கவர்ந்துகொண்டு காற்றிலும் கடுகிச்சென்று வீட்டிற்குள் புகுந்து கொண்டான். கேட்டால் வாய் திறந்து பேசமாட்டேன் என்கிறான். இன்று முழுநாளும் இப்படியே இருக்கின்றானே" என்பதை ஆழ்வார்,

"ஆற்றி ருந்து விளையாடு வோங்களை
சேற்றா லெறிந்து வளை துகில் கைக்கொண்டு
காற்றிற் கடியனாய் ஓடி யகப் புக்கு
மாற்றமும் தாரானா லின்று முற்றும்
வளைத்திறம் பேசானா லின்று முற்றும்"[7]

என்று அருளிச் செய்கிறார்.

மற்றொரு ஆயமகள் கண்ணன் கோபிகைகளின் துகில் களைக் கவர்ந்துசென்று மரத்தின்மீது வீற்றிருப்பதை,

"குண்டலம் தாழக் குழல்தாழ நாண்தாழ
எண்டிசை யோரு மிறைஞ்சித் தொழுதேத்த
வண்டமர் பூங்குழ லார் துகில் கைக்கொண்டு
விண்தோய் மரத்தானா லின்று முற்றும்
உச்சியில் நின்றானா லின்று முற்றும்"[8]

என்று முறையிடுகிறாள்.

"தெருவில் ஆய்ச்சியர் இல்லங்களில் வெண்ணெயும் தயிரும் பாலும் உண்டு அவர்கள் கண்டுபிடிக்க அகப்பட்டுக் கொண்டு கட்டுப்பட்டுக் கிடந்தான் இன்று முழுதும்" என்பதனை,

"ஆய்ச்சியர் சேரி அளைதயிர் பாலுண்டு
பேர்த்தவர் கண்டு பிடிக்கப் பிடியுண்டு
வேய்த்தடந் தோளினார் வெண்ணெய்கொள்
மாட்டாதங்கு
ஆப்புண் டிருந்தானா லின்று முற்றும்"[99]

என்ற பாசுரத்தால் அறிவிக்கிறார் ஆழ்வார்.

கண்ணன் சிறுகுறும்பை யசோதையிடம் ஆய்ச்சியர் முறையிடுகின்ற முறையில் திருமங்கையாழ்வார்,

"தெள்ளிய வாய்ச்சிறி யான்நங்கை காள்உறி
மேலைத் தடாநி றைந்த,
வெள்ளி மலையிருந் தாலொத்த வெண்ணெயை
வாரி விழுங்கி யிட்டு,
கள்வ னுறங்குகின் றான்வந்து காண்மின்கள்
கையெல் லாம்நெய், வயிறு
பிள்ளை பரமன்றுஇவ் வேழுல கும்கொள்ளும்
பேதையேன் என்செய் கேனோ"[100]

என்று பாடுகிறார்.

கண்ணனின் குழந்தைப் பருவ விளையாடல்களைப் பெரியாழ்வார் தம்மை யசோதையாகக் கருதிக்கொண்டு பாடுகிறார். தொட்டிலில் கிடத்திய குழந்தை கை கால்களை உதைத்துக் கொள்கிறது. தரையில் விடுவதற்கும் தாய்க்கு மனம் வரவில்லை. குழந்தையை மார்போடு அணைத்துக்கொண்டால் வயிற்றில் உதைக்கிறது. குழத்தையிடம் படுகிற துன்பத்தினால் உடல்மெலிந்து, அதனை எடுக்கும் வலிமையும் இல்லாமல் மெலிந்து விட்டதாகத் தாய் கூறுகிறாள். மேலும் குழந்தை தொட்டிலிற் கிடந்து உதைப்பதற்கும் மருங்கை இருப்பதற்கும் போதிய சக்தி இல்லையே என்றும் வருத்துகிறாள். இதனை,

"கிடக்கில் தொட்டில் கிழிய வுதைத்திடும்
எடுத்துக் கொள்ளில் மருங்கை யிறுத்திடும்
ஒடுக்கிப் புல்கி னுதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான்மெலிந் தேன்நங்காய்"[101].

என்னும் பாசுரம் உணர்த்துகிறது.

'முலையுண்ணல்' என்னும் பகுதியில் வரும் பாடல் யசோதையின் தியாக உள்ளத்தைக் காட்டுவதாகும்.

"வைத்த நெய்யும் காய்ந்தபாலும்
வடிதயிரும் நறுவெண்ணெயும்
இத்தனையும் பெற்றறியேன்
எம்பிரான்நீ பிறந்த பின்னை
எத்தனையும் செய்யப்பெற்றாய்
ஏதும்செய்யேன் கதம்படாதே
முத்தனைய முறுவல்செய்து
மூக்குறிஞ்சி முலையுணாயே"[102]

என்பது பெரியாழ்வார் பாசுரம். "எம்பிரானே, கண்ணனே, நீ பிறந்த பிறகு நான் எனக்கென்று உளமார எதனையும் செய்து கொள்ளவில்லை. நான் உனக்காகவே உயிர்வாழ்கிறேன். காய்ச்சி வைத்த நெய்யும், நன்றாகக் கறந்த பாலும் வடித்தெடுத்த தயிரும், நல்ல வெண்ணெயும் நான் பெற்றதேயில்லை" என்று யசோதை தாய் உள்ளத்தோடு பரிந்துரைக்கிறாள்.

திருமங்கையாழ்வார் கண்ணன் என்னும் என்றுமினிய கருந்தெய்வத்தைக் குழந்தையாகக் கருதியதும் தாய்மையுணர்வு கிளர்ந்தெழுகிறது. இறைவனது திருக்கோலத்தைப் பாட விரும்பிய ஆழ்வாருக்குப் பிருந்தாவனக் கண்ணன் முன் நிற்கிறான். இதனை,

"சந்த மலர்க்குழல் தாழத்
தானுகந் தோடித் தனியே
வந்தென் முலைத்தடந் தன்னை

வாங்கிநின் வாயில் மடுத்து
நந்தன் பெறப்பெற்ற நம்பீ!
நானுகந் துண்ணும் அமுதே
எந்தை பெருமானே! உண்ணாய்
என்னம்மம் சேமமுண் ணாயே"[103]

என்று அருளிச் செய்கிறார்.

"தந்தம்மக்க ளழுதுசென் றால்
தாய்மாராவார் தரிக்ககில்லார்"[104]

என்கிறார் பெரியாழ்வார். இதே கருத்தினைப் பாரதியார்,

"சற்றுன் முகஞ்சிவந்தால்—மனது
சஞ்சல மாகு தடீ
நெற்றி சுருங்கக் கண்டால்—எனக்கு
நெஞ்சம் பதைக்கு தடீ"[105]

"உன்கண்ணில் நீர்வழிந்தால்—என்நெஞ்சில்
உதிரங் கொட்டு தடீ
என்கண்ணிற் பாவையன்றோ—கண்ணம்மா
என்னுயிர் நின்னதன்றோ?"[106]

என்று உணர்ச்சிப் பெருக்குடன் கூறுவதைக் காணலாம்.

கண்ணன் குறும்புகள் பலவும் செய்கிறான். ஆய்ச்சியர் அதனை வந்து முறையிடும்போது, யசோதை தன்மகன் மீது குற்றம் சுமத்தப்படுவதை விரும்பவில்லை, கண்ணனை அழைத்து அவனிடம்,

"பல்லாயி ரவரிவ் வூரில்
பிள்ளைகள் தீமைகள் செய்வார்
எல்லாமுன் மேலன் றிப் போகா
தெம்பிரான் நீயிங்கே வாராய்"[107]

என்று கூறி அணைத்துக் கொள்கிறாள். இதில் பிள்ளையைப் பெற்ற தாயுள்ளத்தின் அன்பாழத்தைக் காண்கிறோம்.

தன் மகனைப் பிறர் பழித்துப் பேசுவதா என்று மனம் வருந்திய யசோதை அவனிடம் கெஞ்சுகிறாள் :

"போதர்கண் டாயிங்கே போதர் கண்டாய்
போதரே னென்னாதே போதர் கண்டாய்
ஏதேனும் சொல்லி அசல கத்தார்
ஏதேனும் பேசநான் கேட்க மாட்டேன்"[108]

என்னும் இந்தப் பாசுரமும் அன்னையின் அன்புள்ளத்தைப் படம் பிடித்துக்காட்டுகிறது.

கன்றின்பின் தன் மகனைப் போகவிட்ட தாய் பின் அவனுடைய காலடிகள் நோகுமே என்று நினைந்து நினைந்து வருந்துகிறாள்.

"குடையும் செருப்பும் கொடாதே தாமோ தரனை நான்
உடையும் கடியன ஊன்று வெம்பரற் களுடை,
கடியவெங் கானிடைக் காலடி நோவக் கன்றின்பின்
கொடியேனென் பிள்ளையைப் போக்கினேன் எல்லே
பாவமே"[109]

என்று அமைகிறது பாசுரம். குழந்தைக்குத் தான் கொடுமை செய்து விட்டதாக இதில் யசோதை வருந்துகிறாள்,

கண்ணன் ஆயர்பாடியில் இருந்தால் பெண்களின் சிற்றிலைச் சிதைத்தும், குறும்புகள் செய்தும் திரிகிறான் என்று அவனைக் கன்று மேய்க்க அனுப்புகிறாள் யசோதை. அதற்காகப் பின்னர் மிகவும் தன்னை நொந்து கொள்கிறாள்.

"பற்று மஞ்சள் பூசிப் பாவை மாரொடு பாடியில்
சிற்றில் சிதைத்தெங்கும் தீமை செய்து திரியாமே
கற்றுத் தூளியுடைவேடர் கானிடைக் கன்றின்பின்
எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேன் எல்லே
பாவமே"[110]

என்று அருளிச் செய்கிறார்.

இன்னொரு பாட்டில் இளமை கருதிப் பாராமல் கண்ணனைப் பசுக்கன்றுகளை மேய்க்க அனுப்பிவிட்டதற்காக வருந்துகிறான் அன்னை :

"பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டஅப் பாங்கினால்
என்னிளங் கொங்கை அமுதமூட்டி யெடுத்துயான்
பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின்பின்
என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினேன் எல்லே
பாவமே"[111]

என்ற பாசுரம் யசோதையின் இரக்க உணர்வைக் காட்டுகிறது.

கண்ணன் கன்றுகளை மேய்த்துத் திரும்பி வரும்போது யசோதை கண்டு மனம் மகிழ்ந்து,

"ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்!
நானே மற்றாரு மில்லை"[112]

என்கிறாள்.

மேலும் கண்ணனை அன்போடு வரவேற்று,

"உன்னை யிளங்கன்று மேய்க்கச் சிறுகாலே
ஊட்டி யொருப்ப டுத்தேன்
என்னில் மனம்வலி யாளொரு
பெண்ணில்லை"[113]

என்று கூறுகிறாள்.

வெம்மை மிக்க கானத்தில் குடையும் செருப்பு மின்றி நடந்து துன்புற்ற மகனுக்காக யசோதை எப்படியெல்லாம் துயரப்பட்டாள் என்பதைப் பெரியாழ்வாரின் உள்ளம் நினைந்து உருகுகிறது. அதனால்,

"கடியார் பொழிலணி வேங்கட வா! கரும்
போரே றே! நீ யுகக்கும்
குடையும் செருப்பும் குழலும் தருவிக்கக்
கொள்ளாதேபோனாய் மாலே

கடியவெங் கானிடைக் கன்றின்பின் போன
சிறுக்குட் டச்செங் கமல
அடியும் வெதும்பி, உன்கண்கள் சிவந்தாய்
அசைந்திட் டாய்நீ யெம்பிரான்"[114]

என்று அருளிச் செய்கிறார். இனி அவனுக்குக் கன்று மேய்க்கும் வேலை தரக் கூடாது என்று அன்னை முடிவு செய்கிறாளாம். ஆழ்வார்,

"கண்ணா! நீ நாளைத் தொட்டுக் கன்றின்பின்
போகேல்
கோலஞ்செய் திங் கேயிரு"[115]

என்று அவனைக் கருதிப் பாடுகிறார்.

வசுதேவரும் தேவகியும் கண்ணனை மகனாகப் பெறும் பேறு பெற்றவராயினும் அவனது இளமை விளையாடல்களைச் சிறிதும் அனுபவிக்கப் பெற்றிலர். பிள்ளை செய்வன காணாத் தேவகி புலம்பிய புலம்பலைக் குலசேகராழ்வார் கல்லுங் கனிந்துருகுமாறு பாடுகிறார்.

"......என்வாயிடை நிறைய
தாலொலித்திடும் திருவினை யில்லாத்
தாய ரில்கடை யாயின தாயே"[116]

"......அணைந் தானையிற் கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றில னந்தோ!
கேசவா! கெடுவேன் கெடுவேனே"[117]

"நந்தன் பெற்றனன் நல்வினை யில்லா
நங்கள் கோன்வசு தேவன்பெற் றிலனே"[118]

"அளவில் பிள்ளையை யின்பத்தை யிழந்த
பாவி யேனென தாவிநில் லாதே"[119]

"வென்றி சேர்பிள்ளை நல்விளை யாட்டம்
அனைத்தி லுமங்கென் னுள்ளமுங் குளிர
ஒன்றும் கண்டிடப் பெற்றிலேன்"[120]

என்றிவ்வாறெல்லாம் கூறித் தேவகி அன்பின் மிகுதியினால் புலம்பும் நிலையினைக் குலசேகராழ்வார் அழகுறப் பாடுகிறார்.

திருமங்கை யாழ்வாரும் கண்ணனுடைய விளையாடல்களைப் பாடியுள்ளார்.

''வானிடைத் தெய்வங்கள் காண
அந்தியம் போதங்கு நில்லேல்
ஆழியங் கையனே! வாராய்''[121]

என்று யசோதை கண்ணனை நோக்கி உள்ளே வருமாறு அழைத்தாள். அவனோ உள்ளே வந்திலன். அப்போது யசோதை,

''உந்தம் அடிகள் முனிவர்
உன்னை நான் என் கையிற் கோலால்,
நொந்திட மோதவுங் கில்லேன்''[122]

என்று கூறுகிறாள். ''கண்ணனே! நீ இப்படிக் குறும்புத்தனம் செய்வதை நந்தகோபர் கண்டால் சீறிச் சினந்து பொடிந்து நிற்பார். நானும் உன்னையடிக்கக் கையில் கோலை யெடுக்கிறேன். என் குழகனே! எனக்கு உன்னையடிக்கக் கை வரவில்லையே'' என்கிறாள். கண்ணனை 'ஸர்வ சுவாமி' யென்று தெரிந்து கொண்டிருந்தும் இவள் அவனுக்கும் சுவாமியாக நந்தகோபனை வைத்து 'உந்தம் அடிகள்' என்று சொல்லியிருக்கும் அழகு எண்ணி வியக்கத்தக்கது.[123]

குலசேகராழ்வார், திருமங்கை யாழ்வார் ஆகியோர் கண்ணனின் இளமை விளையாட்டில் ஈடுபாடு காட்டி மகிழ்ந்து பாசுரங்கள் இயற்றியது போலப் பெரியாழ்வாரும் தம் பாசுரங்களை அமைத்துள்ளார். அவர்களைக் காட்டிலும் அதிகமான அளவிலே அவனது குறும்புகளில் தம் மனத்தைப் பறி கொடுத்துள்ளார். பிற்கால நூல்களில் இடம்பெறாத பல்வேறு இளம் பருவ நிகழ்ச்சிகளையும், செயல்களையும், விளையாட்டுகளையும் பெரியாழ்வாரின் பாசுரங்களில் காண்கிறோம்.

பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கியத்தின் இனிய கூறுகளை முதன்முதல் பாடி மகிழ்ந்தவர் பெரியாழ்வார். தாம் கண்ட பிள்ளைமை இன்பத்தை உலகோர் அனைவரும் காணுமாறு செய்கிறார். அவர் பாடிய பாடல்கள் அனைத்தும் தாயன்பின் ஊற்றாகத் திகழக் கண்டு மகிழ்கிறோம்.

## பெரியாழ்வார் உணர்த்தும் பிள்ளைமை இன்பம்

### குறிப்புகள்

1. ந.வீ. செயராமன், 'சிற்றிலக்கியச் செல்வம்', ப. 137.
2. சிதம்பரப் பாட்டியல், நூற்பா. 28.
3. இலக்கண விளக்கம், நூற்பா 806.
4. பன்னிரு பாட். நூற்பா 101
5. இலக்கண விளக். பாட். நூற்பா. 809.
6. மே. நூ. நூற்பா, 810.
7. வெண். பாட். செய்யுளியல், நூற்பா 7.
8. பன். பாட்டியல், நூ. 102,
9. ,, 102,, விளக்கவுரை.
10. ,, 104, 105
11. ,, 106
12. ,, 107
13. இலக்கண விளக். பாட். நூற்பா 808.
14. பன். பாட்டியல், நூற்பா 108
15. பிர. மர. நூற்பா 3
16. ந.வீ. செயராமன். 'பாட்டியலும் இலக்கிய வகைகளும்' ப. 62.
17. பன். பாட். நூற்பா 110
18. ,, 111
19. சுவாமிநாதம், 'யாப்பதிகாரம்', 167/2
20. ந.வீ. செயராமன், 'சிற்றிலக்கியச் செல்வம்', ப. 11.
21. முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், செங்கீரை 8.
22. மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ். 1
23. பன். பாட். நூற்பா 105.
24. பிங்கல நிகண்டு, 1369
25. தொல், பொருள், புறத், நூற்பா 82.
26. திருவிளை. புராணம், விருத்த. 28.
27. திருக்குறள் 60
28. ,, 64.

    அ. ,, 65.

29. பெரியாழ். திரு. 44

30. பெரியாழ் திரு. 46
31. ,, 49
32. ,, 45/4
33. ,, 50
34. ,, 51/1-3
35. ,, 52
36. தேசிகவிநாயகம் பிள்ளை, 'மலரும் மாலையும்' தாலாட்டு, 18.
37. மே. நூல். பாட்டு 17.
38. ,, ,, 19.
39. புறம். 160/22-23
40. பெரியாழ். திரு. 54
41. ,, 55
42. ,, 56
43. ,, 57
44. ,, 58
45. ,, 61
46. ,, 62/3
47. கம்ப, யுத்த. 3194.
48. பெரியாழ். திரு. 58
49, பாரதியார், 'பாரதியார் கவிதைகள்','கண்ணம்மா-என் குழந்தை' 1-4
50. மே. நூல், பாடல் 8
51. பாரதியார், 'பாரதியார் கவிதைகள்', 'கண்ணம்மா— என் குழந்தை', பாடல் 9
52. மே. நூல், பாடல் 10
53. பெரியாழ் திரு. 89
54. பாரதியார், 'பாரதியார் கவிதைகள்', 'கண்ணம்மா — என் குழந்தை', பாடல் 5.
55. குமரகுரு. பிரபந், திர., ப. 53.
56. சேக்கிழார் பிள்ளைத்தமிழ், சி. ஜெகந்நாதாசாரியர் உரை
57. முத்து. பிள்ளைத்தமிழ். 367/6-7
58. பெரியாழ். திரு. 64/3-4

59. பெரியாழ். திரு. 68/3-4
60. ,, 72/2-4
61 ,, 75
62. ,, 76
63. ,, 86
64. ,, 97
65. ,, 98
66. ,, 99
67. ,, 114
68. பெரியாழ். திரு. 118
69. ,, 162
70. ,, 182/4
71. ,, 183/4
72 ,, 184/4
73. ,, 186/4
73 அ ,, 187/4
74. ,, 188/4
75. ,, 189/4
76. ,, 190/4
77. ,, 191/4
78. பெரி, திரு. 1193
79. திருநாவுக்கரசர் தேவாரம் 5=54=1
80. பெரியாழ். திரு. 153
81. பாரதியார் கவிதைகள், 'கண்ணன்-என் விளையாட்டுப் பிள்ளை', 6.
82. பெரியாழ், திரு. 157
83. ,, 159
84. ,, 195
85. ,, 184
86. பாரதியார் கவிதைகள், 'கண்ணன்—என் விளையாட்டுப்பிள்ளை', 1.
87. மே. நூல், பாடல் 2.
88. ,, 4.

89. மே நூல். பாடல் 3
90. பெரியாழ், திரு. 202.
91. ,, 194
92. ,, 206
93. ,, 210
94. ,, 211
95. ,, 225/4
96. ,, 226/3-4
97. ,, 213
98. ,, 214
99. ,, 217
100. பெரி, திரு. 1910.
101. பெரியாழ் திரு. 21
102. ,, 129
103. பெரி. திரு. 1878
104. பெரியாழ். திரு. 130
105. பாரதியார் கவிதைகள், 'கண்ணம்மா—என் குழந்தை' பாடல் 6.
106. மே. நூல், பாடல் 7
107. பெரியாழ். திரு. 196
108. ,, 207
109. ,, 242
110. ,, 235
111. ,, 241
112. ,, 244/4
113. ,, 245/3-4
114. ,, 247
115. ,, 252/4
116. பெருமாள் திரு. 708/3-4
117. ,, 709/3-4
118. ,, 710/4
119. ,, 711/4
120. ,, 716/3-4
121. பெரி. திரு. 1885/4
122. ,, 188511-2
123. அண்ணங்கராசாரியார், 'திருக்கோவில்', மாத இதழ், செப். 1960, மாலை 2, மணி 12, "ஸ்ரீகிருஷ்ணாவதார விசேஷங்கள்", ப.77.

# ஆழ்வார் உணர்த்தும் வழிபாட்டு நெறி

ஆதி மனிதன் கிடைத்ததை உண்டு தான் விரும்பிய இடத்தில் உறங்கிக் காட்டிலும் மலையிலும் விலங்குபோலத் திரிந்து காலங் கழித்தான். நாள்கள் செல்லச் செல்ல ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு அவனுக்குப் பல உண்மைகளை உணர்த்திற்று. அந்த உண்மையில் தோன்றிய ஒன்றே 'சமயம்' என்ற பெயருடன் இன்று உலகில் வாழ்கிறது. கிடைத்தவற்றை உண்டு காலங்கழித்த மனிதன் இறந்த காலத்தையும் எதிர் காலத்தையும் எண்ணிப் பார்க்கும் ஆற்றலால் பலவற்றைச் சிந்தித்தான். இவ்வாறு எண்ணத்தலைப்பட்ட மனிதன் தான் மேற்கொண்ட செயல்களுள் சில வெற்றியளித்ததையும் சில தோல்வியளித்ததையும் உணர்ந்தான். அதனால் தனக்கும் மேற்பட்ட ஒரு பொருள் எங்கோ இருக்கிறது என்ற நல்ல உணர்வு முதன்முதலில் அவனுக்குத் தோன்றிற்று. அந்த உணர்வுதான் சமய வாழ்க்கையின் அடிப்படையாக அமைந்தது. அச் சமய உணர்வு என்று தோன்றியது என நம்மால் உறுதியாகக் கூற இயலாது. எனினும் அந்நாளே மனித வாழ்க்கையின் ஒரு நன்னாளாகும்.[1]

தனக்கும் மேற்பட்ட ஒரு பொருள் தன்னைச் செயல் படுத்துகிறது என்ற உணர்வு தோன்றிய காலத்து மனிதனுக்கு முதன்முதலில் அதனிடம் அச்சந் தோன்றியிருக்க வேண்டும். கண்ணுக்குப் புலப்படாத அப்பொருள் எவ்வாறிருக்குமோ என்ற உணர்வில் கொடிய விலங்குகளான சிங்கம், புலி, யானை முதலிய உருவங்கள் அவனுக்குக் காட்சியளித்திருக்கும். பின்னர் நாள்கள் செல்லச் செல்லத் தன்னை ஆட்கொண்ட உருவம் அன்பின்வயப்பட்டதாக அக்கொடியவற்றையெல்லாம் அடக்கி யாளும் திறம் படைத்ததாக, அனைத்திலும் மேம்பட்டதாக உள்ள தன்மை வெளிப்பட்டிருக்கும். அந்நிலையில் அவ்வச்சத்தையும் அதனை உணர்த்தும் சிங்கம், புலி, யானை முதலியவற்றையும் வாகனங்களாக்கி, இறைவனை அவற்றின்மேல் காட்சி

யளிக்கும் கருணைக் கடலாகக் கண்டு களித்தான். இவ்வாறு உருவவழிபாடும் விழாவும் தோன்றியிருக்கலாம்.

**அச்சமும் அன்பும்**

முதலில் இயற்கைப் பொருள்களின் மீது மனிதன் கொண்ட அச்சம் அவனுக்கு அவற்றை வழிபடும் உணர்வை உண்டாக்கிற்று. பின்னர் இறைவனை அச்சந்தரும் பொருளாகக் கருதாது, அன்பின் நிலைக்களனாக எண்ணி வழிபாடு ஆற்றத் தொடங்கினான். அத்தொடக்க நிலையே அன்பையும் கடவுளையும் இணைத்துப் பார்த்து மகிழ்ந்து 'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே'[2] என்று கூற வழிசெய்தது. அந்நிலை எல்லா மக்களுக்கும் அமையவில்லை. இன்னும் சிலர் அன்பின்றி அச்சத்தினால் வழிபடுவதைக் காணலாம்.

இவ்வாறு அச்சத்திற்கும் அன்பிற்கும் இடையே தோன்றிய சமயம் அன்பையே அடிப்படையாகக் கொண்டு விளங்கினும் அப்பழைய அச்சத்தால் வழிபாடு செய்யும் தன்மை இன்று முற்றும் நீங்கவில்லை.

**சமயமும் வாழ்க்கையும்**

மனிதனின் அகவாழ்விலும் புறவாழ்விலும் சமயம் நிலையான இடத்தைப் பெற்றுள்ளது. மக்களுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டாகும். சமயம் மக்கள் வாழ்வே தன் வாழ்வாகவும், மக்களை வாழ்விப்பதே தன் நோக்கமாகவும் கொண்டு வாழ்ந்து வருகிறது சமய வாழ்வு இன்று உலகில் பல துறைகளாகப் பரந்துள்ளது.

உலகின் பல்வேறு பாகங்களிலும் கடவுளை வழிபடுகின்ற அடியவர் தந்தம் விருப்பத்திற்கும் சூழலுக்கும் ஏற்ற முறையில் வழிபாட்டை அமைத்துக் கொள்ளுகின்றனர். அதனாலேயே உலகத்தில் சமயங்கள் ஒன்றற்கு மேல் பலவாக வளர்ந்துள்ளன.

சமயங்களின் உண்மை நிலையை நோக்குமிடத்து அவை ஒன்றற்கொன்று முரண்பட்டன அல்ல என்பது புலனாகும். எல்லா ஆறுகளும் கடலை நோக்கிச் செல்லுதல் போல எல்லாச்

சமயங்களும் இறைவனை நோக்கியே செல்லுகின்றன. இக் கருத்தைக் கம்பர்,

> "கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
> எல்லையில் மறைகளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
> தொல்லையி னொன்றே யாகித் துறைதொறும் பரந்து சூழ்ச்சிப்
> பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும் போற்பரந்த தன்றே"[8]

என்று பாடுகிறார். கம்பன் கூறியவாறு உலகில் வாழும் எல்லாச் சமயங்களின் அடிப்படையும் ஒன்றே யாகும் என்ற உணர்வை நினைவிற் கொண்டு சமயம் எல்லா மக்களின் வாழ்வுக்காகவும், உயிர்களின் வாழ்வுக்காகவும் அமைந்துள்ளது என்ற உண்மையைச் செயல்படுத்த வேண்டும்.

**இறையுணர்வு**

சங்க காலத்திற்கு முன்பே மக்கள் இறையுணர்ச்சியில் சிறந்து விளங்கினர். சங்க கால மக்கள் பெரிதும் காதலையும், வீரத்தையும் பாடும் நிலையில் இருந்தனர் பிறகு இறைவன் மீது பாடல் பாடும் முறை வளரலாயிற்று. வள்ளல்களின் கொடையைப் பாடுதற்கு மாறாக இறைவனின் திருமேனியழகைப் பாடும் பாடல்கள் பெருகலாயின. ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்தில் அரசர்களின் வீரச் செயல்களைப் பெரிதும் புகழ்தற்கு மாறாகக் கடவுளின் அற்புத விளையாடல்களைப் பாடும் நிலை வளர்ந்தது. எனவே மக்கள் பெற்ற இடம் கடவுளுக்கு உரியதாக மாறிற்று. அரண்மனைக்குச் சென்று அரசனைத் துயிலுணர்த்திப் பாடிய புலவர்கள் இறைவனுக்குப் பள்ளியெழுச்சியும், பல்லாண்டும் பாடலாயினர். கவிஞர்களின் பாடற்குரிய பொருளாகத் தெய்வம் விளங்கியது.

சங்கப் பாடல்களில் காணப்படும் இயற்கை வருணனைகள், காதல் மரபு முதலியன ஆழ்வார் பாசுரங்களிலும் போற்றப்பட்டு வந்துள்ளன. ஆனால் பாடல்களின் வடிவங்களிலேயே வேறுபாடு காணப்படுகிறது. சங்கப்பாடல்கள் கற்ற,

வர்க்கு உரியனவாகப் பாடப் பெற்றவை என்றும் ஆழ்வாரின் பக்திப் பாடல்கள் கற்றவருடன் மற்றவரும் கூடிப் பாடுதற்கு ஏற்ற முறையில் எளிதாய் அமைந்துள்ளன என்றும் கூறலாம். மக்கள் ஒன்றுசேர்ந்து பாடுதற்குரிய இசைப் பாடல்களாய் இவை சிறந்து விளங்கின. இவ்வாறு எளிய நடையுடன் இனிய இசையும் கலந்தமையால் தமிழிலக்கியத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது.

**பக்தி இலக்கியம்**

பக்தி இலக்கியம் என்பது மக்களைப் பாடாமல் இறைவனைப் பாடுவது என்பது ஆகும்; அது, இறையனுபவத்தைப் பாடுவதன்றி வேறில்லை. பக்திப் பாடல்களில் இறையனுபவத்தைப் பற்றி ஆராய்தல் பயனளிப்பதாகும். இவ்விறையனுபவம் என்று கூறப்படுவது மெய்யுணர்வு அனுபவமாகும். எனவே, இப் பக்திக் கவிஞர்களை மெய்யுணர்வுக் கவிஞர்கள் எனலாம்.

ஆண்டவனிடத்தும் அவனருள் பெற்ற அடியவரிடத்தும் செலுத்தும் அளவற்ற அன்பே பக்தி எனக் கூறப்பெறும். அவ்வன்பு இறைவனுக்குச் செய்யும் தூய செயல்களால் வெளிப்படுத்தப்படுகின்றது. அத்தூய செயல்களே தெய்வீகத் தொண்டாகப் போற்றப் பெறுகிறது. இத்தெய்வீகத் தொண்டே பக்தியாக வெளிப்படுகின்றது. ஒருவன் உலக மக்கள்பால் கொண்டுள்ள அன்பினின்றும் கடவுள்பால் கொண்ட அன்பினைப் பிரித்துக் காட்டுவதற்காகவே 'பக்தி' என்ற சொல் பயன்படுகிறது என்று கூறலாம். எனவே இறைநெறிக்கண் செல்லும் தொண்டர்கள் ஆண்டவனையோ அவனருள் பெற்ற அடியவரையோ நினைந்து நினைந்து உருகும் அன்பான திருக்காட்சியே பக்தி எனலாம். பக்தி இலக்கியம் தோன்றிய காலத்தில் சமய வட்டத்திலேயே இச்சொல் பயன்பட்டது. பக்தி இலக்கியம் தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தில் அன்பின் முதிர்ச்சியாகிய 'ஆர்வம்' பக்தி என்ற பொருளில் வழங்கப் பெற்றுள்ளது. இதனை,

"அழிவில முயலு மார்வ மாக்கள்
வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்கு"[1]

என்னும் சங்கப் பாடல் அடிகளில் காண்கிறோம். இங்கு 'ஆர்வ மாக்கள்' என்பது பக்தர்களையே குறிக்கிறது. மேலும் திருமுருகாற்றுப்படையில்,

"ஆர்வல ரேத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே"[5]

என்னும் தொடரில் 'ஆர்வலர்' என்னும் சொல் பக்தர்களையே குறிப்பதாகும்,

"மார்வ மென்பதோர் கோயி லமைத்து
மாத வனென்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வ மென்பதோர் பூவிட வல்லார்க்
கரவ தண்டத்தி லுய்யலு மாமே"[6]

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக"[7]

"அறிந்தைந்து முள்ளடக்கி ஆய்மலர்கொண்டு ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே—அறிந்தவன்றன்"[8]

என்றெல்லாம் வரும் ஆழ்வார் பாசுரங்களிலும் ஆர்வம் என்பது பக்தியைக் குறிப்பதாகவே கருதலாம்.

"பக்திப் பாடல்கள் என்ற நூல்வகையில் இதனைப் போன்ற பெருமையுடைய நூல்களை இலக்கிய உலகில் மிக மிகச் சிலவற்றைத்தான் கருதுதல் கூடும்" என்கிறார் வையாபுரிப் பிள்ளை.[9]

பக்தர்களின் பல்வேறு வகையான அனுபவங்களைப் பெரியோர் விளக்கிக் கூறுவர். எம்பெருமானை அனுபவித்தல் பலவகைப்படும் அவனுடைய திருநாமங்களைக் கூறி அனுபவித்தல், அவனுடைய திருக்கல்யாண குணங்களைக் கூறி அனுபவித்தல், மேனியழகினைக் கூறி அனுபவித்தல் எனப் 'பகவதனுபவம்' பல்வகைப் பட்டிருக்கும்.

**பக்தியும் ஞானமும்**

பக்திக்கு அடிப்படையாய் அமைவது ஞானம் எனக் கொள்ளலாம். இறைஞானத்தால் வரும் தெளிவு சிலருக்கு வழி

காட்ட அது பக்தியாக மலர்கிறது. ஞானம் எனின் அது இங்கு இறைஞானத்தை உணர்ந்த சேதனனைக் குறிக்கும்.

"ஞானத்தை அறிவினால் விசாரித்துத் தெளிவதாகவும், பக்தியை உணர்ச்சியினால் ஒன்றுவதாகவும் விளக்க முயல்வர். இவ்வடிப்படையில் அன்புநெறி, அறிவுநெறி என இரண்டென்பர்."[10]

சமயச் சான்றோர்களின் வழிநோக்கில் இவை உணர்ச்சின் அடிப்படையில் அமைந்தவை என்று மட்டும் கொள்வதற்கில்லை. இவற்றை நோக்கின் பக்தியும் ஞானமும் கலந்த கலப்பே என்பது விளங்கும். ஞானம் என்பது ஒரு பொருளை நன்கு தெரிந்து வைத்திருத்தல் என்பதாகும். இறைவனைப் பற்றிய அறிவினைத் தெளிவாய் உணர்ந்து அவன் வழிபட்டாரைப் பக்தர் என்றும், அடியார் என்றும், தொண்டர் என்றும் உரைக்கின்றனர். அதனால் ஞானத்தின் பயன் பக்தியாகிறது.

இறைவனிடம் பக்தி செலுத்துபவர்களை ஐச்வர்யார்த்திகள், கைவல்யார்த்திகள், பகவத் சரணார்த்திகள் என மூன்று வகையாகக் கூறலாம். இம்மூவருள் இவ்வுலகச் செல்வங்களை விரும்புபவர்கள் ஐச்வர்யார்த்திகள் ஆவர். சுத்தமான ஆத்மாவின் (ஜீவன்) அனுபவத்தை மட்டுமே ஆசைப்படுபவர்கள் கைவல்யார்த்திகள் எனப்படுவர். எம்பெருமானை அடைந்து அவனடிக்கீழ்க் குற்றேவல் செய்ய விழைபவர்கள் பகவத் சரணார்த்திகள் ஆவர். இவர்களில் முதலில் கூறப்பட்ட இருவரும் தாம் விரும்பிய பலன்கள் கிடைக்குமளவும் பகவானிடம் பக்தி செய்வர். பலனைப் பெற்ற பின்னர் இறைவனை விட்டு விலகிச்சென்று தாம் பெற்ற பலனை அனுபவிக்கத் தொடங்கி விடுவர். ஆனால் மூன்றாவதாகக் கூறப்பெறும் பகவத் சரணார்த்தியோ வென்னில் பெருமானை என்றும் விட்டுப் பிரியாது அவருக்கு ஆட்செய்பவனாவன். இம்மூவருமே பக்தி செலுத்துபவராயினும் பகவத் சரணார்த்திகளே அனுகூலரென்னத் தக்கவர்கள்; மற்றைய இருவரும் பலன்பெற்று அகன்று விடுவதனால் பிரதிகூலர்கள் என்னத் தக்கவர்களே.

பெரியாழ்வார் திருப்பல்லாண்டில்,

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயி ரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
செவ்வடி செவ்விதிருக் காப்பு"[11]

என்று பெருமானுக்குத்தான் பல்லாண்டு பாடினார். மேலும் அவர்,

"வாழாட் பட்டுநின் றீருள்ளீ ரேல்வந்து
மண்ணும் மணமும்கொண்மின்,
கூழாட் பட்டுநின் றீர்களை எங்கள்
குழுவினில் புகுதலொட்டோம்,
ஏழாட் காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர் வாழ்இலங்கை,
பாழா ளாகப் படைபொரு தானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே"[12]

என்று பகவத் சரணார்த்திகளைப் பல்லாண்டு பாட அழைக்கிறார்.

"ஏடு நிலத்தி லிடுவதன் முன்னம்வந்
தெங்கள் குழாம்புகுந்து
கூடு மனமுடை யீர்கள் வரம்பொழி
வந்தொல்லைக் கூடுமினோ
நாடு நகரமும் நன்கறிய நமோ
நாராய ணாயவென்று,
பாடு மனமுடைப் பத்தருள் ளீர்வந்து
பல்லாண்டு கூறுமினே"[13]

என்று கைவல்யார்த்திகளையும்,

"அண்டக் குலத்துக் கதிபதி யாகி
அசுரரி ராக்கதரை,
இண்டைக் குலத்தை எடுத்துக் களைந்த

இருடீகே சன் தனக்கு,
தொண்டக் குலத்திலுள் ளீர்வந் தடிதொழு
தாயிர நாமம்சொல்லி,
பண்டைக் குலத்தைத் தவிர்த்துப்பல் லாண்டுபல்
லாயிரத் தாண்டென் மினே"[14]

என்று ஐச்வர்யார்த்திகளையும் பல்லாண்டு பாட அழைக்கிறார். பகவத் சரணார்த்திகள், கைவல்யார்த்திகள், ஐச்வர்யார்த்திகள் ஆகிய மூவரும் வந்து கூடுவதனைத் திருப்பல்லாண்டின் ஆறு, ஏழு, எட்டாம் பாசுரங்கள் கூறுகின்றன. ஏனைய ஒன்பது, பத்து, பதினோராம் பாசுரங்கள் அம் மூவருடன் பெரியாழ்வார் தாமும் சேர்ந்து பல்லாண்டு பாடுவதைக் கூறுவதாகும்.

அனுகூலர்களான பகவத் சரணார்த்திகளை மட்டும் துணையாகக் கொண்டு பல்லாண்டு பாடுவதில் மனநிறைவு பெறாத ஆழ்வார் மற்றைய பலன்களை விரும்புகின்ற பிரதிகூலர்களையும் மங்களாசாசனம் செய்யும்படி திருத்திப் பணி கொள்கின்றார். இதுவே பிரதிகூலரையும் அனுகூலராக்கிக் கொள்வது எனப்படுகிறது.

எம்பெருமான் என்றோ நடத்திய வீரச் செயல்களுக்குப் பிற்காலத்தில் அவதரித்தவரான பெரியாழ்வார் மங்களாசாசனம் செய்கிறார். திருப்பல்லாண்டிலேயே, 'அந்தியம்போதில் அரியுருவாகி அரியை அழித்தவனுக்கு'[15] 'மாயப் பொருபடை வாணனை ஆயிரந்தோளும் பொழிகுருதி, பாயச் சுழற்றிய ஆழிவல்லானுக்கு'[16] வாழ்த்துக் கூறுகின்றார்; இவற்றில் என்றோ முடிந்த வரலாறுகளைப் பின்னால் தோன்றிய தாம் நினைந்து அவற்றுக்குப் பல்லாண்டு பாடுகிறார். இதுதான் அதீத காலங்களில் அவதானங்களுக்கு உத்தரகாலத்தில் வயிறெரிவது என்பதாம்.

திருப்பல்லாண்டின் திருநாமப் பாசுரத்தில், கற்பார்க்குப் பலன் சொல்லுகின்றார் பெரியாழ்வார். மற்றைய ஆழ்வார்களின் பாசுரங்களில் இம்மை மறுமைக்குரிய பலன்கள் கூறப்பட்டுள்ளன, பலச்சுருதிகளில். ஆனால் திருப்பல்லாண்டிலோ வெனில்,

"பல்லாண் டும்பர மாத்மனைச் சூழ்ந்திருந்
தேத்துவர் பல்லாண்டே"[17]

என்று திருப்பல்லாண்டு கற்றார் பரமபதத்தில் சென்று பரமபத நாதனுக்குப் பல்லாண்டு பாடுவர் என்கிறார். பகவத் பிராப்திக்குப் பலமும் இம்மங்களாசாசனம் தான் என்பது பெரியாழ்வாரின் கருத்தாகும்.

பரமபதத்தில் உள்ள நித்திய சூரிகள் (அயர்வறும் அமரர்கள்) 'அநிமிஷர்' எனப்படுகின்றனர். அநிமிஷர் என்பது கண் இமைக்காதவர் என்று பொருள்படும். அசுர இனங்கள் நெருங்கவும் முடியாத பரமபதத்திலும் எம்பெருமானுக்கு என்ன தீங்கு நேருமோ என அஞ்சிக் கண்களையும் இமைக்காமல் எம்பெருமானை நோக்கிக் கொண்டிருப்பவர்கள் அவர்கள். அவர்களிலும் பஞ்சாயுதாழ்வார்கள் (எம்பெருமானின் ஐந்து ஆயுதங்கள்) எம்பெருமானின் காவலுக்கே உள்ளவர்கள் ஆவர். இதனை,

"உறகல் உறகல் உறகல்
ஒண்சுட ராழியே! சங்கே!
அறவெறி நாந்தக வாளே!
அழகிய சார்ங்கமே! தண்டே
இறவு படாம லிருந்த
எண்மரு லோகபா லீர்காள்,
பறவை யரையா! உறகல்
பள்ளி யறைகுறிக் கொள்மின்"[18]

என்னும் பெரியாழ்வார் பாசுரத்தால் அறியலாம். "அழகிய ஒளியையுடைய திருவாழியாழ்வானே! ஸ்ரீபாஞ்ச சன்னியாழ்வானே! எதிரிகளின் உடல் அறும்படியாக எம்பெருமானால் எறியப்படும் நாந்தகம் என்கிற குறுவாளே! அழகு பொருந்திய சார்ங்கமென்னும் வில்லே! கௌமோதகி என்னும் கதையே! பெருமானுடைய நியமனப்படி நடக்கும் எட்டுதிக்குப் பாலகர்களே! உறங்காதீர்கள்! பறவை அரசனான கருடாழ்வானே!

நீயும் உறங்காதிரு. நீவிர் அனைவரும் விழித்திருந்து பெருமானின் திருப்பள்ளியறையை நோக்கிக் காத்திருங்கள்'' என்கிறார் ஆழ்வார். 'உறகல்' என்று மூன்று முறை கூறுவது நோக்கற்பாலது.

இமையோர்களைப் பார்த்து 'உறகல்' என்பான் என்னெனில், இமையோர்களுக்குக் கூறப்படுவதாக உள்ள உறக்கம் நம்போல்வாரின் உறக்கம் போன்றதன்று. இவர்களுக்குத் தமோ குணத்தால் வந்த உறக்கமன்று. இவர்கள் பெருமானின் குணத்தை அனுபவிக்கப் புகின் தம்மையும் மறந்து தங்கள் காவல் தொழிலையும் மறக்கக் கூடும். இல்லையெனில் பகவதனுபவத்திலிழிந்து கைங்கரியம் செய்ய முற்படுவர். இக் காவல் தொழிலுக்குப் பகையான குணானுபவமும் உறக்கம்; கைங்கரியமும் உறக்கம். அதனைத் தவிர்த்து எம்பெருமானின் 'பள்ளியறை குறிக்கொண்மின்' என்று வழிபடுகிறார். இது அநிமிஷரைப் பார்த்து 'உறகலுறகல்' எனப்படுகிறது.

இறைவன் தன்னிடமிருந்து பிரிந்து வேறெங்கும் செல்லுதலை விரும்பாத ஆழ்வார்,

''தூக்கச் சுழலையைச் சூழ்ந்து
கிடந்த வலையை அறப்பறித்து,
புக்கினிற் புக்குன்னைக் கண்டுகொண்
டேனினிப் போக விடுவதுண்டே''[19]

என்கிறார். பெரியாழ்வாரைப் போலவே திருமங்கையாழ்வாரும்,

''முத்தே! மணிமா ணிக்கமே! முளைக்கின்ற
வித்தே, உன்னையெங் ஙனம்நான் விடுகேனே''[20]

என்று அருளிச் செய்கிறார்.

எம்பெருமான் தன் உடம்பில், உள்ளத்தில் வந்து தங்கிவிட்டதால் பெருமிதத்துடன் நோய்களை விரட்டியதாகப் பெரியாழ்வார்,

"நெய்க்குடத் தைப்பற்றி யேறும்
எறும்புகள் போல்நிரந்து எங்கும்
கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள்!
காலம் பெறவுய்யப் போமின்,
மெய்க்கொண்டு வந்து புகுந்து
வேதப் பிரானார் கிடந்தார்
பைக்கொண்ட பாம்பணை யோடும்
பண்டன்று பட்டினங் காப்பே"[21]

என்னும் பாசுரத்தில் குறிப்பிடுகிறார். இப்பாசுரத்தை அடியொற்றி,

"தூரவிரும்புண் டரிக்குமிக்
காயத்தைச் சூழ்பிணிகாள்!"[22]

என்று தொடங்கும் திருவேங்கடத்தந்தாதிப் பாடலும் அமைந் திருக்கிறது.

உலகத்தில் பிறந்த மக்கள் திருக்கோட்டியூர் எம்பெருமானை வணங்கினால் அவர்களைப் பெற்ற தாய்மார் பேறு பெற்றவராவர் எனக் கருதப்படுவர் என்றும், இல்லையெனில் இப்பிள்ளைகளால் தாய்மார்களுக்குப் பிரசவ காலத்தில் துன்பமே மிகும் என்றும் ஆழ்வார் பாடுகிறார் :

"குற்றமின்றிக் குணம்பெருக்கிக்
குருக்களுக் கனுகூலராய்,
செற்றமொன்றுமி லாதவன்கையி
னார்கள்வாழ்திருக் கோட்டியூர்,
துற்றியேழுல குண்ட தூ மணி
வண்ணன் தன்னைத் தொழாதவர்,
பெற்றதாயர் வயிற்றினைப் பெரு
நோய்செய்வான்பிறந் தார்களே"[23]

என்பது பெரியாழ்வார் பாசுரம்.

ஒருவகைக் குற்றமும் தம்மிடத்திலில்லாத வைணவர்கள் வாழ் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் பக்கல் அன்பு பூண்ட பாகவதர்கள் பலர் இவ்வுலகத்தில் உள்ளமையால் அவர்களுடைய திருவடித்தூளி பூமியில் படுவதனால் இவ்வுலகம் பெரும்பாக்கியம் செய்திருக்கவேண்டும் என்கிறார் பெரியாழ்வார். இதனை,

"பூதமைந்தொடு வேள்வியைந்து
புலன்களைந்து பொறிகளால்,
ஏதமொன்றுமி லாதவண்மையி
னார்கள்வாழ்திருக் கோட்டியூர்,
நாதனைநர சிங்கனைநவின்
றேத்துவார்க ளுழக்கிய,
பாததூளி படுதலாலிவ்
வுலகம்பாக்கியம் செய்ததே"[24]

என்ற பாசுரத்தால் அருளிச் செய்கின்றார். இப்பாசுரத்தில் நிலம், நீர், தீ, கால், விசும்பு என்ற ஐம்பூதமாகிய உடலைப் 'பூதமைந்து' என்றது ஆதபெயராம். இதனை,

"மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம்
புண்ணா ராக்கை"[25]

என்ற திருமங்கையாழ்வார் அருளிச் செயலினால் அறியலாம்.

திருமாலின் நாமத்தை நாவினால் அழைக்க மாட்டாத மானிடர்கள் பருகும் நீரும், அணியும் ஆடையும் பாவம் செய்தனவாகவே பெரியாழ்வார் கூறுகிறார். இதனை,

"நரகநாசனை நாவில் கொண்டழை
யாதமானிட சாதியர்
பருகுநீரு முடுக்கும்கூறையும்
பாவஞ்செய்தன தாங்கொலோ"[26]

என்று பாடியருளுகிறார்,

சக்கரக் கையனை நினையாதவர்கள் வன்னெஞ்சர்கள் என்றும், பாபிகள் என்றும் பெரியாழ்வார் எடுத்துரைக்கின்றார். தேவ மனிதர்களுக்கு ஒருங்கே நல் உணவாகக் கூடிய சோறு இவர்கள் வயிற்றில் சென்றால் அவ்வுணவும் பாவம் செய்ததாகும் என்கிறார். அந்தச் சோற்றுக்குப் பரிந்து அதைப் பறித்து விலங்குகளின் உணவான புல்லைத் திணிக்கும்படி விரும்புகிறார். இதனையே தொண்டரடிப்பொடி ஆழ்வாரும்,

"அறிவிலா மனித ரெல்லாம்,
அரங்கமென் றழைப்பராகில்,
பொறியில்வாழ் நரகமெல்லாம்
புல்லெழுந் தொழியுமன்றே"[27]

என்கிறார். மேலும் அவரே,

"அணிதிருவரங்க மென்னா,
மிண்டர்பாய்ந் துண்ணும் சோற்றை
விலக்கிநாய்க் கிடுமி னீரே"[28]

என்றருளிச் செய்கிறார். இங்கு நாய்க்கிடச் சொன்னது அச் சோற்றுக்குப் பேருபகாரம். நாயின் வயிற்றுக்குச் சென்று சீரணமாகிச் சிறப்படையும். திருவரங்கத்தின் பெயரைக்கூடச் சொல்லாத அப்பாபி வயிற்றில் அது போகாமல் பாய்ந்து விலக்கி நாய்க்கு இட்டுப் புண்ணியமாகப் பரிணமிக்க உதவ வேண்டும் என்கிறார்.

திருக்கோட்டியூர் எம்பெருமான் திருவடிகளில் அன்பு பூண்ட பாகவதர்கள் எழுந்தருளியிருக்கின்ற திருத்தலங்களில் வசித்தலும் அரிய பெரிய தவங்களின்றிப் பெற்ற பேறு என்பதை,

"குருந்தமொன்றொசித் தானொடுஞ்சென்று
கூடியாடி விழாச்செய்து,
திருந்துநான்மறை யோரிராப்பகல்
ஏத்திவாழ்திருக் கோட்டியூர்,

கருந்தடமுகில் வண்ணனைக்கடைக்
கொண்டுகைதொழும் பக்தர்கள்,
இருந்தவூரி லிருக்கும்மானிடர்
எத்தவங்கள்செய் தார்கொலோ"[29]

என்னும் பாசுரம் வெளியிடுகிறது.

எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடத்தில் வசிப்பதற்கு ஒரு தவமே போதுமானது. பாகவதர்களின் நகரத்தில் வசிப்பதற்குப் பல தவங்கள் செய்யவேண்டும் என்பது தோன்ற 'எத்தவங்கள்' என்று பன்மையில் கூறினார்.

சிறந்த குணநலன்களமைந்த செல்வநம்பியை அடிமை கொண்டருளின திருக்கோட்டியூர் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களைப் புகழ்ந்து பாடும் வைணவர்கள் எழுந்தருளியிருக்கும் நாட்டில் உள்ள தானியங்களையும் அரக்கர் அபகரிக்கமாட்டார். இங்குத் தம் வயிற்றுக்கன்றிப் பகவத் பாகவத வழிபாட்டிற்கே தானியங்களைப் பயன்படுத்தும் ஊராதலின் கொள்ளையடிக்கப்புகும் அரக்கர்கள் தம் வலியிழந்து நிற்பர். இதனை,

"நளிர்ந்தசீலன் நயாசலன் அபி
மானதுங்கனை, நாடொறும்
தெளிந்தசெல்வனைச் சேவகங்கொண்ட
செங்கண்மால்திருக் கோட்டியூர்,
குளிர்ந்துறைகின்ற கோவிந்தன்குணம்
பாடுவாருள்ள நாட்டினுள்,
விளைந்ததானிய முமிராக்கதர்
மீதுகொள்ளகி லார்களே"[30]

என்ற பாசுரத்தால் உணர்த்துகிறார்.

இவ்வடியவர்கள் எம்பெருமானது சிறப்பைத் தெரிவிக்க வல்ல சின்னங்கள் என்று நினைந்துதான் நெடுநாளாகக் கொண்டுள்ள பல்வகை ஆசைகளையும் தீர்வேன் என்பதை,

"நம்பனை நர சிங்கனை நவின்
றேத்துவார்களைக் கண்டக்கால்,
எம்பிரான்றன சின்னங்களிவர்
இவரென்றாசைகள் தீர்வனே"[31]

என்று குறிப்பிடுகிறார். இப்பாசுரத்தில் 'கண்டக்கால்' என்பதனால் பாகவதர்களின் சேவை பகவத் சேவையிலும் அரிது என்கிறார். குலசேகர ஆழ்வாரும்,

"மெய்யடி யார்கள்தம்
ஈட்டம்கண்டிடக் கூடுமேலது
காணும்கண்பய னாவதே"[32]

என்று அருளிச் செய்கிறார்

ஒவ்வொரு பாகவதரையும் காணவேண்டுமென்றும், கூடவே இருக்கவேண்டுமென்றும் ஆசைகள் பலவாதல் பற்றி 'ஆசைகள்' எனப்பன்மையாகக் கூறினார்.[33] இத்தகைய பாகவதர்களின் 'திருவடிதனை என் சென்னியிற் சூடுவேன்' என்னும் கருத்தில்,

"கோவிந்தன் தன்னடி யார்களாகி,
எண்டிசைக் கும்விளக் காகி நிற்பார்
இணையடி யென்தலை மேல னவ்வே"[34]

என்று குறிக்கின்றார் பெரியாழ்வார்.

வைணவர்கள் கொள்ளும் பக்தியை இறைவனுக்குத் தொண்டு செய்தல், அடியவர்க்குத் தொண்டு செய்தல் என இருவகையாகக் கொள்ளலாம். அவை சைவ, வைணவ சமயங்களில் பெரிதும் போற்றப் பெறுகின்றன. வைணவ சமயத்தில் பகவத் சேடத்துவம், பாகவத சேடத்துவம் என்று அவை குறிக்கப்பெறும். பகவத் சேடத்துவம் என்பது இறைவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தலைக் குறிப்பது. பாகவத சேடத்துவம் என்பது இறைவனின் அடியவர்க்கு அடியவராய்த் திகழ்தலைக் கூறுவது.

ஸ்ரீவசனபூடணம் பாகவதர்களைப் பற்றி, "அதாவது ஆசார்ய துல்யர் என்றும் சம்சாரிகளிலும் தன்னிலும், ஈஸ்வரனிலும் அதிகம் என்றும் நினைக்கை"[35] என்று கூறுகிறது. இறைவனுக்கு மேம்பட்ட பொருள் இல்லை. ஆதலின் வைணவ பக்தர்களைக் காணின் இறைவனைக் கண்டாற்போல் பக்தி செலுத்த வேண்டும். ஆழ்வார்கள் அனைவரும் இதனாலேயே அடியார்க்குத் தொண்டு செய்தலை விரும்புகின்றனர்.

பெரியாழ்வாரும் இப்பாகவதத் தொண்டினையே விரும்புகின்றார். திருக்கோட்டியூரில் வாழ்ந்த செல்வநம்பி திருமாலுக்குத் தொண்டராகத் திகழ்ந்தவர். பெரியாழ்வார் செல்வ நம்பியைத் தமக்கு வழிகாட்டியாகக் கொள்ளுகின்றார். ஆழ்வாருக்கு முதல் அடியவராகத் திகழ்ந்தவர் செல்வநம்பி ஆவர். ஆதலின் அடியவராய்த் திகழ்வதில் ஆழ்வார் பெற்ற பேறு இனிது விளங்குகிறது.

செல்வநம்பி வாழ்ந்த திருக்கோட்டியூர் வைணவர்களைப் பற்றிப் பெரியாழ்வார் அமைக்கும் பாசுரங்கள் அடியார்க்குச் செய்யும் தொண்டினையும், அவர்தம் சிறப்பினையும் எடுத்து இயம்புகின்றன. வைணவர்களை வணங்கி வாழும் பக்தர்கள் வாழ்வதால் திருக்கோட்டியூர் பேறு பெற்றது என்பது ஆழ்வார் தம் முடிபாகும். திருமால் அடியார்களைக் காணின் திருமாலையே கண்டதாகக் கொள்வர் வைணவர்.[36]

முழுமையான ஞானம் சித்திக்கும்பொழுது ஆன்மாவும் இறையும் வெவ்வேறாக இன்றி, ஒன்றிப் பிணிப்பதையே நம் சமயங்கள் விளக்குகின்றன. இவ்வனுபவத்தையே பெரியாழ்வார்,

"பொன்னைக்கொண் டுரைகல்மீதே
நிறமெழ வுரைத்தாற்போல்
உன்னைக்கொண்டென் நாவகம்பால்
மாற்றின்றி யுரைத்துக்கொண்டேன்"[37]

என்று அருளிச் செய்கிறார். திருமங்கையாழ்வாரும் 'தன்னாக்கித் தன்னின்னருள் செய்யும்' என்பார்.[38]

மானுடம் பாடாமை

இறைவனைக் கவிக்குரிய பொருளாகக் கொண்டவர்கள் ஆழ்வார்கள். இறைவனே "கவிக்கு நிறைபொருளாய் நின்றான்"[39] என்பது திருமழிசை ஆழ்வாரின் அருள்மொழி. "நாக்கொண்டு மானிடம் பாடேன்"[40] என்றும் அவர் கூறுவர். இதனால் ஆழ்வார்கள் இறைவனை யன்றி வேறு எப் பொருளையும் கவிதைப் பொருளாக விரும்பாதவர்கள் என்பது புலப்படுகிறது.

பெரியாழ்வாரும் மானுடம் பாடாக் கொள்கையுடையவர் ஆவார். அதனால்தான் எம்பெருமானை நோக்கி,

"வாக்குத் தூய்மை யிலாமையி னாலே
மாதவா! உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்,
நாக்கு நின்னையல் லாலறி யாது"[41]

என்று பாடுகிறார். திருமாலைத் தவிர வேறு எவரையும் பாடத் தன் நா அறியாது என்பதையே ஆழ்வார் மனந்திறந்து கூறுகிறார்.

"நண்ணி நானுன்னை நாடொறு மேத்தும்
நன்மையே யருள் செய்யெம்பி ரானே"[42]

என்று பெரியாழ்வார் பாடும்போதும் "பிறரை நினையாது திருமாலையே நாடோறும் நினைந்து வாழ்த்தும் நன்மையையே அருளவேண்டும்"[43] என்னும் கருத்தே புலப் படுகிறது.

நம்மாழ்வார், பகைமை ஏற்படும் என்றறிந்தும் இக் கொள்கையை வற்புறுத்துகின்றார்;

"சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன்
கேண்மினோ
என்னாவில் இன்கவி யானொரு வர்க்கும் கொடுக்கிலேன்"[44]

என்று தொடங்கி 'மானுடம் பாடா'க் கொள்கையைப் பாடு கிறார்.

**பாடற் பயன்**

"அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே"[45]

என்பர்.

ஆழ்வார்களின் பாசுரங்களைக் கற்றால் ஏற்படும் பயனை அவர்களுடைய அருளிச் செயல்களே நன்கு உணர்த்துகின்றன. ஆழ்வார் பாசுரங்களில் ஒவ்வொரு திருமொழியின் ஈற்றிலும் பாடற்பயன் கூறப்படுகிறது.

"மின்னு நூல்விட்டு சித்தன்விரித்தஇப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே"[46]
"விருப்பா லுரைத்த இருபதோ டொன்றும்
உரைப்பார்போய் வைகுந்தத் தொன்றுவர் தாமே"[47]
"செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன்சொல்
எஞ்சாமை வல்லவர்க் கில்லை யிடர்தானே"[48]
"புகழ்ப்புதுவைப் பட்டனுரைத்த தமிழ்
இன்னிசை மாலைகளிப் பத்தும்வல் லார்உலகில்
எண்டிசை யும்புகழ்மிக் கின்பம தெய்துவரே" [49]

என்னும் கூற்றுகளால் இலக்கியத்தின் நோக்கம் வீடு பேறடைதல் என்பதும், வினையின் நீங்கி இன்ப நிலையை அடைதல் என்பதும் புலனாகின்றன. எனவே இடர்நீங்கி வீடு பேறடைதலே ஆழ்வார்கள் தம் நோக்கம் என்பதும் அறிய முடிகிறது.

**பண்**

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்துள் மூன்றாவதாயிரம் 'இயற்பா' என்று பெயர் பெற்றமையால் மற்றைய மூன்று

ஆயிரமும் இசையோடுபாடவேண்டியவை என்பது தெளி வாகிறது. இவை பண்ணோடு பாடப் பெற்றவை என்பதனை,

"இன்னிசை மாலைகளிப் பத்தும்"[50]
"பண்பல பாடிப் பல்லாண் டிசைப்ப"[51]
"பண்பகர் வில்லிபுத் தூர்க்கோன்
பட்டர் பிரான்சொன்ன பத்தே"[52]
"பண்ணின்பம் வரப்பாடும் பத்த ருள்ளார்
பரமானந்த வைகுந்தம் நண்ணு வாரே"[53]

என்று வருகின்ற பெரியாழ்வார் பாசுரங்களால் அறியலாம்.

**பிரபத்தி**

கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தி என்கிற நான்கு வழிகளில் ஒன்றாகவே பக்தியைக் குறிப்பிடு கின்றனர். பக்தியின் முதிர்ச்சியாகிய பிரபத்தியும் ஞானத்தின் விளைவேயாகும். இதனால் இறைவனைப் புகலடைகின்றவர் களுக்கு அவன் 'இலட்சியம்' என்ற அளவில் இல்லாமல் அவனே வழியாகவும் அமைந்துள்ளான்.

பிரபத்தி நிலையினை விளக்கும் அறிஞர்கள்,

1. இறைவனையன்றி வேறெவர்க்கும் வேறெதற்கும் நான் அடிமையில்லை;

2. அவனையன்றி வேறெவரையும் வேறெதனையும் இன்பமாகக் கருதேன்;

3, அவனையன்றி வேறெவரையும் வேறெதனையும் உபாயமாகக் கருதேன்

என மூன்று உறுதிகளை எடுத்துக் கூறுவர்.

ஆழ்வார்களுக்கெல்லாம் பிரபத்தி செய்வதற்கு வழியாய் இருந்தது அர்ச்சை வடிவங்களேயாகும். எளிய முறையான இப் பிரபத்தி ஆழ்வார்களுக்குப் பெரும் சிறப்பை அளித்தது. பெரியாழ்வார்தம் வாழ்க்கையினை இறைத்தொண்டினுக்

அளித்தவர். அவருடைய வாழ்க்கைத் தத்துவமே பிரபத்தி மார்க்கமாகும்.

இறைவனைப் பலவாறாகப் பாடும் ஆழ்வார் பாசுரங்களில் இறைவனைச் சரணடைதற்கான செய்தி இறுதியில் அமைகின்றது. திருமாலைக் கண்ணனாகவும், அர்ச்சைகளாகவும் அனுபவித்த ஆழ்வார் அவனைச் சரணடைகிறார்.

பிறவிகள் பல எடுத்துத் துன்பக்கடலில் உழலும் ஆன்மா' முடிவான திருமாலின் திருவடியைப் பற்றின் துயர் நீங்கும். அப்பேற்றினைப் பெரியாழ்வார்,

"காதம் பலவும் திரிந்துழன்
றேற்கங்கோர் நிழலில்லை நீருமில்லை,உன்
பாத நிழலல்லால் மற்றோர்
உயிர்ப்பிடம் நானெங்கும் காண்கின்றிலேன்"[54]

என்கிறார். தான் இறைவன் திருவடியைப் பற்றியதைக் குறிக்கின்றார் முழுதும் சரணடைந்த ஒரு சீவான்மாவின் கூற்றாக இது கொள்ளத்தக்கது. பிரபத்தியால் அவன் பாதம் பற்றின சீவான்மா மற்றொன்றினை எண்ணாது தன் செயலைச் செய்யும். இதனை ஆழ்வார்,

"உனக்குப் பணிசெய் திருக்கும்
தவமுடை யேனினிப் போயொருவன்
றனக்குப் பணிந்து, கடைத்தலை
நிற்கைநின் சாயை யழிவுகண்டாய்"[55]

என உரைக்கின்றார். பிரபத்தி மார்க்கத்தையும், அதன் பயனையும் இவ்விரு பாசுரங்களின் வழி பெரியாழ்வார் விளக்குவது இனிது புலப்படும்.

**பெரியாழ்வார் உணர்த்தும் பிற வழிபாட்டு நெறிகள்**

மேகம் மின்னொடு தோன்றினாற் போலவே எம்பெருமான் பிராட்டியுடன் பாற்கடல், வைகுண்டம், துவாரகை முதலான இடங்களையெல்லாம் விட்டு நீங்கித் தம் உள்ளத்தில்

புகுந்து விளங்கும் பேரின்பத்தினை அனுபவித்து மகிழ்ந்தவர் பெரியாழ்வார். அதனால்,

பணிக்கடலில் பள்ளிகோளைப்
பழகவிட்டு, ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல
மாயமணாளநம்பி''[56]

என்கிறார். மேலும் இன்னொரு பாசுரத்தில்,

சுடரொளியாய் நெஞ்சினுள்ளே
தோன்றுமென் சோதிநம்பீ
வடதடமும் வைகுந்தமும்
மதிள்துவராபதியும்
இடவகைக ளிகழ்ந்திட்டென்பால்
இடவகை கொண்டனையே''[57]

என்றும் கூறுகிறார். மற்றொரு பாசுரத்தில்,

''அரவத் தமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்
அரவிந்தப் பாவையுந் தானும்
அகம்படி வந்து புகுந்து
பரவைத் திரைபல மோதப்
பள்ளிகொள் கின்ற பிரானை''[58]

என்று அருளிச் செய்கிறார். கண்ணபிரான்பால் எல்லையற்ற அன்பினைக் கொண்டுள்ளதால் அவன் ஆழ்வார் மனத்திலேயே கோயில் கொண்டிருக்கிறானாம்.

''விட்டுசித் தன்மனத்தே
கோயில்கொண்ட கோவலனை''[59]

என்பது ஆழ்வார் பாசுரம்.

பெரியாழ்வார் தம் உள்ளக் கோயிலில் ஆண்டவனை அமர்த்தி அவனுக்கு அன்புமலரிட்டு வணங்கினார். உண்ணா

நாள் அவருக்குப் பட்டினி நாளன்று; இறைவனை எண்ணாத நாளே அவருக்குப் பட்டினி நாளாகும். இதனை,

"உண்ணா நாள்பசி யாவதொன் றில்லை
ஓவா தே 'நமோ நாரணா!' என்று,
எண்ணா நாளும் இருக்கெசுச் சாம
வேத நாண்மலர் கொண்டுன பாதம்
நண்ணா நாள், அவை தத்துறு மாகில்
அன்றெ னக்கவை பட்டினி நாளே"[60]

என்று அருளிச் செய்தலைக் காணலாம்.

மலரிட்டு அருச்சிக்கும் வழிபாட்டினைப் பெரியாழ்வார் மகிழ்ந்து மேற்கொண்டிருந்தார். கண்ணனைப் பூச்சூட்ட அழைக்கும் பகுதியில் அவனுக்குரிய எட்டு மலர்களைக் குறிப்பிடுகிறார் ஆழ்வார்.[61]

திருமங்கையாழ்வாரும்,

"கந்த மாமல ரெட்டுமிட்டு நின்காமர்
சேவடி கைதொழுதெழும்,
புந்தியேன்"[62]

என்று எட்டு மலர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

'பரிவதில் ஈசனைப் பாடி' எனத் தொடங்கும் திருவாய் மொழிப் பாசுரத்தில்,

"பிரிவகை யின்றிநன் னீர் தூய்,
புரிவது வும்புகை பூவே"[63]

என்னும் அடிகளைப் பட்டர் உபன்யசிக்கும்போது, "புரிவதும் புகை பூவே" என்றும் சொற்றொடரைத் திருவுள்ளம் பற்றி, "'இவ்விடத்தில் அகில்புகை என்றாவது, கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும், ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகை யிட்டுப் புகைக்கலாம். கண்ட காலிப் பூவும் சூட்டலாம்"

என்று கூறினாராம். அதை நஞ்சீயர் கேட்டு. "கண்டகாலிப் பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது" என்று சாத்திரம் மறுத்துரைக்க இப்படி அருளிச் செய்யலாமோ என்று கேட்டார். அதற்குப் பட்டர், "சாத்திரம் மறுத்தது மெய் தான். கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுக்கவில்லை. அடியவர்கள் அப்பூவைப் பறித்தால் முள் பாயுமே என்று பக்தர்கள் பக்கல் தயையினால் சாத்திரம் அதனை நீக்கியதே யன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றாராம்.[64] இந்தக் கருத்து ஈண்டு நினைக்கத்தக்கது.

"கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும்,
முள்ளார் முளரியும் ஆம்பலுமுன் கண்டக்கால்,
புள்ளாயோர் ஏனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்
கென்று
உள்ளாதா ருள்ளத்தை யுள்ளமாக் கொள்ளோமே"[65]

என்று திருமங்கை யாழ்வாரும் பாடுகிறார். இப்பாசுரத்தில் ஆழ்வார் பல மலர்களைக் குறிப்பிட்டிருப்பினும் "இறைவனுக்கு அர்ச்சிப்பது முக்கியமன்று; அர்ச்சிப்பவனது மனமே சிறந்தது" என்கிறார். அன்பிலாதவன் திருத்துழாய் இடினும் பயனில்லை; அன்புடன் இடின் காகணம்பூவும் ஆகும் என்கிறார்.

எனவே, மற்றைய ஆழ்வார்களைப் போல மலரிட்டு அருச்சிக்கும் வழிபாட்டுநெறியைப் பெரியாழ்வாரும் போற்றுகிறார் எனலாம்.

பெரியாழ்வார் வழிவழியாகத் தாம் இறைவனுக்கு ஆட்பட்டதனைக் குறிக்கும்போது,

"தீயிற் பொலிகின்ற செஞ்சுட ராழி
திகழ்திருச் சக்கரத்தின்,
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று
குடிகுடியாட் செய்கின்றோம்"[66]

என்று அருளிச் செய்கின்றார். இதனையே மீண்டும்,

"என்னையுமென் னுடைமையுமுன்
சக்கரப்பொறி யொற்றிக்கொண்டு,
நின்னருளே புரிந்திருந்தேன்
இனியென் திருக்குறிப்பே"[67]

என்று பாடுவர் பெரியாழ்வார்.

திருமால் தன்னை ஏற்றுக்கொண்ட பின் தன் பிறவித் துன்பமான கடல்வற்றிப் பேரின்பப் பெரும்பதம் பெற்றதனை

"பறவையேறு பரமபுருடா!
நீயென்னைக் கைக்கொண்டபின்
பிறவியென்னும் கடலும்வற்றிப்
பெரும்பத மாகின்றதால்
இறவுசெய்யும் பாவக்காடு
தீக்கொளீஇ வேகின்றதால்
அறிவையென்னு மமுதஆறு
தலைப்பற்றி வாய்க்கொண்டதே"[68]

என்கிறார். எம்பெருமானுக்குத் தாம் ஆட்பட்டுத் தமக்குக் கிடைத்த நன்மைகளையும், தம்முடைய பாபங்கள் ஒழிந்து அமுதக் கடலில் திளைத்தனையும் நினைந்து பேரின்ப மடைகிறார் ஆழ்வார். இதனையே ஆண்டாளும் தம் திருப் பாவையில்,

"தூ யோமாய் வந்துநாம் தூ மலர் தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்"[69]

எனத் தெளிவாக எடுத்துரைக்கிறார். இதனால் இறைவன் இதற்குமுன் தாம் அறியாது செய்த குற்றங்களையும், இனிவரப் போகும் குற்றங்களையும் தீயினில்பட்ட தூசுபோல் இருந்த சுவடே தெரியாமல் மறைந்தருளச் செய்வான் என்கிறார்.

பிறவியறுக்கத் திருமாலே மாமருந்து என்பது பெரியாழ்வார் கருத்து. இதனை,

"மருத்துவ னாய்நின்ற மாமணி வண்ணா"[10]

என்னும் தொடர் தெளிவுறுத்தும்.

"ஏலும றைப்பொருளே ஆடுக செங்கீரை
ஏழுல கும்முடையாய்! ஆடுக ஆடுகவே"[11]

எனும்போது கண்ணன் பரம்பொருள் என்ற உணர்வும் அவரிடம் மறையாது இருந்தமை உணரமுடிகிறது.

திருமாலிருஞ் சோலையிலுள்ள இறைவனைப் பாடும் போது திருக்கோயிலைப் பாடுவதுடன் நில்லாமல் பக்தியால் தான் ஒன்றிவிட்ட திருமாலையே பாடுவதனை,

"உனக்குப் பணிசெய் திருக்கும்
தவமுடை யேனினிப் போயொருவன்
றனக்குப் பணிந்து, கடைத்தலை
நிற்கைநின் சாயை யழிவுகண்டாய்,
புனத்தினைக் கிள்ளிப் புதுவவி
காட்டியுன் பொன்னடி வாழ்கவென்று,
இனக்குற வர்புதிய துண்ணும்
எழில்மாலிருஞ் சோலையெந்தாய்"[12]

என்னும் பாசுரத்தால் காணலாம். மேலும் பெரியாழ்வார் இறைவனை நினைந்துருகும் உடல் தன் வசமில்லை என்கிறார். கால்கள் நடக்க மறுக்கின்றன. கண்களில் நீர் அருவியாகப் பெருகுகின்றது. உடலும் சோர்ந்து குரலும் தோன்றவில்லை. உடல் புளகாங்கிதமடைகின்றது. தோள்கள் தளர்ந்துவிட்டன. மனம் எதிலும் ஈடுபடவில்லை. இந்நிலையை,

"காலு மெழாகண்ண நீரும்நில்
லாஉடல் சோர்ந்துநடுங்கி, குரல்
மேலு மெழாமயிர்க் கூச்சு
மறாஎனத் தோள்களும் வீழ்வொழியா,

மாலுக ளாநிற்கு மென்மன
னேஉன்னை வாழத்தலைப்பெய்திட்டேன்
சேலுக ளாநிற்கும் நீள்சுனை
சூழ்திரு மாலிருஞ் சோலையெந்தாய்"[73]

என்னும் பாசுரத்தால் அருளிச் செய்கிறார்.

கிருஷ்ணாவதாரச் சிறப்புகள் அனைத்தையும் அனுபவித்த பெரியாழ்வார் இராமபிரானுடைய பண்புநலன்களையும் ஒரே காலத்தில் அனுபவிக்க விரும்பி, இரண்டு ஆய மகளிரின் நிலையைத்தாம் அடைந்து அவ்விருவருள் ஒருத்தி கிருஷ்ணாவதார வரலாற்றையும், மற்றொருத்தி இராமாவதார வரலாற்றையும் சொல்லுவதாக இரண்டு அவதாரங்களின் குணவிசேடங்களையும் அனுபவித்து,

"பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து,
நஞ்சுமிழ் நாகம் கிடந்தநற் பொய்கைபுக்கு,
அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட் டருள்செய்த,
அஞ்சன வண்ணனைப் பாடிப்பற
அசோதைதன் சிங்கத்தைப் பாடிப்பற"[74]

என்றும்,

"முடியொன்றி மூவுல கங்களு மாண்டு, உன்
அடியேற் கருளென் றவன்பின் தொடர்ந்த,
படியிற் குணத்துப் பரதநம் பிக்கு,அன்
றடிநிலை யீந்தானைப் பாடிப்பற
அயோத்தியர் கோமானைப் பாடிப்பற"[75]

என்றும் அருளிச் செய்தலைக் காணலாம்.

அன்புநெறி பற்றிநின்று பிறவிப்பிணி அறுத்துப் பேரின்பம் பெற்றவர்கள் ஆழ்வார்கள். அவர்கள்தாம் பெற்ற பேற்றை உள்ளம் உருக்கும் செந்தமிழ்ப் பாக்களால் நம்பொருட்டு உணர்த்திச் சென்றிருக்கின்றனர்.

பெரியாழ்வார் இறையருளைப் பெற்ற ஞானி. அவருடைய பாசுரங்கள் உயர்ந்த அனுபவத்தை எடுத்துரைக்கும் ஞானப் பாடல்களாகும். நெஞ்சை உருக்கும் கனிவு அமைந்தவை. உள்ளத்தை நெகிழச் செய்யும் பக்தியும், உயர்ந்த மெய்யுணர்வு நிலையும் அந்தப் பாடல்களில் ஒருங்கே காணப்படுகின்றன. இவர் 'நானார் என்னுள்ளமார் ஞானங்களார்'[16] என்ற தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டு இருவினைக் கீடாகப் பிறந்து உழலும் உயிர்த்தொகுதிகளின் இயல்பையும், அவ்வுயிர்களை வினைப்பயன் நுகருமாறு செய்து அருள் புரியும் கருணைக் கடலான இறைவனின் இயல்பையும், அவ்விறைவனை அடை தற்குத் தடையாய் உள்ள பாசப் பொருள்களின் இயல்பையும் உணர்ந்து தெளிவுபெற்றார். உலகப் பற்றை முற்றுந் துறந்த ஆழ்வார் தமக்குத் திருமால் அருளிய இணையிலாப் பேரின்ப நிலையைத் தாம் அனுபவித்த நிலையில் நின்று உலக மக்களை யும் காப்பாற்ற நினைத்தார். இவர் இவ்வுலக இயல்புகளைத் தம் நுண்ணிய அறிவால் உய்த்துணர்ந்தார். பெரியாழ்வார் விருப்பு வெறுப்பற்ற நிலையில் நின்றாலும் மக்கள் பாலுள்ள அன்பை விட்டவரல்லர்.

அறிவுடையார் மனைவி என்றும், மக்கள் என்றும் உறவினரை ஆதரிப்பதன் நோக்கம் அவர்கள் உடல் இளைத்த காலத்து அருகிலிருந்து திருமால் திருநாமங்களை ஓதுவார்க ளென்பதற்காகவேயாகும். ஆனால் அவர்களோ இறக்கும் தரு வாயிலும் விடாது,

"சோர்வி னால்பொருள் வைத்ததுண் டாகில்
சொல்லு சொல்லென்று சுற்று மிருந்து"[17]

பொருள் கேட்பார்களே யன்றி இறைவன் நாமத்தைச் செவி யில் ஊட்ட மாட்டார்கள் என்கிறார் பெரியாழ்வார். இதனையே திருமங்கையாழ்வார்,

"பிறிந்தேன் பெற்ற மக்கள் பெண்டிரென் றிவர் பின்னுதவா
தறிந்தேன்"[18]

என்கிறார்.

நம்மாழ்வாரும்,

"கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத் தவர் பிறரும்
கண்ட தோடு பட்ட. தல்லால் காதல்மற் றியாதுமில்லை"[79]

என்று அருளிச் செய்கிறார். மேலும்,

"துப்புடை யாரை யடைவ தெல்லாம்
சோர்விடத் துத்துணை யாவ ரென்றே,
ஒப்பிலே னாகிலும் நின்ன டைந்தேன்
ஆனைக்கு நீயருள் செய்த மையால்,
எய்ப்பென்னை வந்து நலியும் போதங்
கேதும்நா னுன்னை நினைக்க மாட்டேன்,
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளி யானே"[80]

என்று பெரியாழ்வார், யானைக்கு அருள் செய்த நிகழ்ச்சியைக் காரணங் காட்டிச் சரண் அடைகிறார். திருமாலுக்குப் பணி செய்வதான யானை மலர்பறிக்க ஒரு பெரிய பொய்கையில் சென்று இறங்கியதும் அங்கு முதலையின் வாயில் அகப்பட்டு 'ஆதிமூலமே'! என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடப் புள்ளின் மீது எழுந்தருளித் தன் சக்கரப் படையைக் குறித்து முதலையைத் துணிந்து யானையை அதன் வாயினின்றும் காப் பாற்றி முத்தியளித்த செய்தி அனைவரும் அறிந்ததாகும். இவ் வரலாற்றை எடுத்துக்கூறி உயர்திணையும் அஃறிணையுமாகிய உயிர்களை அன்போடு துயர் தீர்த்துப் பாதுகாத்தருளுகின்ற திருமாலின் அருளின் மிகுதியை எடுத்துக்காட்டுகிறார். இதனைத் திருமங்கையாழ்வாரும் தம் திருமொழியில்,

"கடிகொள் பூம்பொழில் காமரு பொய்கை
வைகு தாமரை வாங்கிய வேழம்,
முடியும் வண்ணமோர் முழுவலி முதலை
பற்ற மற்றது நின்சரண் நினைப்ப"[81]

என்று அருளிச் செய்கிறார். மேலும் பெரியாழ்வார்தம் திருமொழியில்,

"வஞ்ச யுருவின் நமன்ற மர்கள்
வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது,
அஞ்சலை யென்றென்னைக் காக்க வேண்டும்"[82]

என்று திருமாலை வேண்டுதலைக் காணலாம்.

பெரியாழ்வார் பெரும்புலவர் மட்டுமல்லர், உலக அறிவும் அனுபவமும் சாலச் சிறந்து விளங்கியவர் என்பதனை,

"மடிவ ழிவந்து நீர்புலன் சோர
வாயி லட்டிய கஞ்சியும் மீண்டே
கடைவ ழிவாரக் கண்ட மடைப்பக்
கண்ணு றக்கம தாவதன் முன்னம்"[83]

என்றும்,

"அங்கம் விட்டவை யைந்து மகற்றி
ஆவி மூக்கினில் சோதித்த பின்னை,
சங்கம் விட்டவர் கையை மறித்துப்
பைய வேதலை சாய்ப்பதன் முன்னம்"[84]

என்றும்,

"வாயொ ருபக்கம் வாங்கி வலிப்ப
வார்ந்த நீர்க்குழிக் கண்கள் மிழற்றத்
தாயொ ருபக்கம் தந்தையொரு பக்கம்
தாரமு மொரு பக்க மலற்றத்
தீயொ ருபக்கம் சேர்வதன் முன்னம்"[85]

என்றும் குறிப்பிடுகின்ற பாசுரங்களால் அறியலாம். இவர் இதன் வாயிலாக உலக நிலையாமையையும், யாக்கை நிலையாமையையும் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் நன்கு பதியுமாறு வற்புறுத்திச் செல்லுதலைக் காணலாம். திருமங்கையாழ்வாரும் யாக்கை நிலையாமையை,

"ஊனிடைச் சுவர்வைத் தென்புதூண் நாட்டி
உரோமம்மேய்ந்து ஒன்பது வாசல்,

தானுடைக் குரம்பை பிரியும்போ துன்றன்
சரணமே சரணமென் றிருந்தேன்''[86]

என்று அருளிச் செய்கிறார்.

செல்வ நம்பியின் ஊராகிய திருக்கோட்டியூரில் குயில்கள் கூவுவதும் பெரியாழ்வார் செவிகளில் கோவிந்தன் குணம் பாடுவது போலவே தோன்றுகிறது என்பதனை,

''கொம்பினார்பொழில் வாய்க்குயிலினம்
கோவிந் தன்குணம் பாடுசீர்
செம்பொனார்மதில் சூழ்செழுங்கழ
னியுடைத்திருக் கோட்டியூர்''[87]

என்ற பாசுரத்தால் அறியலாம். மேலும்,

''கருந்தட முகில் வண்ணனைக்கடைக்
கொண்டுகைதொழும் பத்தர்கள்
இருந்தவூரி லிருக்கும்மானிடர்
எத்தவங்கள்செய் தார்கொலோ''[88]

என்கிறார்.

தம் மக்களுக்கு இறைவன் பெயர்களை இடாமல் வேறு பெயர்களை இடும் மக்களை நோக்கிப் பெரியாழ்வார் அறவுரை கூறுவதனை,

''காசும் கறையுடைக் கூறைக்கு மங்கோர்
கற்றைக்கும்
ஆசையி னால்அங் கவத்தப்பேரிடும் ஆதர்காள்,
கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித் திருமினோ,
நாயகன் நாரணன் தம்மன்னை நரகம்புகாள்''[89]

என்ற பாரத்தால் அறியலாம். கேசவன், நாயகன், நாரணன் என்னும் திருநாமங்களைத் தம் பிள்ளைகளுக்குப் பெயர்களாக இட்டால் அவர்களைப் பெற்ற தாய் தந்தையர் நமன்தமர் கையிலகப் பட்டு நலிவுபடாமல் உய்ந்து போவர் என்கிறார் பெரியாழ்வார்.

மேலும்,

''செங்க ணெடுமால் சிரீதரா வென்ற ழைத்தக்கால்
நங்கைகாள்! நாரணன் தம்மன் னைநர
கம்புகாள்''[90]

''பிச்சைபுக் காகி லு மெம்பி ரான்திரு நாமமே
நச்சுமின் நாரணன் தம்மன் னைநர கம்புகாள்''[91]

''குலமுடைக் கோவிந்தா கோவிந்தா வென்ற
ழைத்தக்கால்
நலமுடை நாரணன் தம்மன் னைநர கம்புகாள்''[92]

''சாடிறப் பாய்ந்த தலைவா தாமோ தராவென்று
நாடுமின் நாரணன் தம்மன் னைநர கம்புகாள்''[93]

என்றும் கூறி எம்பெருமானின் பெயர்களையே இடுமாறு அறிவுறுத்துகிறார்.

''நம்பி பிம்பியென்று நாட்டு மானிடப் பேரிட்டால்,
நம்பும் பிம்புமெல் லாம்நாலு நாளி
லழுங்கிப்போம்''[94]

என்று ஏசுகின்றார். 'நம்பி' என்றால் 'குறைவற்றவன்' என்னும் பொருளுடையதாகக் கொண்டு இப்பெயரைத் தமது பிள்ளைக்கு இட்டால் ஒரு குறையுமின்றிப் பூரணனாயிருப்பன் என்று நினைத்து அப்பெயரை இடுகின்றவர்களைக் குறித்து ஏளனம் செய்கிறார். பிம்பி என்பதற்கு இங்கு ஒரு பொருளும் இல்லை. இச்சொல் எப்படிப் பொருளற்றதோ அப்படித்தான் 'நம்பி' என்ற சொல்லும் பொருளற்றது என்பது ஆழ்வார் கருத்து. ஆகவே 'நம்பி'க்கு எதிர்த்தட்டாக ஒரு பிம்பியை அருளிச்செய்கின்றார். இவ்வாறே வெறுப்புத் தோன்றக் கூறும் இடங்களிலெல்லாம் மற்றொரு சொல் பொருளின்றி வழங்கப் பெறுவது உலகியற்கையாகும். ஒருவன் ஒரு கடையில் 'உப்பு உளதோ' என்று கேட்டால் அதற்குக் கடையிலுள்ளவன் வெறுப்புக் கொண்ட காலத்தில் 'உப்பும் இல்லை பப்பும் இல்லை' என்று கூறுவதை இன்றும் நாம் காணலாம். அது போன்றே இங்கும் 'நம்பி' என்ற வெறுப்புக்கொண்ட ஆழ்வார் 'பிம்பி' என்ற மற்றொரு பொருளில்லாப் பெயரை இணைத்துக் கூறுகின்றார். ஆகவே,

"செம்பெருந் தாமரைக் கண்ணன் பேரிட்
டழைத்தக்கால்,
நம்பிகாள்! நாரணன் தம்மன் னைநர
கம்புகாள்"[95]

என்கிறார்.

"ஊத்தைக் குழியி லமுதம் பாய்வது போல், உங்கள்
மூத்திரப் பிள்ளையை என்முகில் வண்ணன்
பேரிட்டுக்
கோத்துக் குழைத்துக் குணால மாடித் திரிமினோ
நாத்தகு நாரணன் தம்மன் னைநர கம்புகாள்"[96]

என்றும் ஆழ்வார் அருளிச் செய்கிறார். இறைவனுடைய உயர்ந்த திருநாமத்தை மானிட மக்களுக்கு இடுவது, அசுத்த மாகிய ஓர் எச்சிற் குழியில் அமுதத்தைப் பாய்ச்சுவதை ஒக்கும் என்கிறார். ஊத்தைக் குழியில் அமுதம் பாய்ந்தால் அமுதமும் அசுத்தமாகித் துய்ப்பதற்குத் தகுதியற்றுப் போகும். ஆனால் எம்பெருமானின் திருநாமமோ தனக்கு யாதொரு கேடுமில்லாத படி தான் புகுந்த இடத்தையும் பரிசுத்த மாக்கிவிடும் என்று திருநாமத்தின் பெருமையை எடுத்துக் காட்டுகிறார் பெரி யாழ்வார். இங்ஙனம் பலவாறாகப் பிள்ளைகளுக்கு எம் பெருமான் திருநாமங்களை இடும் இன்றியமையாமையை வற் புறுத்திச் செல்லுகின்றார்.

திருமாலைப் பக்தியுடன் வழிபட்டுச் சரணடைந்தால் அவன் நமக்கு எல்லாச் செல்வமும் ஆவான். எல்லாப் பிணி களையும் தீர்த்தருளும் மருந்தாவான். பாபங்களைச் செய்யும் ஐம்புலன்கள் நம்மைக் கெடுத்து அழிக்காமல் தடுப்பான் என்று ஆழ்வார்கள் பக்தியின் மேம்பாட்டைத் தம் அருளிச் செயல்களில் நன்கு விளக்கியுள்ளனர்.

பெரியாழ்வார் உலகத் துன்பங்கள் அனைத்திற்கும் காரணம் பற்றே என்கிறார். இவர் இவ்வுலக இயல்புகளை உய்த்துணர்ந்தார். எனவே ஆழ்வார் இறைவனை அடை

தற்குப் பெருந்தடையாயுள்ள அகம் புறமாகிய பற்றுக்களை ஒழிக்கவேண்டும் என்கிறார். யான், எனது என்னும் செருக்கு அறுப்பின் பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியும் என்று உணர்த்துகிறார். இவர் உலக நிலையாமையின் வாயிலாக அறத்தைப் பெரிதும் வற்புறுத்துகிறார். ஆழ்வார் தமக்குத் திருமால் அருளிய பேரின்ப நிலையில் நின்று உலக மக்களைக் காப்பாற்ற நினைத்தார். பெரியாழ்வார் மக்களுக்குச் சிறந்த தொரு வழிகாட்டியாகத் திகழ்கிறார்.

# ஆழ்வார் உணர்த்தும் வழிபாட்டு நெறி

## குறிப்புகள்

1. அ. மு. பரமசிவானந்தம், 'எல்லோரும் வாழ வேண்டும்', பக். 62-63.
2. திருவருட்பா, அருள் திருமுறை, பாடல் 3.
3. கம்ப., பாலகாண்டம், பாடல் 30.
4. நற். பாடல் 9.
5. முருகு. அடிகள் 93-94.
6. பெரியாழ். திரு. 373/3-4.
7. இரண்டாம் திருவந் 2182.
8. மே. நூல்., 2187.
9. நா. தி. பி., முதலாயிரம், ராஜம் வெளியீடு, பதிப்புரை, ப.3.
10. ப. அருணாசலம், 'பக்தி இலக்கியம்', ப. 133.
11. திருப்பல். 1.
12. திருப்பல். 3.
13. திருப்பல். 4.
14. திருப்பல். 5.
15. திருப்பல். 6/3.
16. திருப்பல். 7/3.
17. திருப்பல். 12/4.
18. பெரியாழ். திரு. 451.
19. ,, 453.
20. பெரிய திரு. 1555/3-4.
21. பெரியாழ். திரு. 443.
22. திருவேங்கடத்தந்தாதி, பாடல் 59.
23. பெரியாழ். திரு. 361.
24. ,, 365.
25. பெரிய திரு. 1033.

26. பெரியாழ். திரு. 363/3-4.
27. திருமாலை, பாடல் 884/3-4
28. ,, 885/3-4
29. பெரியாழ். திரு. 366.
30. ,, 367
31. ,, 368/3-4
32. பெருமாள் திரு. 658/3-4
33. பெரியாழ். திரு. 368, அண்ணங்கராசாரியர் உரை.
34. ,, 212/4
35. ஸ்ரீவசன. சூ. 226.
36. பெரியாழ். திரு. 368.
37. ,, 467
38. பெரிய திரு. 1043/2
39. நான்முகன் திரு. 2450.
40. ,, 2456/1
41. பெரியாழ். திரு. 433.
42. ,, 440/4
43. திருவாய். 2987.
44 ,, 2985.
45. நன்னூல், நூற்பா. 10.
46. பெரியாழ். திரு. 22/4
47. ,, 43/3-4
48 ,, 53/3-4
49. ,, 74/4
50. பெரியாழ். திரு. 74/4
51. ,, 112/3
52. ,, 191/4
53 ,, 263/3-4
54. ,, 456
55. ,, 455.

56. பெரியாழ். திரு. 471
57. ,, 472/2-4
58. ,, 452
59. ,, 473
60. ,, 438/2-4
61. ,, 182/4
62. பெரிய திரு. 1193.
63 திருவாய். 2730.
64. பெரிய திரு , அண்ணங்கராசாரியர் திவ்யார்த்த தீபிகை, ப. 115.
65. பெரிய திரு. 2017.
66. திருப்பல். 7
67 பெரியாழ். திரு. 463/3-4
68. ,, 464
69. திருப். 478/5-8
70. பெரியாழ், திரு. 458/3
71. ,, 72/4
72 ,, 455
73. ,, 457.
74. ,, 311
75, ,, 312
76. திருவாச. திருக்கோத்தும்பி, பாடல் 2.
77. பெரியாழ். திரு. 373
78. பெரிய திரு. 1461
79 திருவாய் 3557/1-2
80 பெரியாழ். திரு 423
81. பெரிய திரு. 1420
82. பெரியாழ் திரு. 429/3-4
83. . 375

84. பெரியாழ். திரு. 376.
85 ,, 379.
86. பெரிய திரு. 1006.
87. பெரியாழ். திரு. 368.
88. ,, 366/3-4
89. ,, 381.
90. ,, 382/3-4
91. ,, 383/3-4
92. ,, 385/3-4
93. ,, 386/3-4
94. ,, 388.
95, ,, 388/3-4
96. ,, 389.

# ஆழ்வார் உணர்த்தும் வைணவ நெறி

**ஐந்து நிலைகள் :**

வைணவ சமயத் தத்துவப்படி இறைவனுக்கு ஐந்து நிலைகள் உள்ளன. இந்த நிலைகள் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்பனவாம். இவற்றுள் பரத்துவம் என்பது திருமால் வைகுந்தத்தில் இருக்கும் நிலை; வியூகம் இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை நடத்துதற்கு மேற்கொள்ளும் நிலை; விபவம் என்பது தன்னை அடைந்தாரைக் காப்பதற்காகவும், அவர்களின் பகைவர்களை அழிப்பதற்காகவும் அவ்வப்போது இறைவன் மேற்கொள்ளும் அவதார நிலை; அந்தர்யாமித்துவம் என்பது எள்ளுறு நெய்போல் பொருள்கள் தோறும் விரவி நிற்கும் நிலை; அர்ச்சை என்பது திருக்கோயில்களில் காணப்படும் உருவ வழிபாடு. எந்த நிலையில் இருப்பினும் எம்பெருமான் ஒருவனேயாவான். அனைவருக்கும் எளிதாகக் கிட்டும்படி இருப்பது அர்ச்சை நிலையே ஆகும். இதுவே ஆழ்வார்கள் அனைவரின் உள்ளத்தைக் கவர்ந்த நிலையுமாம்.

பரத்துவ நிலையில் திருமால் பெரிய பிராட்டியுடன் புலனுலகுக்கு அப்பால் உள்ள திருநாட்டில் (பரமபதம், வைகுந்தம்) திகழும் தன்மையினைப் பரிபாடலில்,

> "தன்னுரு வுறழும் பாற்கட னாப்பண்
> மின்னவிர் சுடர்மணி யாயிரம் விரித்த
> கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத்
> துளவஞ் சூடிய வறிதுயி லோனும்"[1]

எனவரும் பகுதியினால் அறியலாம்.

திருமாலின் பரத்துவத்தைப் பெரியாழ்வாரும் இனிமையாகப் பாடி மகிழ்ந்திருக்கிறார். அவர்,

"நாடு நகரமும் நன்கறி யநமோ
நாராய ணாயவென்று,
பாடு மனமுடைப் பத்தருள் ளீர்வந்து
பல்லாண்டு கூறுமினே"[2]

என்றும்,

"நல்வகை யால்நமோ நாரா யணாவென்று
நாமம் பலபரவி,
பல்வகை யாலும் பவித்திரனே! உன்னைப்
பல்லாண்டு கூறுவனே"[3]

என்றும் கூறுவதைக் காணலாம். மேலும்,

"பையுடை நாகப் பகைக்கொடி யானுக்குப்
பல்லாண்டு கூறுவனே"[4]
"படுத்தபைந் நாகணைப் பள்ளிகொண் டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே"[5]

என்று பாடுகிறார். இது வியூக நிலையாகும்.

பிறப்பு இறப்பு இல்லாப் பேரருளாளனாகிய திருமால் நல்லவர்களைக் காத்துத் தீயவர்களை அழிப்பதற்காக அவ்வப் போது அவதாரங்கள் எடுத்ததாகப் புராணங்களும் இதிகாசங் களும் கூறும்.

"அறந்தலை நிறுத்தி வேத மருள்சுரந் தறைந்த நீதித்
திறந்தெரித் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டு
பிறந்தனன் றன்பொற் பாத மேத்துவார் பிறப்ப
றுப்பான்"[6]

என்னும் இக்கருத்து, கிருஷ்ணாவதாரத்தில் தேற்றம்.

இதனால் எம்பெருமானது பரத்துவத்தை வெளியிட்டு அங்ஙனமுள்ளவன் உயிர்களைக் காத்தற் பொருட்டு அருளி னால் இவ்வாறு மனிதனாகப் பிறந்தானென அவனது எளிவந்த

தன்மையையும் குறித்தார். திருமால் எடுத்த அவதாரங்கள் கணக்கற்றவையாகும். எனினும் பத்து அவதாரங்கள் மிகுதியாகச் சுட்டப்பெறும். அவ்வாறு திருமால் மேற்கொண்ட பத்து அவதாரங்களும் 'தசாவதாரம்' எனப்படும். இவ்வவதாரங்களைப் பெரியாழ்வார் தம் திருமொழியில்,

"தேவுடைய மீனமா யாமையாய்
ஏனமா யரியாய்க் குறளாய்,
மூவுருவி லிராமனாய்க் கண்ணனாய்க்
கற்கியாய் முடிப்பான் கோயில்"[7]

என்று குறிப்பிடுகிறார்.

அந்தர்யாமி என்பது எப்பொருளிலும் உள்ளிருந்து இயக்கும் திருமாலின் நிலையாகும். இதனைப் பெரியாழ்வார்

"பணிக்கடலில் பள்ளிகோளைப்
பழகவிட்டு, ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல
மாயமணாள நம்பீ"[8]

என்னும் பாடலில் சுட்டுகிறார். இதனால் எம்பெருமான் தன்னுடைய இன்பமான இடங்களையெல்லாம் துறந்துவிட்டு அடியார் நெஞ்சையே தனக்கு இடமாக ஏற்றுக் கொண்டுள்ளான் என்று பெரியாழ்வார் பேசுகிறார். இக்கருத்தை,

"கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்
புல்லென் றொழிந்தனகொல் ஏபாவம்-வெல்ல
நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான்
அடியேன துள்ளத் தகம்"[9]

என்னும் நம்மாழ்வார் பாசுரத்திலும் காணலாம்.

எம்பெருமானுக்குப் பரமபதத்திலும், திருப்பாற்கடலிலும் இருப்பதைக் காட்டிலும் மெய்யடியாருடைய உள்ளத் தாமரையில் வாழ்வதே சிறந்தது என்றும், தக்க நேரம் பரர்த்து அடியாரின் நெஞ்சில் வந்து சேர்வதற்காகவே அவ்விடங்களில்

தங்குகின்றான் என்றும் நம்மாழ்வார் கருதுகிறார். மேலும் பெரியாழ்வார்,

''அரவத் தமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்,
அரவிந்தப் பாவையுந் தானும்
அகம்படி வந்து புகுந்து,
பரவைத் திரைபல மோதப்
பள்ளிகொள் கின்ற பிரான்''[10]

என்று குறிப்பிடுகின்றார். இதனையே,

''வடதடமும் வைகுந்தமும்
மதிள்துவ ராபதியும்,
இடவகைக ளிகழ்ந்திட்டென்பால்
இடவகை கொண்டனையே''[11]

என்னும் அருளிச் செயலிலும் உணர்த்துகிறார்.

'வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு' என்று போற்றப்படும் கண்ணன் என்னும் கருந்தெய்வத்தின் அழகினைத் திருமாலிருஞ் சோலையில் பெரியாழ்வார் காண்கிறார். இக்கண்ணன்,

''சக்கர மும்தடக் கைகளும்
கண்களும் பீதக வாடையொடும்,
செக்கர் நிறத்துச் சிவப்புடை
யாய்! திருமாலிருஞ் சோலை யெந்தாய்''[12]

என்று வியக்கத்தக்க நிலையில் இருந்து இவருக்குக் காட்சி அளிக்கக் காணலாம். இக்கண்ணபிரானின் கைகளும், சக்கரமும், கண்களும், பொன்னாடையும் செக்கர் வானத்துச் சிறப்பைப் பெரியாழ்வாருக்கு நினைவூட்டியது. கண்ணனின் அர்ச்சாவதாரம் என்று மக்கள் இம்மூர்த்தியைச் சிறப்பாக வழிபட்டு வரலாயினர்.

பரமபதத்தில் எழுந்தருளியிருப்பவனாகிய நாராயணன் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அந்தர்யாமியாய் இருந்து அவரவர் செயல்கட்கு ஏவுபவனாயிருக்கிறான் என்பது வைணவ சமயக் கோட்பாடாகும். இதனை நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில்,

"யாவையும் யவரும் தானாய்
அவரவர் சமயந் தோறும்,
தோய்விலன் புலனைந் துக்கும்
சொலப்படான் உணர்வின் மூர்த்தி,
ஆவிசேர் உயிரின் உள்ளால்
ஆதுமோர் பற்றி லாத,
பாவனை அதனைக் கூடில்
அவனையும் கூட லாமே"[13]

என்றருளிச் செய்கிறார்.

பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம் ஆகிய நான்கு நிலைகளில் உள்ள எல்லாக் குணங்களையும் அர்ச்சாவ தாரத்தில் காணலாம் என்பது தத்துவம்.[14]

"தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே,
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்"[15]

என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்கிறார். ஒவ்வொரு திருப்பதியிலும் ஒவ்வொரு குணம் சிறப்பாகப் பொலியும் என்றும் அத்தத்துவம் குறிப்பிடுகிறது.[16]

"ஆழ்வார்கள் பலவிடங்களிலும் பிரபத்தி
பண்ணிற்றும் அர்ச்சாவ தாரத்திலே"

என்பது சிரீவசன பூசண சூத்திரம். [17]

முமுட்சுப்படியிலும்,

"இதுதான் (அர்ச்சாவதாரம்) பர
வியூக விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே,
காணலாம்படி இருக்கும்"[18]

என்று இந்த அவதாரத்தின் எளிமை பேசப்பெறுகின்றது.

உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டப்பெறும் குணங்கள் வாத்சல்யம், சுவாமித்துவம், சௌசில்யம், சௌலப்பியம் ஆகியவை. இவற்றுள் வாத்சல்யம் என்பது கன்றிடத்தில் பசு இருக்கும் இருப்பாகும்; சுவாமித்துவம் என்பது ஓர் அடியவன் தன்னைச் சிறிதும் கருதாமல் புறக்கணித்துவிட்டு உலகியல் நுகர்ச்சிகளையே தேடி அலைந்து உழன்று திரியினும், இறைவன் தன் உடைமையான அவனைத் தான் விடாமல் பின் தொடர்ந்து சென்று, அவன் நெஞ்சினுள் மறைந்து நின்று நலம்செய்யும் பண்பாகும்; சௌசில்யம் என்பது உயர்ந்தவன் தாழ்ந்தவனிடம் புரையறக் கலக்கை; சௌலப்பியம் என்பது எளியவனாயிருக்கும் இருப்பு. இந்தத் திருக்குணங்கள் 'இருட்டறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது இங்கே' என்று குறிப்பிடுகிறது ஸ்ரீவசனபூடணம்.[19]

இந்த அர்ச்சாவதாரம் என்ற உருவம் எக்காலத்தவர்க்கும் எத்தேயத்தவர்க்கும் காட்சியளிக்கும். மனம், வாக்கு, காயங்கட்கு எட்டாத இறைவனுக்கு ஓர் உருவத்தையும் ஓரிடத்தையும் நிலைநாட்டி வழிபடுதலைக் குறித்து,

> ''ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரந்
> திருநாமம் பாடிநாம் தெள்ளேணங்
> கொட்டாமோ''[20]

என்றார் மாணிக்கவாசகர்.

ஒரு பசுவின் உடல் முழுவதும் பால் பரவியிருப்பினும் அது தோன்றுதற்குரிய உறுப்பினன்றிப் பிறிதிடத்து வெளிப்படாதவாறு போல, மக்கள் வழிபாட்டிற்கிரங்கி அருள்புரிதற்கு அருட்குறி முகமாக ஆண்டவர் வெளிப்பட்டு அருளுவர். அருவாய் நிற்கும் ஆண்டவன் உலகம் உய்யும் பொருட்டு அவற்றின் மீது கொண்டுள்ள தண்ணளியால் உருக்கொண்டு எழுந்தருளியுள்ளான் என்பது சமயக் கொள்கை. காற்றிலும் கடுகிச் செல்லக் கூடியதான நம் மனத்தை ஒருவழிப்படுத்தி வழிபாடாற்ற ஓர் உருவம் இன்றியமையாதது. உருவம் இன்றேல் நம் மனம் ஒருவழிப்படுதல் இல்லை. எனவே நம் மனத்தைக் கட்டுப்படுத்தி வழிபாடியற்ற ஓர் உருவம் இன்றியமையாது வேண்டப்படுகிறது.

திருமால் நூற்றெட்டுத் திருப்பதிகளில் அர்ச்சாவதார மாக எழுந்தருளிப் பக்தர்களுக்குக் காட்சியளிப்பதாகக் கருதுவது வைணவ மரபாகும். திருமகள் கேள்வனான எம் பெருமான் தனக்கு அடிமை செய்து உய்வதற்காகவே ஆன் மாக்களையெல்லாம் ஆட்கொண்டு பெருங்கருணையால் இந் நிலவுலகில் நூற்றெட்டுத் திவ்விய தேசங்களிலும் எழுந்தருளி யிருந்து ஆன்மாக்களை உய்விக்கிறான்.

பொதுவாக, அர்ச்சை வடிவில் உள்ள எம்பெருமான் சில தலங்களில் கிடந்த கோலத்தோடு காட்சியளிப்பான். சில தலங்களில் வீற்றிருந்த கோலத்தோடுகாட்சி தருவான். மேலும் சிலவற்றில் நின்ற கோலத்தோடு விளங்குவான்.

எம்பெருமானுடைய அர்ச்சாவதாரம் எப்போதும் கண் ணால் கண்டு களிப்பதற்கு இடமளிக்கிறது.

''அண்டர் கோனணி யரங்கன்என் னமுதினைக்
கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணாவே''[21]

என்றார் திருப்பாணாழ்வார்.

நாம் எம்பெருமானைப் பற்றுதற்கு எம்பெருமானுடைய சௌலப்பிய குணமே நமக்குத் துணையாகும். அந்தச் சௌலப் பியத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமே.

அர்ச்சாவதாரத்தில் எம்பெருமான் சங்கொடு சக்க்ரம் ஏந்தும் தடக்கையனாகக் காட்சி அளிக்கிறார். தன்னை வந் தடைந்த அடியார்களின் பகைவர்களைப் போக்குதற்கு இப் படைகள் பயன்படுகின்றன.

நாம் செய்த குற்றங்களை நினைந்து, ''அந்தோ! இவ்வளவு குற்றங்களை இழைத்த நாம் எவ்வாறு அத்துணை உயரிய எம் பெருமானைச் சரணடைவது'' என அஞ்சி அகலாதிருக்கும் பொருட்டே அவர் திருக்கையில் அவய முத்திரையுடன் காட்சி யளிக்கிறார். இது, ''நீங்கள் உங்கள் குற்றங்களைக் கண்டு கவலையடைந்து அஞ்சவேண்டுவதில்லை. என்னை வந்தடை யுங்கள். நான் உங்களை ஏற்றுக் கொள்வேன்'' என்று அன்

பைக் காட்டும் வாத்சல்யத்தின் அறிகுறியாம். எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளும் அனைவரும் பற்றுதற்கு இடம் தந்து உதவுகின்றது. இது எம்பெருமானுடைய சௌலப்பியத்தை விளக்குகிறது.

> "திருக்கையிலே பிடித்த திவ்வியாயுதங்களும், வைத்தஞ்சல்
> என்ற கையும், கவிந்த முடியும், முகமும், முறுவலும்,
> ஆசன பதுமத்திலே அழுந்தின திருவடிகளுமாய் நிற்கிற
> நிலையே நமக்குத் தஞ்சம்"[22]

என்கிறார் பிள்ளைலோகாசாரியர். இங்குக் குறிக்கப்படும் எம்பெருமானின் நிலையே நமக்குப் புகலிடமாம்.

எம்பெருமான் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளில் இருப்பினும், இந்த ஐந்து நிலைகளிலும் உள்ள எம்பெருமான்களும் வேறுபாடற்ற ஒருவரே என்பது வைணவ தத்துவம்.

**விசிட்டாத்துவைதம்**

உயிர் உடலினைத் தனக்குச் சரீரமாகக் கொண்டிருப்பதைப் போன்று இறைவன் சித்து, அசித்து என்ற இரண்டனையும் தனக்குச் சரீரமாகக் கொண்டு தான் சரீரியாக விளங்குகின்றான். இவ்வாறு கூடியிருக்கும் நிலையினையே விசிட்டாத்துவைதம் என்று கூறுவர். இந்த நிலை 'அப்ரதக் சித்தி' எனப்படும்.

இவ்வுடல் ஆன்மாவின் சேர்க்கையால் நிலைபெற்றிருத்தல் போன்று இறைவனுக்குச் சரீரமான உயிர்ப்பொருள்களும், உயிரில்லாத பொருள்களும் ஆன்மாவாகிய இறைவனாலே நிலைபெற்றிருக்கின்றன என்று விளங்குகிறது. இதனைப் பெரியாழ்வார்,

"மண்ணொடு நீரு மெரியும் காலும்
மற்றுமா காசமு மாகி நின்றாய்"[23]

என்னும் பாசுரத்தால் தெரிவிக்கின்றார். ஜீவனும் பரம்பொருளும் ஒன்றே என்ற அத்துவைதக் கொள்கைக்கு இது மாறுபட்டதாகும்.

**ஆறு தன்மைகள்**

இறையன்பில் உயர்ந்த நிலை பிரபத்தி. இது முற்றிலும் இறைவனைச் சரணடைதலாகும். பிரபத்திக்கு இன்றியமையாத தன்மைகளாக ஆறு கூறப்பெறும். அவை, இறைவனுக்கு விருப்பமானவற்றையே விழைதல், இறைவனுக்கு விருப்பமில்லாதவற்றைக் களைதல், அவன் தன்னைக் காப்பான் என்ற உறுதியான நம்பிக்கையோடிருத்தல், அவன் கவலை வேண்டி நிற்றல், இறைாணிக்குத் தன்னை அர்ப்பணித்தல், தாம் ஒன்றுமில்லை என்று எண்ணுதல் என்பன ஆகும். எல்லாரும் எளிதாகக் கடைப்பிடிக்க வல்ல இப்பிரபத்தி நெறியை மேற்கொள்ளுமாறு வேதாந்ததேசிகன்,

"எல்லார்க்கு மெளிதான வேற்றத் தாலு
மினியுரைக்கை மிகையான விரக்கத் தாலும்
சொல்லார்க்கு மளவாலு மமைத லாலும்
துணிவரிதாய்த் துணை துறக்குஞ் சுகரத் தாலும்
கல்லார்க்குங் கற்றார்சொல் கவர்த லாலுங்
கண்ணனுரை முடிசூடி முடித்த லாலும்
நல்லார்க்குந் தீயார்க்கு மிதுவே நன்றா
நாரணர்க்கே யடைக்கலமாய் நல்கு வீரே"[24]

என்ற பாசுரத்தால் கூறுவதைக் காணலாம்.

பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாக எண்ணிப் பாடியுள்ள பாசுரங்களும் பிறவும் அவர் பக்தி வெளிப்பாட்டினைக் காட்டுவனவாகும். ஆழ்வாரின் பாசுரங்கள் அனைத்துமே பக்தியின் விளக்கங்களாக அமைகின்றன. அவற்றில் அகத்துறைப் பாங்கில் அமைந்த பக்தியும், திருமாலின் திருநாமத்

தில் கொண்ட ஈடுபாடும், அடியவரிடம் அவர் கொண்ட பக்திச் சிறப்பும் காணப்படுகின்றன.

**பார்த்தன் மயக்கமும் பிரபத்தி மார்க்கமும்**

பண்டு நடைபெற்ற பாரதப்போரில் பார்த்தனுக்குத் தேரூர்ந்த கண்ணன் கீதையை உபதேசித்தருளினான். அக் கீதையின் ஒளியினால் பார்த்தனின் அஞ்ஞான இருள் நீங்கியது. பாரதப்போரின் முதல் நாளில் எதிர்நின்ற வீரர் அனைவரும் தன் உறவினராய் இருத்தலைக் கண்டு மனம்சோர்ந்து வில் நெகிழப் பார்த்தன் தேர்த்தட்டில் நிற்கிறான். சாரதியாக அமைந்த கண்ணன் தத்துவப் பொருளை விளக்கி அவன் மயக்கத்தைப் போக்கத் தொடங்கினான். "பயன் கருதாது உன் கடமைகளைச் செய்" என்பதே அவன் கூறிய தத்துவத்தின் சாரமாகும்.

இதனைப் பெரியாழ்வார்,

"வெள்ளைப் புரவிக்குரக்கு வெல்கொடித்
தேர்மிசை முன்புநின்று,
கள்ளப் படைத்துணை யாகிப் பாரதம்
கைசெய்ய"[25]

என்று அருளிச் செய்கிறார்.

"போர்த் தொடக்கத்தில் உற்றாரை யெல்லா முடன் கொன்றரசாளப் பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்று சொல்லிப் போரொழிந்த அர்ச்சுனனுக்குக் கீதையை உபதேசித்து அவனைப் போர்புரிய உடன்படுத்தியும் கண்ண பிரானே பாரதப் போரினை மூட்டியவனாகின்றான். தான் சேனைக்குத் துணையாகிற போது இரண்டு தலைக்கும் பொதுத் துணையாயிருக்கை யன்றியே, பகலை இரவாக்கியும், 'ஆயுதமெடுப்பதில்லை' என்று சொல்லிவைத்து ஆயுதமெடுத்தும், எதிரியுடைய உயிர்நிலையைக் காட்டிக்கொடுத்தும் போந்தமையால் 'கள்ளப் படைத்துணையாகி' நின்றார்.[26]

திருமங்கையாழ்வாரும்,

"பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு
பார்த்தன்றன் தேர்முன் நின்றானை"[27]

என்று குறிப்பிடுகிறார்.

தன்னையே சரணாகப் பற்ற வேண்டுமென்பதைக் கண்ணன் பார்த்தன் மூலமாக,

"கையும் உழவுகோலும் பிடித்த சிறுவாய்க் கயிறும் சேனா தூளி தூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற சாரத்திய வேஷத்தை"[28]

காட்டுகிறான் என்கிறார் பிள்ளை லோகாசாரியர்.

போரை ஏற்படுத்துவதற்காகக் கண்ணபிரான் தூது நடந்தார். தேர்க்காலாலே பகைவரை அழிப்பதற்கு எனச் சாரதியாய் நின்றார். போர் செய்யேன் என்றிருந்த பார்த்தனைப் போரில் ஈடுபடுத்தற்குக் கண்ணபிரான் இறுதியாகப் பிரபத்தி மார்க்கத்தை உபதேசித்தார். பாஞ்சாலியின் துன்பத்தைத் துடைத்தற் பொருட்டே கண்ணபிரான் மேற்கூறிய பல்வேறு செயல்களைச் செய்து அவள் கூந்தலை முடியுமாறு செய்தான். இதனை, "அந்தகன் சிறுவன்" என்னும் பாசுரத்தில் திருமங்கையாழ்வாரும் குறிப்பிடுவர்.[29]

**சரணாகதி தத்துவம்**

"பற்றேலொன்றுமிலேன் பாவமேசெய்து பாவியானேன்
மற்றேலொன்றறியேன மாயனே! எங்கள் மாதவனே
கற்றேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனை வேங்கடவா
அற்றேன் வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே"[30]

என்று கூறி முற்றிலும் திருமாலைச் சரணடைந்து தமக்கு அருள்புரியுமாறு வேண்டுகிறார் திருமங்கையாழ்வார்.

யானைக்கு அன்று அருள்புரிந்த திருமால் தம்மையும் அருள்செய்து காக்க வேண்டும் என்பதைப் பெரியாழ்வார்,

> "ஒப்பிலே னாகிலும் நின்ன டைந்தேன்
> ஆனைக்கு நீயருள் செய்த மையால்"[31]

என்று கூறுகிறார். யானையின் துயரைப் போக்கியருளி திருமால் தம்முடைய குறையும் போக்கவேண்டும் என்று முறையிடுகிறார்.

யானையின் ஓலங்கேட்டுத் திருமால் கருடவாகனத்திற் சென்று, முதலையின் மீது சக்கரத்தை ஏவி யானையின் துயர் தீர்த்ததைப் பெரியாழ்வார்,

> "பதக முதலைவாய்ப் பட்ட களிறு
> கதறிக்கை கூப்பிஎன் கண்ணாகண் ணாவென்று
> உதவப்புள் ளூர்ந்தங் குறுதுயர் தீர்த்த
> அதகன்"[32]

என்னும் பாசுரத்தில் குறிப்பிடுகிறார். மேலும் திருமங்கையாழ்வாரும்,

> "கானமர் வேழம் கையெடுத் தலறக்
> கராவதன் காலினைக் கதவ
> ஆனையின் துயரம் தீரப்புள் ளூர்ந்து
> சென்றுநின் றாழி தொட்டானை"[33]

என்று அருளிச் செய்கிறார். மற்றும் சிறிய திருமடலில்,

> "போரானை பொய்கைவாய்க் கோட்பட்டு நின்றலறி
> நீரார் மலர்க்கமலம் கொண்டோர் நெடுங்கையால்
> 'நாராயணா! ஓ மணிவண்ணா! நாகணையாய்
> வாராய்என் ஆரிடரை நீக்காய்' எனவெகுண்டு
> தீராத சீற்றத்தால் சென்றிரண்டு கூறாக
> ஈரா அதனை இடர்கடிந்தான் எம்பெருமான்"[34]

என்று கூறுதலைக் காணலாம்.

ஆயர்கள் கண்ணபிரானின் தாளைச் சரணடைய, உடனே அவன் சரணளித்தமையை,

"அம்மைத் தடங்கண் மடவாய்ச் சியரும்
ஆனா யருமா நிரையும் அலறி,
எம்மைச் சரண்ஏன் றுகொள்ளென் றிரப்ப
இலங்கா ழிக்கைஎந் தையெடுத்த மலை"[35]

என்று பெரியாழ்வார் அருளிச் செய்கிறார். வைணவ சமயத்தில் தலைசிறந்து விளங்குவது சரணாகதி தத்துவமாகும். இதனை,

"சரணமா கும்தன தாளடைந் தார்க்கெலாம்,
மரணமா னால்வைகுந் தம்கொடுக் கும்பிரான்"[36]
"...வடமது ரைப்பி றந்தவன் வண்புகழே
சரணென் றுய்யப் போகல் அல்லால் இல்லைகண்
டீர்சதிரே"[37]

என்னும் நம்மாழ்வார் வாக்குகளால் அறியலாம். மேலும்,

"அகல கில்லேன் இறையும்என்
றலர்மேல் மங்கை யுறைமார்பா,
நிகரில் புகழாய்! உலகமூன்
றுடையாய்! என்னை ஆள்வானே,
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே,
புகலொன் றில்லா அடியேனுன்
அடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே"[38]

என்று கூறி நம்மாழ்வார் திருமால் திருவடிகளில் சரணடைகின்றார். இப்பாசுரம் வைணவர்கட்கு 'சரமசுலோகம்' போல் இனிப்பதாகும். வைணவ தத்துவத்தில் கூறினால் சரணாகதியாக இருப்பது; தாய் தன் பாலுடன் மருந்தைக் குழைத்துத் தருவதுபோல ஆசாரியர்கள் பாசுரங்கட்கு உரைகூறும்போது வைணவ தத்துவம் அனைத்தையும் குழைத்துத் தந்து விடு

கிறார்கள். அன்னை உடலுக்கு மருந்தூட்டுவது போல ஆசாரியர்கள் உயிருக்கு மருந்தூட்டுகின்றனர். இப்பாசுரம் சரணாகதியைக் குறிப்பதால் இத்திருவாய்மொழி முழுவதும் சரணாகதி சாரமாயிருக்கும் என்று வைணவ ஆசாரியர்கள் கருதுகின்றனர்.

**புருஷார்த்தம்**

நாராயணனுக்குச் செய்யும் தொண்டு 'புருஷார்த்தம், எனப்படும். இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள சரீர-ஆன்மா தொடர்பு என்பது இத்தொண்டினையே குறிக்கும். ஓர் உடலானது யான், எனது என்னும் செருக்கு அற்றுத் தனக்காக ஒரு பயனையும் கருதாது ஆன்மா விரும்பும் காரியங் களையே செய்து ஆன்மாவை உகப்பித்துத் தானும் நிலை பெற்று வாழ்கிறது. இதனை,

''ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்யவேண் டும்நாம்
தெழிகு ரல்அரு வித்திரு வேங்கடத்து
எழில்கொள் சோதி எந்தைதந்தை தந்தைக்கே''[39]

எனவரும் நம்மாழ்வார் பாசுரத்தாலும்,

''உற்றோமே யாவோ முனக்கேநா மாட்செய்வோம்,
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்''[40]

எனவரும் ஆண்டாள் பாசுரத்தாலும் அறியலாம். இவ்வாறு இறைவனுக்குச் செய்யும் தொண்டும் அடியவர்க்குச் செய்யும் தொண்டாலன்றி நிறைவேறாது. ஓர் ஆன்மாவின் உயிர்நிலை அடியார்க்குச் செய்யும் பணியிலேயே அமைந்துள்ளது நாலாயிர பிரபந்தத்தின் உட்கருத்தும் இவ்வடியார் தொண் டேயாகும்.

இதனால் உயிர்ப்பொருள், உயிரில்லாத பொருள் ஆகிய வற்றைச் சரீரமாகக் கொண்டு. தான் சரீரியாக விளங்கும் நாராயணனே முழு முதற்பொருள் என்பதும், அவனை அடைதற்குரிய நெறி பிரபத்தியே என்பதும், அந்நாராயண

னுக்குச் செய்யும் தொண்டே புருஷார்த்தம் என்பதும் பெறப் படும். அவ்விறைவனுக்குச் செய்யும் தொண்டும் அவனடியார் களுக்குச் செய்யும் தொண்டினை முடிவாகக் கொண்டிருக்க வேண்டும் என்பதும் தெளியப்படுகிறது.

**ஐம்பொருள் விளக்கம்**

வைணவ தத்துவத்தின் முக்கியமான கருத்துக்களை ஐந்தாக வகுத்துக் கூறுவர். இதனை ஐம்பொருள் விளக்கம் (அர்த்த பஞ்சக ஞானம்) என்று மெய்யுணர்வுத் துறையில் குறிப்பிடுவர். இவற்றை (1) அடையப்படும் எம்பெருமான், (2) அடைபவனாகிய சீவாத்மா, (3) அடைதற்கு உபாயம், (4) அடையப்படும் பலன், (5) இதுகாறும் அவனை அடைய முடியாமல் தடை செய்தது ஆகிய ஐந்து என்பர்.

(1) அடையப்படும் எம்பெருமான்: பரமபதத்தில் பரவாசு தேவனாய் என்றும் அழியாது, வளராது, குறையாது இருக்கும் திருவுருவத்துடன் விளங்கும் நித்திய சூரிகளும் முத்தி பெற்ற வர்களுமே இந்நிலையை அனுபவிக்க இயலும். இவ்வடிவம் கண்களைக் கவரும் தன்மையதாய் அமையும்.

இப்பரத்துவத்தை ஆழ்வார்கள் அனைவரும் அனுபவிக் கின்றனர். பெரியாழ்வார் இப்பரத்துவ வடிவத்தைத் திவ்விய தேசங்களில் காணுகின்றார். இதனை,

"அரவத் தமளியி னோடும்
அழகிய பாற்கட லோடும்,
அரவிந்தப் பாவையுந் தானும்
அகம்படி வந்து புகுந்து"[41]

என்ற பாசுரத்தால் தனியே எடுத்துரைக்கும் சிறப்பையும் காணலாம்.

வியூக வடிவங்களின் பன்னிரு நாமங்கள் சிறப்புடையன. பெரியாழ்வார் இத்திருநாமங்களைக் குறிப்பிட்டு ஒரு திரு மொழியை அமைக்கின்றார். இத்திருமொழியில், "பேய்ப்பால் முலையுண்ட பித்தனே! கேசவ நம்பீ!",[42] என்று திருமாலை

அழைக்கின்றார். இத்திருமொழி முழுதும் திருமாலின் பன்னிரு திருநாமங்கள் கூறப்படுகின்றன.

இறையருளை உணர்ந்து எண்ணி இறும்பூது அடைகின்றார் பெரியாழ்வார். இறைவன் தன்னிடமிருந்து பிரிந்து வேறெங்கும் செல்லாதவாறு வேண்டுகின்ற ஆழ்வார்,

"வளைத்துவைத் தேனினிப் போகலொட்
டேன்"[43]

என்றும்,

"அன்று வயிற்றிற் கிடந்திருந்
தேயடி மைசெய்ய லுற்றிருப்பன்,
இன்றுவந் திங்குன்னைக் கண்டுகொண்
டேனினிப் போக விடுவதுண்டே"[44]

என்றும் அவனைச் 'சிக்கெனப் பிடித்த' நிலையை எடுத்துரைக்கின்றார். தம்முள் இறைவன் உறைந்த நிலையை,

"மெய்க்கொண்டு வந்து புகுந்து
வேதப் பிரானார் கிடந்தார்"[45]

என்று ஆழ்வார் குறிப்பிடுகின்றார். தம் உடலைக் கோயிலாக எண்ணும் பெரியாழ்வார் இறைவன் அதனுள் எழுந்தருளியிருக்கின்ற நிலையை,

"சிங்கப் பிரானவ னெம்மான்
சேருந் திருக்கோயில்"[46]
"சுடரொளியாய் நெஞ்சினுள்ளே
தோன்றுமென் சோதிநம்பீ"[47]

எனப் பாடுகின்றார்.

அந்தர்யாமியாய் உணர்ந்த இறைவனைக் கணப்போதும் பிரிய இயலாத நிலையும் ஆழ்வாருக்கு ஏற்படுகின்றது அதன் பயனாய் அவனைப் போகவிடாது தன்னுள் இருத்துகின்றார்.

"புக்கினிற் புக்குன்னைக் கண்டுகொண்
டேனினிப் போக விடுவதுண்டே"[48]

என இறைவனை விடாத நிலையைப் பாடுகின்றார். இவற்றால் பெரியாழ்வாரின் அருளனுபவம் தன்னுள் இறைவனை நிறுத்திய சீவனின் செயலாக அமைகின்றது.

செல்வநம்பியின் மேல் அவருக்குண்டான அன்பு அவ்வூர் வாழ் வைணவ அடியார்களின் மேற்சென்றது. திருக்கோட்டியூரில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்மாட்டு மேற்கொண்ட பக்தி அனுபவத்தில் ஆனந்தம் மீதூரப்பெற்று, அப்பிரான் மேல் அன்பில்லாத பாவியரைத் தூற்றியும், பாகவதர்களைப் போற்றியும் பாசுரம் அமைக்கின்றார்.

இறைவனை இறைஞ்சும் வேதங்களை ஓதும் மறையவர் வாழ் சிறப்புடையது திருக்கோட்டியூர் என்று கூறி, அப்பதி வாழ் வைணவர்களைப் பெரிதும் போற்றுகின்றார். திருக்கோட்டியூர்வாழ் வைணவரை வழிபடாதாரைப் பழித்து,

"முதல்வனைச் சிந்தியாத, அப்
பாவகாரிகளைப் படைத்தவன்
எங்ஙனம்படைத் தான்கொலோ!"[49]

என்கிறார். மேலும்,

"பெற்றதாயர் வயிற்றினைப்பெரு
நோய்செய்வான் பிறந் தார்களே"[50]

என்றும் கூறுகிறார். இவ்வுடல் படைக்கப்பட்டதன் காரணம் உணராது வெறும் சோற்றுக்கு மட்டும் வாழும் இயல்பினரைப் பெரியாழ்வார் இகழ்ந்து பேசுகின்றார். அவர்கள் உடுக்கும் கூறையும், பருகும் நீரும் பாவம் செய்தனவாகப் படுகின்றன பெரியாழ்வாருக்கு.[51] இத்தகையவரை மானிட வகையினின்று நீக்கி விலங்கினத்துச் சேர்க்கும் இயல்பு ஆழ்வாரிடம் காணப் பெறுகின்றது.[52]

2) அடைபவனான சீவன்: அசித்தாகிய துன்பம் இவ்வுடலாலும் இவ்வுலக இன்பத்தாலும் வருவதாகும். இதனைப்

பெரியாழ்வார்,

"தோட்டம் இல்லவள் ஆத்தொழு ஓடை
துடவை யும்கிண றுமிவை யெல்லாம்,
வாட்ட மின்றியுன் பொன்னடிக் கீழே
வளைப்ப கம்வகுத்துக்கொண் டிருந்தேன்"[53]

என இறைவனுக்கு அனைத்தையும் அளித்ததையும் எடுத்துக் கூறுகின்றார். மேலும் இவர்,

"கொங்கைச் சிறுவரை யென்னும்
பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி,
அங்கோர் முழையினில் புக்கிட்
டழுந்திக் கிடந்துழல் வேனை"[54]

என்று எடுத்துக்கூறி மகளிர்பால் கொள்ளும் இன்பத்தையும் வெறுக்கிறார்.

இறைவனை உணர்ந்து அவனன்றி வேறில்லை என்பதைத் தெளிதல் முத்தர்களுக்குரியது. இறைவனையன்றி மற்றவற்றை நினையாத குணம் உடையவர்கள் முத்தர்கள் எனப்படுவர். நால்வேதம் கொண்டு வணங்கா நாளை வழிபடா நாளாக எண்ணுகிறார் பெரியாழ்வார்.[55] திருமால் கோயிலில் வாழும் 'வைட்டணவன்' என்னும் பெருமை ஒன்றையே அவர் விரும்புவதனை,

"வன்மை யாவதுன் கோயிலில் வாழும்
வைட்ட ணவனென்னும் வன்மை கண்டாயே"[56]

என்ற பாசுரத்தால் அறிகிறோம். இவ்வாறு முத்தராய்ச் செய்யும் தொண்டு மறுபிறவியில் நித்தியராய் ஆக்கவல்லது. வினைகளுக்கு ஏற்றவாறு பெருகும் பிறவிகள்.

நித்தியராய்த் திகழத் திருமாலையே உபாயமும் உபேயமுமாகப் பற்றல் வேண்டும். ஆழ்வார்களும், ஆசாரியர்களும் நித்தியர்களாவர். பெரியாழ்வார் கருவிலேயே திருமாலை எண்ணியவராய்த் திகழ்ந்ததை,

"அன்று வயிற்றிற் கிடந்திருந்
தேயடி மைசெய்ய லுற்றிருப்பன்"[57]

என்ற பாசுரத்தால் உணர்த்துகின்றார்.

மேற்கூறிய கருத்துக்களால் இவ்வுலக மக்கள் திருமால் ஒருவனையே எண்ணி ஓதியுணர்ந்து பிறப்பறுக்க வேண்டும் என்னும் அவரது அவா வெளிப்படுகின்றது. நித்தியராய்த் திகழும் பெரியாழ்வார் மற்ற உயிர்களும் பிறப்பறுக்க வழி கூறுகின்றார். இவருடைய பாசுரங்கள் வாயிலாக சீவன், இறைவனை அடையும் விதம் கூறப்படுகின்றது.

3) அடைதற்கு உபாயம்: சேதனன் பிறவிப் பெருங் கடலைக் கடந்து வீடுபேறாம் நற்கதியைப் பெறுதற்குச் சாதன மென்று அறிந்துகொள்ளும்படி விதிக்கப்பட்டது உபாயமாகும்.

இதனை,

"அக்கரை யென்னு மனத்தக்
கடலுள் ளழுந்தியுன் பேரருளால்,
இக்கரை யேறி இளைத்திருந்
தேனைஅஞ் சேலென்று கைகவியாய்"[58]

என்கிறார்.

பெரியாழ்வார் பக்தியோகத்தைக் குறிப்பிடவில்லை. எளிமையான பக்தியைக் குறிக்கின்றார். இதனை,

"பத்தர்க் கமுத னடியேன்"[59]

என்ற தொடரால் அறியலாம்.

மானிடப் பிறவியில் ஏற்படும் துயர்நீக்கம்பெறத் திருமால் அடியவர்க்கு அருள் செய்கின்றான். ஆழ்வார்களாலும், அடியவர்களாலும், நித்தியசூரிகளாலும் அனுபவிக்கப் பெறுவது வைகுந்தமாகும். சீவான்மா அடையும் முடிநிலை அதுவேயாகும். அங்குச் சென்ற சீவன் பிறப்பெடுத்துப் பிறவிக்கடலில் உழலுவதில்லை. அம் முத்தியைத் தரவல்லவன் நாராயணன் என்பதை,

"இருளகற்று மெறிகதிரோன் கண்டலத்து
டேற்றிவைத் தேணி வாங்கி,
அருள்கொடுத்திட் டடியவரை யாட்கொள்வான்"[60]

என்று கூறிப் பெரியாழ்வார் இறைவன் பரமபதத்தைத் தரும் சிறப்பினைக் குறிக்கின்றார்.

4) அடையப்படும் பலன்: திருத்தொண்டொன்றே பரம பதத்தைத் தேடியடைந்த சீவான்மாவுக்கு உரிய செயலாகும். இத் திருத்தொண்டினைச் செய்யும்போதே சேதனன் இறைவனையும் அனுபவிக்கின்றான். இறைவன் ஒருவனையே பற்றி நிற்கும் ஆன்மா அடையும் சிறப்பினையும் பெரியாழ்வார்,

"நாம மென்று நவின்றுரைப் பார்கள்
நண்ணு வாரொல்லை நாரண னுலகே"[61]
"... பாடவல்
லாருல கமளந் தான்தமரே"[62]
"ஆயரேற்றை அமரர்கோவை
அந்தணர்த மமுதத்தினை,
சாயைபோலப் பாடவல்லார்
தாமு மணுக்கர்களே"[63]

என்று உரைக்கின்றார். இதனால்சீவான்மா பெறுகின்ற பலன் அறியப்படுகிறது

5) இறைவனை அடைதற்குத் தடைகள்: செய்யத் தகாதன செய்தலும், செய்யத் தகுவனவற்றைச் செய்யாமலிருத்தலுமாகிய இருவகைக் குற்றங்களும் சேதனன் செய்யும் பாவங்களாகும். இவ்விரு பாவங்களும் அசித்தின் செயலால் அமைவன. அசித்தினையும் இறைவனாய்க் காண்பதால் அப்பாவங்கள் நீங்குகின்றன. ஆதலின் அசித்தாயினும் அது திருமாலின் அடக்கம் என்ற உணர்வு ஏற்படின் தடைகள் நீங்கப் பெறும். இவ்வுலக வாழ்க்கையில் தாம் கொண்ட பற்றெல்லாம் இறைவர்க்கு அளித்துத் தாம் தடையை நீக்கிக் கொண்டதை,

"தோட்டம் இல்லவள் ஆத்தொழு ஓடை
துடவை யுங்கிண றுமிவை யெல்லாம்,
வாட்ட மின்றியுன் பொன்னடிக் கீழே
வளைப்ப கம்வகுத் துக்கொண் டிருந்தேன்"[64]

என உரைக்கிறார். ஆதலின் தடைகளை உணர்ந்து அவற்றைத் தளர்த்திக் கொண்ட தன்மை ஆழ்வாரிடம் அமைகிறது. தடைகள் நீங்கப் பெற்ற நித்தியராய் அவர் திகழும் தன்மை வைணவர்களால் போற்றப்படுகிறது.

பெரியாழ்வாரின் பாசுரங்களில் காணப்பெறும் இவ் 'அர்த்த பஞ்சக ஞானம்' என்னும் 'ஐம்பொருள் விளக்கம்' பற்றி மிகச் சுருங்கிய முறையில்,

"மிக்க இறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியுந் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல்"[65]

என்று பட்டரது திருவாய்மொழித் தனியன் தொகுத்துரைக்கிறது.

இதனுள் காணப்பெறும் முதல் விளக்கம் திருமாலைப் பற்றியது; இரண்டாவது இருப்பது உயிர்நிலை. உயிரியல் பண்பை அறிதல் இதன் முக்கிய கருத்தாகும். மூன்றாவதாக, மெய்யான ஆன்மா உயர்ந்த பரம்பொருளை அடைதற்கான சரணாகதி வழியை அறிவது. அவ்விறைவனை அடைதற்குப் பொய்ந்நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கும், அழுக்குடம்பும் ஆகிய இவையே பகையாகும். அவ்வழிக்குப் பகையானவற்றை உணர்ந்து வாழ்வாங்கு வாழ்தலே சிறப்புடையதாகும்.

இவற்றையே பெரியாழ்வார் தம் பாசுரங்களாலும் மேற்கூறியவாறு தெளிவுபடுத்தியுள்ளார்.

**திருமந்திரம்**

வைணவ முறைப்படி மோட்சத்தை அடைய விரும்புகிற வர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய இரகசியங்கள் மூன்றாகும். அவை திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்பன. இம் மூன்று மந்திரங்களுள் முக்கியமானது திருமந்திரம்.

இதுவே ஒருவன் முதலில் அறியத்தக்கது. இம்மந்திரம் ஆன்மாவின் உண்மைச் சொரூபம் இன்னதென்பதையும், அந் நிலைக் கேற்பச் சேதனன் (அறிவுள்ளவன்) விடவேண்டுவன இவை என்பதையும் தெரிவிக்கின்றது. இவற்றை நன்கு அறிந்த வர்களுக்கே உபாயத்தைக் கூறும் துவயத்திலும், பலனைக் கூறும் சரமசுலோகத்திலும் விருப்பம் ஏற்படும். எனவே, ஆன்மாவின் உண்மை நிலையை அறிவிக்கும் இத்திருமந்திரமே முதலில் அறியத்தகுந்த ஒன்றாகும்.

திருமந்திரத்தில் 'ஓம்', 'நம', 'நாராயணாய' என்னும் மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. இம்மந்திரத்தின் மூன்று சொற்களும் மூன்று பொருள்களைக் குறிக்கின்றன. இவற்றுள் முதற்சொல்லாகிய 'ஓம்' என்பது இறைவனையும், இரண் டாவது சொல்லாகிய 'நம' என்பது எனக்கு நான் உரிய வனில்லை என்ற அடிமை நிலையையும், மூன்றாவது சொல் லாகிய 'நாராயணாய' என்பது சேதனன் இறைவனுக்கு ஆற்ற வேண்டிய திருத்தொண்டினையும் தெரிவிக்கின்றன.

பிரணவமாகிய 'ஓம்' என்ற சொல்லும் அகாரம், உகாரம், மகாரம் என்ற மூன்று எழுத்துகளை யுடையது. இம்மூன்று எழுத்துகளும் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். இதனுள் அகாரம் உலகத்தை யெல்லாம் காத்தருளும் திருமாலையும், மகாரம் ஜீவாத்மாவையும், உகாரம் அவ்விறைவனுக்கே கடமைப்பட்டிருப்பதையும் குறிக்கும். இதனைப் பெரியாழ்வார் தம் திருமொழியில்,

'மூன்றெழுத் ததனை மூன்றெழுத் ததனால்
மூன்றெழுத் தாக்கிமூன் றெழுத்தை

ஏன்று கொண் டிருப்பார்க் கிரக்கநன் குடைய
எம்புரு டோத்தம னிருக்கை,
மூன்றடி நிமிர்த்து மூன்றினில் தோன்றி
மூன்றினில் மூன்றுரு வானான்"[66]

என்று உணர்த்துகின்றார்.

"மந்திரத்தை, மந்திரத்தால் மறவா தென்றும்
வாழுதியேல் வாழலாம் மடநெஞ் சம்மே"[67]

என்கிறார் திருமங்கை யாழ்வார். இங்கு மந்திரம் என்பது எம்பெருமானைக் குறிக்கும்.

**திருநாமம்**

எம்பெருமானின் மேன்மையை விட அவனைக் குறிக்கும் திருநாமத்தின் மேன்மையே உயர்ந்ததாகும். திருமாலின் ஆயிரத்தெட்டுத் திருநாமங்கள் வைணவர்களால் பெரிதும் போற்றப் பெறுவன. பெரியாழ்வார் கண்ணனை வளர்த்தவர். ஆகையால் அவர்தம் உள்ளம் பிள்ளைகள் யாவரும் திருமாலின் திருநாமம் பெறவேண்டும் என்று விழைகிறது. ஆழ்வாரின் கருத்துப்படி நாராயணன் என்னும் திருப்பெயரை உடையானைப் பெற்ற தாய் நரகம் புகாள். ஆதலின் நாராயணனின் திருப்பெயரையே இடவேண்டி இவ்வுலக மக்களை வேண்டுகிறார். சோற்றுக்கும் கூழுக்கும் ஆசைப்பட்டு ஏனைய பெயர்களை இடுபவர்கள் இவரால் ஏசப்பெறுகின்றனர். இதனை,

"மலமுடை யூத்தையில் தோன்றிற் றோர்மல
வூத்தையை,
மலமுடை யூத்தையின் பேரிட் டால்மறு
மைக்கில்லை,
குலமுடைக் கோவிந்தா கோவிந்தா வென்
றழைத்தக்கால்,
நலமுடை நாரணன் தம்மன் னைநர கம்புகாள்"[68]

என்ற பாசுரத்தால் அறியலாம். இப்பகுதி முழுதும் நாரண நாமத்தின் பெருமையே பேசப்படுகிறது. மக்கள் திருமாலின்

திருநாமம் இட்டு வழங்கினாலே பேறு பெறுவர் என்று ஆழ்வார் பாசுரங்களினின்று வெளியாகின்றது. 'நாரணன் தம்மன்னை நரகம் புகாள்' என்னும் தொடரால் நாரணன் திருப்பெயர் உடையாரை நாராயணனாய் எண்ணும் சிறப்பு ஆழ்வார்க்குரியது எனலாம். திருநாமத்தின் பெருமையைப் பெரியாழ்வார் போலத் திருமங்கையாழ்வாரும் பாடியுள்ளார்.

"குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுய ராயின வெல்லாம்,
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்,
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்,
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்"[69]

என்பது திருமங்கையாழ்வார் பாசுரம். நாராயணன் என்னும் திருநாமச் சுவையில் இவ்வாழ்வார்கள் திளைத்து மகிழ்ந்தனர்.

**அடியவர் புகழ்**

பக்தி இயக்க காலத்தில் சமயங்கள் வளர்ந்தன. அவற்றை வளர்க்கப் பல முறைகள் தோன்றின. அவற்றில் ஒன்று அடியவர்க்குத் தொண்டு செய்தல் என்னும் மரபாகும். அடியவர் தொண்டினால் பேறு பெற்றவர்களின் சிறப்பைப் பற்றிப் பக்தி மதங்கள் பலவாறாகப் பேசுகின்றன. ஆழ்வார்கள் அத் திருத்தொண்டினைச் செய்தனர். ஆடிப்பாடி அடியவரின் கூட்டத்தில் சேர்ந்து பக்தி செய்வதால் பண்டைக்குலம் தவிர்க்கப் பெறுகின்றது. இதனை,

"தொண்டக் குலத்திலுள் ளீர்வந் தடிதொழு
தாயிர நாமம்சொல்லி,
பண்டைக் குலத்தைத் தவிர்த்துப்பல் லாண்டுபல்
லாயிரத் தாண்டென்மினே"[70]

என்று பெரியாழ்வார் எடுத்துக்கூறி ஏனைய அடியாரையும் பண்டைக் குலம் தவிர்க்குமாறு அழைக்கிறார். பாவங்கள்

அனைத்தும் தீயில் கருகித் தூய மனத்துடன் திகழ எட்டெழுத்து மந்திரம் ஓதவேண்டும் என்பது அவரது விருப்பமாகும். இறைவன் உண்டதை உண்டு, அவன் உடுத்தியதை உடுத்து வாழவல்லவர்கள் அடியார்கள். இதனால் சூடிக் களைந்த துழாய் மாலைகளைச் சூடிக்கொள்ளும் திறம் ஒன்றையே உடையவர்கள் அவன் அடியார்கள். இறைவன் உண்ட மிச்சிலை உண்பதே அவர்க்குரிய குணமாகும்.[71]

இத்தகைய அடியாரின் குடியைப் பற்றிச் சிறப்பித்துப் பெரியாழ்வார்,

> "எந்நா ளெம்பெரு மானுன்ற னக்கடி
> யோமென் றெழுத்துப்பட்ட
> அந்நாளே, அடி யோங்கள் அடிக்குடில்
> வீடுபெற் றுய்ந்ததுகாண்"[72]

என்று குறிப்பிடுகின்றார். மேலும் குலசேகரர்,

> "மொய்த்துக்கண்பனி சோரமெய்கள்சி-
> லிர்ப்பஏங்கியி ளைத்துநின்று,
> எய்த்துக்கும்பிடு நட்டமிட்டெழுந்
> தாடிப்பாடியி றைஞ்சி"[73]

நிற்பதுவும் பக்தியேயாகும். இறைவனை நினைத்து அழுதலும் பக்தியே யாகும்.

### திருவடிகள் பெருமை

சேதனன் உபாயமாகப் பற்றுவதற்கு இன்றியமையாதனவாகக் கருதப்படுவன எம்பெருமானுடைய இணைத்தாமரை அடிகளாகும். இத் திருவடிகள் எம்பெருமானை விடவும் பிராட்டியாரை விடவும் சிறந்தனவாகும் என்பது வைணவர்களின் நம்பிக்கை. பிராட்டியார் சேதனனுடைய துன்பநிலையைக் கண்டு மனமிரங்கி அவனை ஏற்குமாறு எம்பெருமானிடம் புருஷகாரம் செய்கிறார் இந்நிலையில் அவர் இவனுடைய குற்றங்களைப் பகவானிடம் எடுத்துரையார் என்பது

உண்மை. ஆயினும் இறைவன் மனத்தில் இவனை ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்த ஒருகால் சில குற்றங்களை எடுத்தியம்புதல் கூடும். அந்தச் சேதனனிடம் அருள் உள்ளம் கொண்ட பகவான் தனக்குரிய வாத்சல்யம் முதலிய குணங்களால்,

> "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையா
> ளாகிலும் சிதகு ரைக்குமேல்,
> என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல்
> நன்றுசெய்தா ரென்பர் போலும்"[74]

என அவனை ஏற்றுக்கொள்ள முன்வந்து நிற்பன். அத்தகைய எம்பெருமானும் ஒருகால் இவனைக் கைவிடுவதுண்டு. இவ்வாறு சேதனனுக்கு நன்மை புரிபவர்களாகிய இருவரும் கைவிடினும் தன் அழகினால் சேதனனைத் தன்னைவிட்டு நீங்கிச் செல்லாதவாறு அத்திருவடிகள் பற்றிக் கொள்ளும். அத்திருவடிகள் சேதனனை விடாது பற்றிக்கொள்ளும் திண்மை வாய்ந்தவை என்பதை,

> "பிராட்டியும் அவனும் விடினும்
> திருவடிகள் விடாது திண்கழலா யிருக்கும்"[75]

என்று விளக்குகிறது முமுட்சுப்படி. நம்மாழ்வாரும்,

> "வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே"[76]

என்று அருளிச் செய்வதைக் காணலாம்.

**பிராட்டியார் திறம்**

பெருமாளுக்குக் கருணையே இயற்கைத் தன்மையாயினும் தவறு செய்தவர்களைத் தண்டிக்கும் மனப்பான்மையும் உடையவன். பிராட்டியின் திருவுள்ளமோ தனிப்பட்டதாகும். குற்றம் செய்து எம்பெருமானது சீற்றத்திற்கு ஆளான சிலரிடம் பிராட்டிக்குத் தாய்மைக் கேற்ற கருணை பெருகுகிறது. குற்றமற்ற ஒருவனையும் உலகில் காண முடியாது என்றெல்லாம் கூறிக் குற்றவாளிகளுக்காகப் பெருமானிடம் பரிந்து பேசி அவர்களை அவனிடம்

ஏற்கும்படிச் செய்து விடுகிறாள் பிராட்டி. சில காலங் கழித்து அவ்வடியார்களிடத்து எம்பெருமானது மனப்பான்மை அருள் வழியில் நிலைநிற்கிறதா எனச் சோதித்துப் பார்க்கப் பெரு மானை அணுகி, அவன் முன்பு ஏற்றுக்கொண்ட அடியார் களிடம் குற்றம் காண்பதாகக் கூறுகிறாள். அதற்கு எம் பெருமான்,

என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல்
நன்றுசெய்தா ரென்பர் போலும்''[77]

என்கிறார் அடியார்கள் செய்ததைக் குற்றமென்று வாயினால் சொல்லக்கூட மனமின்றி 'அது' என்று கூறுகிறார்.

**ஆட்படுதல்**

பெரியாழ்வார் தமது சோலையின்கண் மரத்திலே முல்லைக் கொடி தழுவிப் படரும் காட்சியைக் கண்டு ஆன்மாவும் இறைவனைத் தழுவிப் படரவேண்டும் என்பதை,

"குரவில் கொடி முல் லைகள்நின் றுறங்கும்
கோவர்த் தனம்''[78]

என்று கோவர்த்தனகிரிக் காட்சியாகக் காட்டுகின்றார்.

''உடுத்துக் களைந்தநின் பீதக வாடை
உடுத்துக் கலந்ததுண்டு
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்''[79]

என்று பெரியாழ்வார் இறைவன் அனுபவித்துக் களைந்தனவே அடியவர்க்கு உகப்பாகும் என்பதனை உணர்த்துகிறார்.

எம்பெருமானுக்கு ஆட்பட்டு வாழ விரும்பினால் தங்கள் குழுவைச் சார்ந்து சிறப்படையுமாறும், கூழுக்கு ஆசைப்பட்டு நிற்பவர்களைத் தங்கள் குழுவினில் சேர்க்கமாட்டோம் என்றும் பெரியாழ்வார் கூறுவதை.

''வாழாட் பட்டுநின் றீருள்ளீ ரேல்வந்து
மண்ணும் மணமும் கொண்மின்,
கூழாட் பட்டுநின் றீர்களை எங்கள்
குழுவினில் புகுத லொட்டோம்''[80]

என்ற பாசுரத்தால் அறிகிறோம்.

**கண்ணன் கதையும் ஆழ்வார் கருத்தும்**

கண்ணன் குழலூதி நிற்கும்போது அந்த இசையையும் அக் குழலூதும் கண்ணனையும் காதலித்துப் பெண்கள் எல்லாப் பற்றுகளையும் துறந்து ஓடிவருகின்றனர். அப்பெண்கள் பரமாத்மாவுக்காக உலகப் பற்றுக்களையெல்லாம் துறந்த முனிவர்களைப் போலக் காட்சியளிக்கின்றனர். இதுவே கிருஷ்ண சரிதையின் புதைபொருளாகத் திகழ்கிறது. பகவத் கீதையின் உபதேசமும் வித்தில் விருட்சம் போல் இந்த வேய்ங் குழல் ஊதும் சிறப்பில் அடங்கிவிடுகிறது.

பிருந்தாவனத்தில் கண்ணன் கோபிகைகளோடு சேர்ந்து களிக்கின்றான். அவன் இசைக்கும் வேய்ங்குழலின் கீதம் காலத்தைக் கடந்த அமரகீதமாகும். அக்குழலோசையால் ஆயர்குலமங்கையரின் உள்ளத்தைக் கவர்கின்றான். அம்மா யோனின் இசைவெள்ளத்தில் ஜீவன்கள் சிக்குண்டு அவனை அடைகின்றன என்பதுதான் இதன் உட்பொருள்.

கண்ணன் கோபிகைகளின் துகில் கவர்ந்து விளையாடிய தனைப் பெரியாழ்வார் ஒரு பாசுரத்தில் குறிப்பிடுகிறார் :

''வண்டமர் பூங்குழ லார்துகில் கைக்கொண்டு,
விண்தோய் மரத்தானா லின்று முற்றும்,
வேண்டவும் தாரானா லின்று முற்றும்''[81]

என்ற பாசுரத்தால் குறிப்பிடுகிறார். இந்நிகழ்ச்சியை ஆண்டா ளும் 'கோழி அழைப்பதன் முன்னம்'[82] என்ற பாசுரத்தில் உணர்த்திச் செல்வதைக் காணலாம். இவ்வருளிச் செயல்கள் கூறுவதன் ஆழ்ந்த பொருள் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக் கும் உள்ள தொடர்பை நினைவூட்டுவதாகக் கருத வேண்டி யுள்ளது.

இளங்கோபியர்களின் உள்ளத்தையும், வெண்ணெயையும் ஒருங்கே திருடியவன் துறவியர்களின் உள்ளங்களையும், ஞானி களின் உள்ளங்களையும் கவர்ந்து கொள்வதைக் காண்கிறோம். ஆநிரை மேய்த்த சிறுவன் அரசியல் தந்திரியாக, ஏனைய அரசரும் கண்டு அஞ்சுமாறு விளங்குகின்றான். கண்ணன் கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு பாண்டவர் தூதனாகச் செல்கிறான். பிறகு பார்த்தசாரதியாகின்றான். இறுதியில் கீதாசாரியனாகக் காட்சி வழங்குகின்றான். மகாபாரதம் தூது போனவனின் ஏற்றத்தைக் கூறுகிறது. இந்தத் தூதில் இறைவனுடைய எளிமை நன்கு வெளிப்படுகிறது. இறைவ னுடைய பரத்துவத்தைக் காட்டிலும் எளிமை நிலையே பெரி யாழ்வாரைப் பெரிதும் கவர்ந்தது.

"மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரலிடை யாப்புண்டு,
எத்திறம் உரலினோ டிணைந்திருந்து ஏங்கிய எளிவே"[83]

என்று கிருஷ்ணாவதாரத்தைப் பற்றியே பேசுகிறார்.

கண்ணன் நள்ளிரவில் கம்சன் அயர்ந்திருக்கச் சிறைக் காவலர் உறங்கும் நேரத்து அவதரிக்கிறான். இதில் கம்சன் ஆணவத்திற்கு அறிகுறியாகவும், சிறைக்காவலர் புலன்களுக்கு அறிகுறியாகவும் காட்சியளிக்கின்றனர். ஆணவம் அயர்ந் திருக்கும் போதும், புலன்கள் உறங்கும்போதும் இறையொளி தோன்றும் என்ற உண்மையை இந்த நிகழ்ச்சி நினைவூட்டு கிறது.

**வெண்ணெயும் வெறுங்கலமும்**

"வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை
வெற்பிடை யிட்டத னோசை கேட்கும்"[84]

என்பதனால் உறியிலே தொங்கும் தாழிநிறைந்த வெண்ணெய் அத்தனையையும் வாரி அமுது செய்துவிட்டு வெறும் பாத் திரத்தை உருட்டிவிட்டு உடைத்தவன் எனப் பொல்லாங்கு பல பெற்று, இன்று நமக்கு இனிய அனுபவப் பொருளாகத் திகழ் கிறான் என்கிறார் பெரியாழ்வார்.

வெண்ணெய் உண்ணும் செயலாலே, 'நித்தியமான இச் சீவாத்மாவைப் பரமாத்மா ஆகிய தான் வெண்ணெயை உண்பதுபோல் தன்னுடன் கலக்கச்செய்து வெற்றுப் பண்ட மான இவ்வுடலையன்றோ எறிகிறான்' என்ற தத்துவமே புலப்படுகிறது.

பரமாத்ம சொரூபியான கிருஷ்ணன் நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்னும் ஐம்பூதங்களையும் அடக்கி ஆண்டு, சர்வ வியாபியாய்த் திகழ்கிறான் என்பதை விளக்கவே ஐந்தலைப் பாம்பின் மீது நர்த்தனம் செய்கிறான் என்பதை,

"காளியன் பொய்கை கலங்கப்பாய்ந் திட்டு,
அவன்
நீள்முடி யைந்திலும் நின்று நடஞ்செய்து
மீள அவனுக் கருள்செய்த வித்தகன்"[85]

என்னும் பாசுரத்தால் அருளிச் செய்கிறார்.

வில்லிபுத்தூரின் நீர்நிலைகளில் மலரும் குவளைகள் ஊர் முழுதும் பரிமளத்தைப் பரப்புவதுபோல் இவ்விடத்து அவ தரித்த பெரியாழ்வாரது புகழ் பார்முழுதும் பரவுகின்றது என்பதனை,

"நீரணிந்த குவளைவாசம் நிகழநாறும் வில்லிபுத்தூர்,
பாரணிந்த தொல்புகழான் பட்டர்பிரான்"[86]

என்ற பாசுரத்தால் பெறவைக்கிறான். 'தொல்புகழ்' என்பது வந்தேறியில்லாமல் ஆத்மாவுக்கு இயல்பாக வந்தபுகழ். ஸ்வரூப ஞானத்தால் வந்தது; ஆத்மா இறைவனுக்கே உரியது எனும் அறிவால் வந்தது.

**எங்கும் உளன்**

பள்ளியில் ஓதிவந்த தன் சிறுவனான பிரகலாதனைப் பல வகையால் நலிந்த இரணியன் ஒருநாள் 'பிள்ளாய்! நீ சொல்லு கிறவன் 'எங்கு உளன்' என்று தன் மகனை நோக்கிக் கேட்க, அவன் 'எங்கும் உளன்' என்று விடைகூற, அதுகேட்ட

இரணியன் 'இத்தூணிலே உளனோ' என்று தான் அளந்து கட்டி வைத்த தூணைத்தானே தட்டினான். பிறர் தட்டினால் கையில் நரசிங்கனைக் கொண்டுவந்து உள்ளே புகவிட்டதாகக் கூற இடமேற்படும். அவன் தட்டின இடத்திலேயே நரசிம்ம உருவாய்த் தோன்றித் தனது திரு உகிர்களையே ஆயுதமாகக் கொண்டு அவனுடைய மார்பை இருகூறுகளாகப் பிளந்தனன். அத்தகைய திருக்கைகளால் சப்பாணி கொட்டுமாறு வேண்டு கிறார் பெரியாழ்வார். இதனை,

> "அளந்திட்ட தூணை யவன்தட்ட, ஆங்கே
> வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க வுருவாய்,
> உளந்தொட் டிரணிய னொண்மார் வகலம்,
> பிளந்திட்ட கைகளால் சப்பாணி"[87]

என்ற பாசுரத்தால் அருளிச்செய்கிறார். மேலும்,

> "அதிரும் கழல்பொருதோள் இரணியன்
> ஆகம் பிளந்து, அரியாய்
> உதிர மளைந்த கையோ டிருந்தானை
> உள்ளவா கண்டாருளர்"[88]

என்பதனாலும் இறைவன் எங்கு முளனாவது பெறப்படும். இந் நிகழ்ச்சியை நம்மாழ்வாரும்,

> "எங்கும் உளன்கண்ணன் என்றமக னைக்காய்ந்து"[89]

என்னும் பாசுரத்தால் விளங்கவுரைக்கிறார்.

**ஸ்ரீவைஷ்ணவ லட்சணம்**

ஒரு நாள் பட்டரின் சீடர் அனந்தாழ்வானை வணங்கி ஸ்ரீவைஷ்ணவ லட்சணம் குறித்துக் கேட்டார். அதற்கு அனந் தாழ்வான்,

> "கொக்கைப்போல் இருப்பான்
> கோழிபோல் இருப்பான்
> உப்பைப்போல் இருப்பான்
> உம்மைப்போல் இருப்பான்"

என்று கூறினார்.

இதற்கு உண்மையான விளக்கம் அறிய முடியாத சீடர் பட்டரிடம் விளக்கம் கேட்கிறார். அதற்குப் பட்டர் 'கொக்கைப் போல்', என்றால் கொக்கு வெண்மைநிறம் உடையதாய் இருக்கும்; நீர்வளமுள்ள இடங்களில் வாழும் தன்மையுடையது; ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் கொக்கு வாடியிருக்கும்.

ஸ்ரீவைணவனுடைய உள்ளமும் கொக்கைப் போன்று வெண்மையுடையதாய் மாசற்று விளங்கும். ஸ்ரீவைணவனும் கொக்கைப் போன்று புனித நீர்க்கரையில். வசிப்பவன். தனக்கு வேண்டிய மீனினைப் பற்றிக் கொள்ளும் கொக்கைப் போன்று ஸ்ரீவைணவனும் தனக்குரிய ஆசாரியனைத் தேடுவதிலும், தோழமை கொள்ளப் பாகவதரை நாடுவதிலும் யோகிபோல் விளங்குவான்.

கோழியானது குப்பை மேட்டிலுள்ள குப்பைகளை நீக்கித் தனக்கு வேண்டியவற்றை உண்டு வாழ்வதைப் போன்று ஸ்ரீவைணவனும் வேதப் பொருட்களிலுள்ள சாரத்தை உட்கொண்டு கடைந்தெடுத்த அமுதமான ஆழ்வார் ஆசாரியர்களின் நூல்களைச் சிறப்பாகக் கற்று ஒழுகுபவன்.

'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்பதைப் போன்று பாகவதனின் தொண்டு சமுதாயத்திற்கு உப்பைப் போல் இன்றியமையாதது.

ஒருவன் தன்னைப் புகழும்போது ஸ்ரீவைணவன் வெள்கி ஒதுங்கி 'நீசனேன் நிறை ஒன்றுமிலேன்' என்று தன் குறைகளை எண்ணிப் பார்ப்பான். ஒருவன் தன்னை இகழுங் காலத்துச் சினந்து சீறாமல் மகிழ்ச்சியோடு காணப்படுவான். தான் அழியினும் பிறர் நலம் நாடுவான்.

'உம்மைப்போல் இருப்பான்' என்பதைப் பட்டர் தெளிவுபடுத்தினார். துளசி (திருத்துழாய்) பரிமளத்துடன் வளர்வதுபோல இச்சீடரும் அவ்வளவு இயற்கையாக வைணவத்துடன் வளர்ந்திருந்தார். உத்தம வைணவனாக ஒழுகி

வந்தும் அதையும் அறிய முடியாத குழந்தை உள்ளத்துடன் வாழ்ந்தார் இத்தகைய ஸ்ரீவைணவன்,

"உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்வெற் றிலையு
மெல்லாம் கண்ணன்"[10]

என்று எல்லாவற்றையும் இறைவன் திருவடிகளில் ஒப்படைத்து விடுவான்.

**பகவத் சம்பந்தம்**

ஒருவனுக்குப் பகவத் சம்பந்தம் உண்டு இல்லை என்பது தானாகவே தெரிந்துவிடும். பிறர் நோவுபடக் கண்டவிடத்து 'ஐயோ' என்று இரக்கம் பிறக்குமே யானால் நமக்குப் பகவத் சம்பந்தம் உண்டு என்று தெரிந்துகொள்ளலாம். 'அத்தனையும் வேண்டும்' என்று இருந்துவிட்டால் நமக்கு அது இல்லை என்று அறியலாம். இதனால் சமுதாய அளவில் சகோதர மனிதர்களிடம் இதயக் கனிவு இல்லாதவர்களுக்கு இறைவனிடம் பக்தி தோன்ற முடியாது என்பதை உணரலாம்.

தான் வாழப் பிறரை அழிப்பவன் 'அதமன்' என்றும், தானும் மற்றவரும் வாழ வகைசெய்வோன் 'மத்திமன்' என்றும், தன்னை அழித்துப் பிறரை வாழச் செய்வோன் 'உத்தமன்' என்றும் கூறுவர்.

"வைஷ்ணவன் என்போன் யாரெனக் கேட்பின்
வகுப்பேன் அதனைக் கேட்பீரே!
பிறருடைத் துன்பம் தனதென எண்ணும்
பெருங் குணத் தவனே வைஷ்ணவனாம்
உறுதுயர் தீர்த்ததில் கர்வங் கொள்ளான்
உண்மை வைஷ்ணவன் அவனாகும்
உறவென மனிதர்கள் உலகுள யாரையும்
வணங்குவன் உடல்மனம் சொல் இவற்றால்
அறமெனத் தூய்மை காப்பவன் வைஷ்ணவன்

* * * *

விருப்பும் வெறுப்பும் விலக்கிய நடுநிலை
விளங்கிட ஆசைகள் விட்டவனாய்
ஒருப்புடன் அன்னிய மாதரைத் தாயென
உணர்வோன் வைஷ்ணவன்''[91]

என்று நாமக்கல் கவிஞர் வெ. ராமலிங்கம் பிள்ளை அவர்கள் ஸ்ரீவைஷ்ணவன் பண்புகளை ஓர் அழகிய பாடலில் உணர்த்து கின்றார்.

**கண்ணனும் இராமனும்**

பெரியாழ்வார் 'என்நாதன் நோக்கு' என்னும் திருமொழி யில் இரண்டு ஆயர் மங்கையர் நிலையினைத் தாம் அடைந்து பாடுகிறார். ஒருத்தி,

''என்னாதன் தேவிக்கன் றின்பப்பூ ஈயாதான்
தன்நாதன் காணவே தண்பூ மரத்தினை,
வன்னாதப் புள்ளால் வலியப் பறித்திட்ட,
என்னாதன் வன்மையைப் பாடிப்பற
எம்பிரான் வன்மையைப் பாடிப்பற''[92]

என்று கண்ணன் புகழைப் பேசுவதாகவும், மற்றொருத்தி,

''என்வில் வலிகண்டு போவேனென் றெதிர்வந்தான்
தன்வில்லி னோடும் தவத்தை யெதிர்வாங்கி,
முன்வில் வலித்து முதுபெண் ணுயிருண்டான்
தன்வில்லின் வன்மையைப் பாடிப்பற
தாசரதி தன்மையைப் பாடிப்பற''[93]

என்று இராமன் திறம் பேசுவதாகவும் அருளிச் செய்கின்றார். இப்பதிகம் முழுவதும் இவ்வாறே காணப்படுகிறது.

இடைக்கால இலக்கியங்களில் இறைவனைப் பற்றிய கதைகள் அல்லது புராணக் கதைகள் பெரிதும் இடம்பெறு தலைக் காணலாம். புராணக் கதைகளின் மூலம் இறைவனின் பேராற்றல், வீரம், அருள் முதலியவற்றை மக்களுக்கு உணர்த்

தினர். புராணக் கதைகள் ஒவ்வொன்றும் ஓர் உயர்ந்த கருத்தைத் தருவதாக அமைந்துள்ளன. தீமையை அழித்து நன்மையை அளிக்கும் நோக்கத்துடனேயே தேவர்கள், அசுரர்களைப் பற்றிய கதைகள் எழுந்தன என்று கூறலாம். புராணக் கதைகளை வெறும் கதைகளாக மட்டும் கருதாமல் அவற்றில் அடங்கியுள்ள உண்மைக் கருத்துகளை அறிய முயல்வதே சிறப்பு, ஒரு பாடலைப் புறநிலையில் பார்த்தலைவிட அதில் அடங்கியுள்ள தத்துவப் பொருளை அறிந்து கற்றால் பாடலின் சுவை மிகுதியாதலைக் காணலாம்.

# ஆழ்வார் உணர்த்தும் வைணவ நெறி

## குறிப்புகள்

1. பரி. 13/26-29
2. திருப்பல். 4/3-4
3. ,, 11/3-4
4. ,, 8/3-4
5. ,, 9/3-4.
6. கம்ப. சுந்தர காண்டம், 1127
7. பெரியாழ். திரு. 420
8. ,, 471
9. பெரிய திருவந். 2652
10. பெரியாழ். திரு. 452
11. ,, 472/3-4
12. ,, 459/3-4
13. திருவாய். 2939
14. ஆசாரிய இருதயம், சூ. 158
15. முதல் திருவந். 2125
16. ஆசாரிய இருதயம், சூ. 158
17. சிரீவசன. சூ. 38
18. முமுட்சுப்படி, சூ. 140
19. சிரீவசன. சூ. 140
20. திருவாசகம், திருத்தெள்ளேணம், பாடல் 1/3-4
21. அமலனா. 236/3-4
22. முமுட்சுப்படி, சூ. 142.
23. பெரியாழ். திரு. 428/2
24. தேசிக. பிர., பரமபத பங்கம், 47
25. பெரியாழ். திரு. 334/3-4
26. ,, 334, அண்ணங்கராசாரியர் உரை
27. பெரி திரு. 1068/3

28. முமுட்சுப்படி, 218
29. பெரி. திரு. 1073
30. ,, 1036
31. பெரியாழ். திரு. 423/2
32. ,, 126
33. பெரிய திரு. 1076/2-3
34. சிறிய திரு. 48-51
35. பெரியாழ். திரு. 266
36. திருவாய். 3660
37. ,, 3560/3-4
38. ,, 3335
39. ,, 2919
40. திருப். 502/5-8
41. பெரியாழ். திரு. 452
42. ,, 139/3
43. ,, 454
44. ,, 461
45. ,, 443/3
46. ,, 446/3
47. ,, 472/2
48. ,, 453/2
49. ,, 360/4
50. ,, 361/4
51. பெரியாழ். திரு. 363
52. ,, 364
53. ,, 437
54. ,, 449
55. ,; 438
56. ,, 435/4
57 . 461

58. பெரியாழ். திரு. 459
59. ,, 444/4
60. ,, 414/3-4
61. ,, 442/4.
62. ,, 462/4.
63, ,, 473/3-4
64. ,, 437.
65. திருவாய். தனியன், 2.
66. பெரியாழ். திரு. 400
67. திருநெடுந். 2055/4
68. பெரியாழ். திரு. 385
69. பெரிய. திரு. 956
70. திருப்பல். 5/3-4
71, ,, 9
72. ,, 10.
73. பெருமாள் திரு. 666
74. பெரியாழ். திரு. 413
75. முமுட்சுப்படி, 146
76. திருவாய். 2695/2
77. பெரியாழ். திரு. 413
78. ,, 274/2
79. திருப்பல். 9.
80. ,, 3
81. பெரியாழ். திரு. 214/3-4
82. நாச்சி. 524
83. திருவாய். 2697/3-4
84. பெரியாழ். திரு. 202
85. ,, 313
86. ,, 138/2

87 பெரியாழ். திரு. 83

88. ,, 328/3-4

89. திருவாய். 2872

90. ,, 3293

91. நாமக்கல் கவிஞர், 'நாமக்கல் கவிஞர் பாடல்கள்', பாடல் 244.

92. பெரியாழ். திரு. 307

93. ,, 308

# ஆழ்வார் காலச் சமுதாய நிலை

பண்டைத் தமிழ்மக்கள் வாழுமிடத்தாலும், நிலச் சூழலாலும் நான்கு தன்மையுடைய பழக்க வழக்கங்களால் வேறுபட்ட வாழ்க்கையுடையவராயினர். எனவே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு நிலப்பிரிவுகள் ஏற்பட்டன. தொல்காப்பியர் வாழ்வு நடைபெறுதற்கு நிலைக்களமாயுள்ள இந்நிலவுலகத்தை ஐந்து பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு கடவுளைக் கூறிச் செல்கிறார்.[1] நிலத்தில் உள்ள கருப்பொருள்களைப் பற்றிக் கூறும்போதும் 'தெய்வம் உணாவே மாமரம்'[2] என்று கூறுகிறார். தொல்காப்பியம் மக்கள் வாழ்வு முழுமுதற் பொருளின் ஆணைக்குட்பட்டு நடைபெறுகிறது என்ற கருத்தை ஏற்றுக்கொண்டு 'ஒன்றி உயர்ந்த பால தாணையின் ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப'[3] என்று கூறிச் செல்கிறது. எனவே, ஒரு சமயத்தின் சார்பு பெறாமல் கடவுட் கொள்கை பற்றிப் பேசும் தமிழரின் பழமையான நூல் என்று கூறப்பெறும் தொல்காப்பியத்தில் சமயம் இடம் பெறுதலைக் காணலாம். இந்நூலில் தமிழரின் தொன்மை மிக்க பழக்கவழக்கங்கள் காணப்படுகின்றன.

ஆழ்வார் பன்னிருவருள் பெரியாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், ஆண்டாள் ஆகிய நால்வரையும் பெற்றெடுத்த பெருமை பாண்டிய நாட்டைச் சாரும். மதுரையையடுத்துள்ள இருங்குன்றமும், இருந்தையூரும் பரிபாடல் தோன்றிய காலத்திலேயே புகழ்மிக்க வைணவத் தலங்களாக விளங்கின.

''எல்லாம் வேறுவே றுருவி னொருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலை யோங்கிருங் குன்றம்''[4]

என்று இளம்பெருவழுதியார் பாடுகிறார்.

பரிபாடல் திரட்டில் பழம்பெரும் புலவர் ஒருவர் இருந்தையூர் இறைவனைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய
இருந்தையூ ரமர்ந்த செல்வ"[5]

அங்கிருக்கும் இனிய துறையின் சிறப்பும் இதன்கண் கூறப்பட்டுள்ளது.

பாண்டியர் காலத்தில் பெரியாழ்வார் தலைசிறந்து விளங்கினார். அவர்தம் திருமொழியில் குறிஞ்சி நில மக்களின் வாழ்க்கையை இனிது எடுத்தியம்புகிறார். குறத்தியர் தம் கணவரால் கைப்பற்றப்பட்ட மான்குட்டிகளுக்குப் பஞ்சிலே பாலை நனைத்து வாயில் பிழிந்து காப்பாற்றினர் என்பதை,

"வட்டத் தடங்கண் மடமான் கன்றினை
வலைவாய் பற்றிக் கொண்டு,குற மகளிர்
கொட்டைத் தலைப்பால் கொடுத்து வளர்க்கும்"[6]

என்னும் பெரியாழ்வார் பாசுரத்தால் அறியலாம்.

முல்லை நிலக் காட்சிகளே பெரியாழ்வார் பாசுரத்தில் பெரிதும் இடம்பெற்றுச் சிறந்துள்ளன எனில் மிகையாகாது. முல்லை நில மக்கள் என்பவர் பரந்து விரிந்த மேட்டு நிலங்களில் வாழலாயினர். கால்நடை வளர்ப்பதே இவர்களின் முக்கிய தொழிலாகும். இவர்களை 'அறவை நெஞ்சத் தாயர்'[7] என்று புறநானூறு கூறுகிறது. மேலும் சிலப்பதிகாரம்,

"ஆகாத் தோம்பி யாப்பய னளிக்குங்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை"[8]

என்று குறிக்கின்றது. இவர்கள் பால், தயிர், நெய் இவற்றை விரும்பி உண்டனர் என்பதை,

"தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்,
மெத்தத் திருவயி றார விழுங்கிய,
அத்தன்"[9]

"துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய
அப்பன்"[10]

"மிடறு மெழுமெழுத் தோட வெண்ணெய்
விழுங்கிப்போய்"[11]

"முப்போ தும்கடைந் தீண்டிய வெண்ணெயி
னோடு தயிரும் விழுங்கி"[12]

"அள்ளி நீ வெண்ணெய் விழுங்க"[13]

"ஆய்ச்சியர் சேரி அளைதயிர் பாலுண்டு"[14]

"வைத்த நெய்யும் காய்ந்த பாலும்
வடிதயிரும் நறுவெண்ணெயும்"[15]

"அப்பம் கலந்தசிற் றுண்டி
அக்காரம் பாலில் கலந்து"[16]

என்னும் பாசுர வரிகளால் அறியலாம்.

ஆயர் குல மக்களின் வாழ்க்கையைப் பற்றிச் சில செய்திகள் கிடைக்கின்றன. சிலப்பதிகாரத்திலுள்ள ஆய்ச்சியர் குரவைப் பகுதியில் இவர்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆழ்வார் பாடல்களிலும் ஆங்காங்குச் சில குறிப்புகள் காணப்படு கின்றன. இவ்வெளிய மக்கள் ஆடுமாடுகளை வளர்க்க லாயினர். ஆயர்கள் ஆடுமேய்க்கச் செல்லுங் காலத்துச் "சிற்றாடையும் சிறுப்பத்திரமும்"[17] அணிந்து செல்கின்றனர். "சுரிகையுந் தெறிவில்லும் செண்டு கோலும்"[18] எடுத்துச் செல்வர். இவர்கள் தம் குல ஒழுக்கத்திற்கேற்றவாறு உறியை யும், மழுவென்னும் கருவியையும், பசு மேய்க்கிற கோலையும், ஓலைப்பாயையும் உடையவராய்த் திகழ்ந்தனர். இதனை,

"கொண்ட தாளுறி கோலக் கொடுமழுத்
தண்டி னர்பறி யோலைச் சயனத்தர்"[19]

என்னும் பெரியாழ்வார் திருவாக்கால் அறியலாம்.

"...பாவியேன் வாழ்வு கந்து,
உன்னை யிளங்கன்று மேய்க்கச் சிறுகாலே
ஊட்டி யொருப்ப டுத்தேன்"[20]

என்னும் யசோதையின் புலம்பலிலிருந்து இடைச்சிறுவர்கள் கன்று மேய்க்க விடியற்காலையிலேயே உண்டுவிட்டுச் செல்வர்

என்பது பெறப்படுகிறது. இவர்கள் காட்டிலேயே உணவு அருந்துவர் என்பது "கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந் துண்போம்"[21] என்னும் ஆண்டாள் பாசுரத்தால் அறியப் படுகிறது.

ஆயர்கள் சிறந்த கன்றுகளைப் பிறர் அறியாமல் கவர்ந்து கொண்டு அதற்கு ஈடாகத் தங்கள் கன்றுகளை விட்டுவிடும் வழக்கத்தைப் பெரியாழ்வார்,

"ஒன்று மறிவொன்றில் லாத
உருவறைக் கோபாலர் தங்கள்,
கன்றுகால் மாறுமா போலே"[22]

என்னும் உவமையால் விளக்குகிறார்.

"காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து,
வாச நறுங்குழ லாய்ச்சியர், மத்தினால்"[23]

தயிர் கடைகின்றனர். ஆயர்கள் புற ஊர்களுக்குச் சென்று தயிர், பால், வெண்ணெய், நெய் முதலான பொருள்களை விற்று வாழ்க்கையை நடத்தினர். இதனை,

"தாய்மார் மோர்விற்கப் போவர் தகப்பன்மார்
கற்றா னிரைப்பின் போவர்"[24]

என்று பெரியாழ்வார் குறிப்பர். இவர்கள் ஆநிரை மேய்த்த கண்ணபிரானையும் அவன் மூத்தோனான பலராமரையும் வழி பட்டு வந்தனர். அவர்கள் பொதிய மலைப் பகுதியில் மிகுதி யாக வாழ்ந்ததால் அதற்கு ஆய்நாடென்றே பெயர் வழங் கிற்று. ஆய் குலத்தவரே அப்பகுதிக்குத் தலைவர்களாகவும் மன்னர்களாகவும் வெகுகாலம் ஆண்டுவந்தனர்.

ஆயர்கள் மிகுதியாய்த் தங்கிய குடியிருப்புகளுக்கு 'ஆய்ப் பாடி', 'ஆயர்பாடி', 'ஆய்க்குடி' என்னும் பெயர்கள் வழங்கப் பட்டன.

ஆயர்கள் துவராடை உடுப்பதையும், பால் கறப்பதற்காகக் 'கடையா' எனப்படும் மூங்கில் குழாயை வைத்திருப்பதையும்,

மாடு, கன்றுகளை அடக்குதற்குக் கையில் கோலேந்தியிருப் பதையும், ஆநிரைகள் மணியோசை கேட்டுத் தம்மை நோக்கி ஓடிவருதற்காகத் தங்கள் இடுப்பில் 'சறகை' மணியைக் கட்டி யிருப்பதையும்

> "துவருடுக்கை கடையாவின் கழிகோல்கை,
> சறையினார்"[25]

என்னும் திருவாய்மொழிப் பாசுரம் சித்தரிக்கிறது.

தமிழ்நாட்டு மக்களிடையே பண்டைக் காலத்துச் சிறந்து விளங்கிய வீரச் செயல்களுள் 'ஏறு தழுவுதல்' என்பதும் ஒன்றா கும். இஃது அக்காலத்து ஒரு விழாவாகவே கொண்டாடப் பட்டது. இவ் விழாவினைப் பற்றிய செய்திகள் முல்லைக்கலி, சிலப்பதிகாரம் என்னும் நூல்களிலும், அவற்றின் உரைகளிலும் காணப்படுகின்றன.

இவ்வாயர் குலமகளிர் முல்லை நிலத்திற்குரிய சிறந்த குடிப் பிறப்பும், கற்பும் உடையவராவர். இவர்கள்,

> "விரிநீ ருடுக்கை யுலகம் பெறினு
> மருநெறி யாயர் மகளிர்க்
> கிருமணங் கூடுத லில்லியல் பன்றே"[26]

என்னும் தன்மையுடையவர்கள். 'தெய்வத்திற்குப் பலியாகச் சமைக்கும் பாலோடு காமன் கோயிலிலே செல்லின், அக் காமனும் நெஞ்சழிந்து தன் கையிற் படையைக் கீழே போகட்டு மயங்குதற்கேற்ற பேரழகினர், இவ்வாயர் குடி யினர் கூர்மையான கொம்புகளையுடைய முரட்டுக் காளை மாடுகளைப் பறையறைந்து வெளியே விட்டு அவற்றைத் தழுவியடக்குபவனுக்கே தம் மகளைத் திருமணம் செய்து கொடுப்பர். முல்லைநில மக்கள் எருதுகளை அடக்கியாளும் 'ஏறுதழுவல்' என்னும் விளையாட்டில் வல்லவர்கள். முல்லை நிலக் கடவுளான கண்ணபிரானும் ஏழு எருதுகளைத் தழுவி யடர்த்தே ஆயர்குல நங்கையான நப்பின்னையை மணந்த தாக்க கூறப்படுகிறது. இதனைப் பெரியாழ்வார்,

"துப்புடை யாயர்கள்தம் சொல்வழு வாதொருகால்
தூயக ருங்குழல்நல் தோகைம யிலனைய,
நப்பினை தன்திறமா நல்விடை யேழவிய
நல்லதி றலுடைய நாதனு மானவனே"[27]

என்னும் பாசுரத்தால் அருளிச் செய்கிறார். இன்னொரு பாசுரத்திலும் இதனை,

"ஆயர் மடமகள் பின்னைக்காகி
அடல்விடை யேழினையும்,
வீயப் பொருது வியர்த்துநின்றானை"[28]

என்று குறிப்பிடுகிறார். திருமங்கையாழ்வார் தம் பெரிய திருமொழியில்,

"துடிகொள் நுண்ணிடைச் சுரிகுழல் துளங்கெயிற்
றிளங்கொடி திறத்து, ஆயர்
இடிகொள் வெங்குர லினவிடை யடர்த்தவன்"[29]

எனக் குறிப்பிடுவதை இங்கு ஒப்பிட்டுக் காணலாம்.

**ஆயர்குலத் திருமண வழக்கம்**

பெரியோர்கள் மங்கல நிமித்தங்களுக்கேற்பத் திருமண நாளைக் குறித்து மணமகளை முறைப்படி மணப்பேசி மந்திரக்கோடி கொடுத்தனர். மணமகனை ஊர்வலமாக அழைத்துச் சென்று பாளை, கமுகு முதலியவற்றால் மணப் பந்தலை அலங்கரித்துப் பார்ப்பனச் சிட்டர்கள் முன்னிலையில் காப்புநாண் கட்டுவர். பெண்கள் கதிரொளி தீபம் கலசமுடன் ஏந்தி மணமகனை எதிர்கொண்டு அழைப்பர். மணமகனை எதிர்கொண்டு மணமகளைக் கைப்பிடித்துத் தீவலம் செய்தலும், அம்மி மிதித்தலும் வழக்காயிருந்தது. இத்திருமணச் சடங்குகளைப் பற்றி ஆண்டாள் 'வாரணமாயிரம்'[30] என்று தொடங்கும் தம் பாசுரங்களில் விவரித்துள்ளார். மணமகள் வீட்டாரே திருமணச் செலவை ஏற்றனர். பெற்றோரின் விருப்பப்படியே திருமணங்கள் செய்விக்கப்பட்டன.

திருமணமான பெண்ணைப் பெற்றோர் தம் இல்லங்களில் வைத்துக் கொள்வதும் உண்டு. இதனை,

"பெருப்பெ ருத்தகண் ணாலங்கள் செய்து
பேணிநம் மில்லத் துள்ளே,
இருத்துவா னெண்ணி நாமிருக்க
இவளுமொன் றெண்ணு கின்றாள்"[31]

என்னும் பாசுரத்தால் அறிகிறோம். மணமகள் வீட்டினரே திருமணச் செலவினை ஏற்றுக்கொண்டனர் என்பதை,

"கைத்தலத் துள்ள மாடழியக்
கண்ணா லங்கள் செய்து, இவளை
வைத்து வைத்துக் கொண்டென்ன
வாணிபம்"[32]

என்னும் பெரியாழ்வார் பாசுரம் புலப்படுத்துகிறது. அக்காலத்தில் பெண் தன்னுடைய பெற்றோரின் விருப்பத்திற்கு மாறாகத் தன் கணவனைத் தேர்ந்தெடுக்கவில்லை. அவ்வாறு தேர்ந்தெடுத்தாலும் அது பெரிதும் பழிக்கப்பட்டது. இஃது,

"தந்தையும் தாயுமுற் றாரும்நிற்கத்
தனிவழி போயினாள்! என்னும் சொல்லு
வந்தபின் னைப்பழி காப்பரிது"[33]

என்றும்,

"நாட்டில் தலைப்பழி யெய்தியுங்கள்
நன்மை யிழந்து தலையிடாதே,
சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்துதோன்றும்
துவரா பதிக்கென்னை யுய்த்திடுமின்"[34]

என்றும் வரும் ஆண்டாள் பாசுரங்களால் இனிது விளங்கும்.

பெற்றோர் தம் மகளுக்குத் தரும் சீர்வரிசை 'மணாட்டுப் புறம்' எனப்பட்டது. இதனை,

"பெருமக ளாய்க்குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமக ளைக்கண்டு கந்து
மணாட்டுப்பு றம்செய்யுங் கொல்லோ"[35]

என்னும் பாசுரத்தால் அறியலாம்.

**பாவை நோன்பு**

மார்கழித் திங்களின் மதிநிறைந்த நன்னாளின் அதிகாலையில் திருமணமாகாத மகளிர் ஒருவரையொருவர் துயில் எழுப்பிப் பொய்கைக் கரைக்குச் சென்று நீராடி, பாவை வைத்து வழிபாடு நடத்திப் பாடுவது பாவைப் பாட்டாகும். மழை பெய்து நாடு நலம்பெறவும், தமக்கு நல்ல கணவர் வாய்த்துத் திருமணம் நடைபெறவும் கன்னிப் பெண்கள் வைகறையில் நீராடி நோன்பு நோற்பது பழங்கால வழக்கமாகும். அவர்கள் நல்ல கணவரைப் பெறவேண்டிக் காமன் நோன்பு நோற்பர். மகளிர் விடியற்காலையில் நீராடித் தெருவினை வெள்ளிய நுண்மணல் கொண்டு அலங்கரித்துத் தரையை விளக்கி வட்டமான கோலமிடுவர். பிறகு சுள்ளியால் எரிமூட்டுவர். பிறகு நறுமலர்கள் தூவிக் காமனை உள்ளன்போடு வழிபடுவர். இவற்றை,

"வெள்ளை நுண் மணற்கொண்டு தெருவணிந்து
வெள்வரைப் பதன்முன்னம் துறைபடிந்து,
முள்ளுமில் லாச்சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா"[36]

என்னும் ஆண்டாள் பாசுரம் அறிவிக்கிறது, மேலும் சுவரில் காமன் ஓவியத்தை எழுதி, அவனுடைய பரிவாரங்களான சுறவ நற்கொடிகளும், துரங்கங்களும் சுவரிப் பிணாக்களும் கருப்பு வில்லும்[37] படைப்பர்.

"காயுடை நெல்லொடு கரும்பமைத்துக்
கட்டி யரிசி யவலமைத்து,

வாயுடை மறையவர் மந்திரத்தால்
மன்மதனே"[38]

என்று மன்மதனை வழிபடுவர். ஒருவேளை உணவு உண்டு வாய்வெளுத்துத் தலைசீவி முடியாமல் முப்போதும் அவன்தாள் வணங்கித் தூமலர்தூவித் தொழுவர்.

**அந்தணர்கள்**

சங்க காலம் முதற்கொண்டே அந்தணர்கள் சமுதாயத்தில் மிகச் சிறந்த நிலையில் விளங்கினர். பாண்டிய அரசர்கள் அந்தணர்களுக்காக நாட்டில் பல குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொடுக்கலாயினர். அவை அக்கிரகாரம், சதுர்வேதி மங்கலம், பிரமதேயம் முதலான பெயர்களுடன் வழங்கப் பட்டன. இவ்வாறு வழங்கப்பட்ட ஊர்கள் நீர்வளமும், நில வளமும் பொருந்தியவை. அவற்றுள் ஒன்றான தொலைவில்லி மங்கலத்தை,

"நோக்கும் பக்கமெல் லாம்க ரும்பொடு
செந்நெ லோங்குசெந் தாமரை,
வாய்க்கும் தண்பொரு நல்வ டகரை
வண்தொ லைவில்லி மங்கலம்"[39]

என்று பாடுகிறார் நம்மாழ்வார். இதனைப் போற் சிறந்த மற்றோர் ஊர் திருக்கோட்டியூர்.

திருக்கோட்டியூர் புகழ்மிக்க தலம். நற்றிணை இருபத் தோராம் பாடலைப் பாடிய புலவர் கோட்டியூர் நல்லாந்தை யார் இவ்வூரைச் சார்ந்தவரே என்று ஆய்வாளர் கருது கின்றனர்[40] இத்தலத்தில் வடமொழியிலும், தென் மொழியிலும் வல்ல புலவர்கள் வாழ்ந்ததாக அறிகின்றோம். கவிஞர் சுப்பராயர் என்னும் அந்தணர் 'திருக்கோட்டியூர் பிள்ளைத்தமிழ்' என்ற நூலையும், பெருங்கருணை சதாவ தானம் முத்தழகர் அய்யங்கார் என்னும் புலவர் 'திருக் கோட்டியூர்க் கலம்பகம்' என்னும் நூலையும் இயற்றியுள்ள னர். மேலும் பராசர பட்டர் ஆண்டாள்மீது அருளியுள்ள 'நீளாதுங்கம்' என்று தொடங்கும் வடமொழிச் சுலோகம்

(திருப்பாவைத் தனியன்) இவ்வூரில் இயற்றப் பெற்றதாகவும் அறியப் படுகிறது. இந்த அறிஞர் சௌமிய நாராயணன் மீது 'கோஷ்டீஸ்தலம்' என்ற வடமொழி நூலை இயற்றியுள்ளார் என்றும் அறிகிறோம்.

திருக்கோட்டியூர் வாழ் அந்தணர்கள் உடல், பொருள், ஆவியால் பாகவத கைங்கரியத்தை மேற்கொண்டிருப்பவர்கள். அவர்கள் பாகவதர்களின் முகமலர்ச்சிக்காக ஐந்து மாபெரும் வேள்விகளை விடாது மேற்கொள்பவர்கள். இவற்றை,

"பூதமைந்தொடு வேள்வியைந்து
புலன்களைந்து பொறிகளால்,
ஏதமொன்றுமி லாதவண்மையி
னார்கள்வாழ்திருக் கோட்டியூர்"[41]

என்று பெரியாழ்வார் குறிப்பிடுகிறார். இவ்வூர் அந்தணர்கள் எம்பெருமானின் திருக்குணங்களில் ஆழங்கால்பட்டும், அவனுக்கு விழாவெடுத்தும், இரவுபகல் எனப் பாராது ஆடியும் பாடியும் மகிழ்ந்து காலங் கழிப்பர். இதனை,

"...கூடியாடி விழாச்செய்து
திருந்துநான் மறை யோரிராப்பகல்
ஏத்திவாழ்திருக் கோட்டியூர்"[42]

என்பதனால் அறியலாம். இவ்வந்தணர்கள் குற்றமின்றிக் குணம்பெருக்கிப் பொறாமை, பகை ஆகியவை நீக்கி, வேத பாராயணம் செய்து தூய வாழ்க்கை வாழ்ந்தவர்கள். அவர்கள் நாள்தோறும் விருந்தோம்பி வருவிருந்தும் பார்த்திருப்பர். "நாவ காரியம் சொல்லிலாதவர் நாடொறும் விருந்தோம்புவார்"[43] என்பர் பெரியாழ்வார். பிறிதோரிடத்திலும் "மறைப் பெருந் தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார்"[44] என்று கூறுவர்.

மறையவர் வாழும் ஊர்களில் வேத முழக்கமும், விழா முழக்கமும் மிகுந்திருந்தன. இதனை,

"மவத வொலியும் விழா வொலியும்,
பிள்ளைக் குழாவிளை யாட்டொலியும் அறாத்
திருப்பேரை"[45]

என்றும்,

"ஓதக் கடலொளி போல எங்கும்
எழுந்தநல் வேதத் தொலிநின் றோங்கு
தென்திருப் பேரை"[46]

என்றும் நம்மாழ்வார் குறிப்பிடுகின்றார். இவ்வாறு பெருமை பெற்ற அந்தணர்கள் 'வையத் தேவர்'[47] என்று குறிக்கப் படுவர். இவர்கள் வானத்திலுள்ள தேவர்களுக்கு ஒப்பானவர் ஆவர்.[48] இத்தகைய சிறப்பினைப் பெற்ற அந்தணர்களுக்குத் தானமளிப்பது அரசனின் கடமையாகக் கருதப்பட்டது. "பிராமணர்களுக்குத் தானம் செய்ததைக் காப்பதைக் காட்டிலும், புண்ணியத்திற்குக் காரணமானது வேறெதுவும் இப்பூமியில் இல்லை. அதை அபகரிப்பதைக் காட்டிலும் பாவத்திற்குக் காரணமானது வேறெதுவும் இப்பூமியில் இல்லை" என்று சீவரமங்கலத்துச் செப்பேடுகள் கூறுகின்றன.[49] மன்னர்கள் அந்த ஊர்களைப் போற்றியும், குருக்களைக் கொண்டாடியும் வாழ்ந்ததைச் சீவரமங்கலத்துச் செப்பேடுகள்,

"மநுதர்சித மார்க்கத்தினால் குருசரிதம் கொண்டாடி"[50] என்று குறிக்கின்றது.

ஒரு பொற்காசுக்கு ஒரு பிடிநெல் விற்ற பஞ்ச காலத்திலும் இல்லை என்று கூறாமல் சோறளித்துப் புகழ்பெற்ற வள்ளல்கள் நிறைந்த ஊர் திருக்கோட்டியூர். இதனை,

"காசின்வாய்க்கரம் விற்கிலும்கர
வாதுமாற்றிலி சோறிட்டு,
தேசவார்த்தைப டைக்கும்வண்கையி
னார்கள்வாழ்திருக் கோட்டியூர்"[51]

என்று புகழ்கிறார் பெரியாழ்வார்.

ஆழ்வார் காலத்துத் திருக்கோட்டியூரில் வாழ்ந்த மக்கள் வற்கட காலத்திலும் பொருள்களை மறைத்திடாது கைம்மாறு கருதாது உணவளித்துப் புகழை ஈட்டியவர்கள். "அக் காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது"[52] என்று இறையனார் அகப்பொருள் உரையும் ஒரு பஞ்சத்தைப் பற்றிக் கூறுவது இங்குக் கருதத்தக்கது.

நாட்டில் பஞ்சத்தைத் தீர்க்கச் செல்வர்கள் ஏழைகளுக்குச் சோறும், ஆடையும் தானமாகக் கொடுத்தவர். தண்ணீர்ப் பந்தல் அமைத்தனர். இதனை,

"அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும்
எம்பெருமான்"[53]

என்னும் திருப்பாவைப் பாசுரத்தினால் அறியலாம்.

**அரசர்கள்**

அரசர்கள் இறைவன் அமிசம் உடையவர்கள் என்றும், தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் என்றும் கருதப்பட்டனர். திருக்குறள்,

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்"[54]

என்று கூறுகிறது. இக்கருத்து நன்கு வளர்ச்சியுற்றுக் காத்தற் கடவுளாகிய திருமாலுடன் ஒப்பிட்டுப் பேசும் மரபு ஆழ்வார்கள் காலத்தில் வேரூன்றத் தலைப்பட்டது.

"திருவுடை மன்னரைக் காணில்
'திருமாலைக் கண்டேனே' என்னும்"[55]

என்று நம்மாழ்வார் அருளிச் செய்கின்றார். உலகாளும் மன்னவன் திருமாலின் பிரதிநிதி என்ற கருத்து இதனால் வலிவு பெறுகிறது. கோயில்களைக் கட்டுவதும், திருப்பணிகள் செய்தலும் இந்த நம்பிக்கையின் இயற்கையான விளைவுகளாகும். எனவே சமயத் தலைவர்கள் இவ்வாறு கோயில் திருப்

பணி செய்யும் அரசர்களைத் தத்தம் பக்திப் பாடல்களில் ஆங்காங்குக் குறிப்பிட்டுப் புகழ்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. இத்தகைய திருப்பணிகள் செய்த பாண்டியன் ஒருவனைப் பெரியாழ்வார்,

"கொன்னவில் கூர்வேல் கோனெடு
மாறன்தென் கூடற்கோன்
தென்னன்"[56]

என்று புகழ்ந்து பேசுகிறார்.

சமயத் தலைவர்களுடைய செல்வாக்கு அரசியலில் நாளடைவில் பெருகலாயிற்று. சமயத் தலைவர்கள் அரசனுக்குக் குருவாகும் தகுதியைப் பெற்றனர்.

"குற்றமின்றிக் குணம்பெருக்கிக்
குருக்களுக்கனு கூலராய்,
செற்றமொன்றுமி லாதவன்கையி
னார்கள்வாழ்திருக் கோட்டியூர்[57]"

என்னும் பெரியாழ்வார் பாசுரம் இதனைத் தெளிவாக்குகிறது. பாண்டிய மன்னன் குருசரிதம் கொண்டாடினான் என்று சீவரமங்கலச் செப்பேடுகள் தெரிவிக்கின்றன. பெரியாழ்வாரைப் பாண்டியன் தன் குருவாக ஏற்றுச் சிறப்பளித்தான் என்பதைக் குருபரம்பரைக் கதைகளும் கூறுகின்றன.

பக்தி இயக்கத்தின் காரணமாக ஏற்பட்ட சமய மறுமலர்ச்சியினால் அரசர்களும், அந்தணர்களும், உயர்குடி மக்களும் திருமால் வழிபாட்டையும், சிவ வழிபாட்டையும் மேற்கொள்ளலாயினர். பண்டைக் காலத்திலிருந்து தொடர்ந்து வருகின்ற இனக்குழு வழிபாட்டு முறைகள் சமுதாயத்தில் இருந்து முற்றும் மறைந்து விடவில்லை.

தலைவி ஒருத்தி திருமாலாகிய தலைவனிடம் கொண்ட காதல் நோய்க்குரிய மருந்தினைப் பூசாரியை அழைத்துக் கேட்கின்றனர். தாயர் கட்டுவிச்சியை அழைத்துக் குறி கேட்

கின்றனர். தோழி அவர்களை மறுத்து இறைவன் திருநாமங்களை இடையறாது கூறுவதும், அடியார் பாத தூளியுமே அவள் கொண்ட நோய்க்கு மருந்தாகும் என்கிறாள்.

"...இக்கட்டு விச்சிசொற் கொண்டு, நீர்
எதுவானும் செய்தங்கோர் கள்ளும் இறைச்சியும்
தூவேல்மின்"[58]

"மருந்தாகும் என்றங்கோர் மாய வலவைசொற்
கொண்டு, நீர்
கருஞ்சோறும் மற்றைச் செஞ்சோறும் களனிழைத்
தென்பயன்?"[59]

என்னும் நம்மாழ்வார் பாசுரங்களின் வாயிலாகச் சிறு தேவதைகளுக்குப் பலியிட்டுக் கூத்தாடுவது அறியப்படுகிறது.

"அணங்குக் கருமருந் தென்றங்கோர் ஆடும்கள்ளும்
பராய்,
துணங்கை யெறிந்துநுந் தோள்குலைக் கப்படும்
அன்னைமீர்,
உணங்கல் கெடக்கழு தையுத டாட்டம்கண்
டென்பயன்?"[60]

என்பதிலிருந்து ஆட்டிறைச்சியும், கள்ளும் படைத்துத் துணங்கைக் கூத்தாடும் பண்டைய வழக்கத்தை அறிகிறோம்.

இறந்த முன்னோர்களுக்குப் பிண்டச்சோறும், பேய்களுக்கு நீர்ச்சோறும் அளிக்கும் வழக்கத்தை,

"பிண்டத் திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும்,
உண்டற்கு வேண்டிநீ யோடித் திரியாதே"[61]

என்னும் பெரியாழ்வார் பாசுரத்தினின்றும் அறியலாம். பக்தி இயக்கம் தோன்றுமுன்பே வழக்கில் இருந்துவந்த தொன்மையான வழிபாட்டு முறைகள் பக்தி இயக்கத்திற்குப் பின்னரும் சிற்சில இடங்களில் மறையாமல் பழைய பண்பாட்டின் நிலைக்களனாய் விளங்குவதைக் காணலாம்.

**வணிகர்**

அந்தணர், அரசர்க்கு அடுத்து வணிகர் பற்றியும் பெரியாழ்வார் ஓரிரு இடங்களில் குறிப்பிட்டுள்ளார். சமுதாயத்தில் வணிகர்க்குத் தனிச்சிறப்பிடம் இருந்திருக்க வேண்டும். ஆடைகள், அணிகலன்கள், தானியங்கள் முதலியன பற்றிக் குறிப்புகள் வருதலால் இவற்றை வாணிபம் செய்த பெரு வணிகர்கள் அக்காலத்தில் சிறப்புற்றிருந்திருக்க வேண்டும்.

"இல்லம் புகுந்தென் மகளைக் கூவிக்
கையில் வளையைக் கழற்றிக் கொண்டு,
கொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற
அங்கொருத்திக்கவ் வளைகொடுத்து
நல்லன நாவற் பழங்கள் கொண்டு
நானல்லேனென்று சிரிக்கின்றானே"[62]

என்னும் பாசுரம் வளை கொடுத்துப் பழங்கள் வாங்கிய பண்டமாற்று வாணிபத்தைக் குறிப்பிடக் காண்கிறோம்.

'வாணிபம்' என்ற தொடரை நேரடியாக ஒரு பாசுரத்தில் பெரியாழ்வார் பயன்படுத்துகின்றார். அது,

"கைத்தலத் துள்ள மாடழியக்
கண்ணாலங்கள் செய்து, இவளை
வைத்து வைத்துக் கொண்டென்ன
வாணிபம் நம்மை வடுப்படுத்தும்"[63]

என்பதனால் அறியப்படும்.

"காசின் வாய்க்கரம் விற்கினும்கர
வாதுமாற்றிலி சோறிட்டு,
தேசவார்த்தைப டைக்கும்வண்கையி
னார்கள்வாழ்திருக் கோட்டியூர்"[64]

என்னும் பாசுரம் பொருள்விற்றுச் சோறிடும் வண்மையை உணர்த்துகிறது.

**வேளாளர்**

இறுதியாக, வேளாளரும் அன்று சிறந்து விளங்கினர். அக் காலத்தில் உழவு மேலான தொழிலாகப் பெரிதும் போற்றப் பட்டது. கிராமங்களில் நிலக்கிழார்கள் தவிரக் குடியானவர் களும் இருந்தார்கள். பயிரிட்டு விளைந்ததில் ஒரு பகுதியைக் கூலியாகப் பெற்ற இவர்களில் சிலர் அடிமையாக இருந்திருக்க லாம் என்று கருதுவதற்குப் பெரியாழ்வார் பாசுரங்கள் இடம் தருகின்றன.

"எந்நா ளெம்பெரு மானுன்ற னக்கடி
யோமென் றெழுத்துப்பட்ட
அந்நாளே"[65]

என்பதிலிருந்து அடிமைச்சீட்டு எழுதும் வழக்கம் இருந்தது புலனாகிறது. பெரியாழ்வார் தம்மைக் கடவுளின் அடிமை யாகப் பாவித்து,

"குடிமை கொள்வதற் கையுற வேண்டா
கூறை சோறிவை வேண்டுவ தில்லை"[66]

என்று குறிப்பிடுகிறார். எனவே உணவும் உடையும் பெற்றுக் கொண்டு தொண்டுசெய்யும் அடிமைப் பணியாளர்கள் இருந்த னர் என்றும், அடிமைத்தொழில் செய்வதற்குச் சீட்டு எழுதுவதி லிருந்து ஒப்பந்தம் குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே என்றும் அறிய முடிகிறது. பெரிய புராணத்தில் காணப்படும் சுந்தரர் வரலாற்றை நோக்க அடிமைகள் இருந்தனர் என்பது உறுதி ஆகிறது. அடிமைச்சீட்டு ஓலையிலெழுதப்பட்டு 'அடிமை முறி' என்று அழைக்கப்பட்டதென்பதும் தெளிவாகிறது.

**ஆடையும் அணியும்**

ஆடையும் அணியும் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்தில் சிறப்புற்றிருப்பன வாகும். 'ஆடையில்லாதவன் அரைமனிதன்' என்பது நம்நாட்டுப் பழமொழி. ஆடை நெய்யும் தொழில் பன்னெடுங் காலமாகவே நம்நாட்டில் நடந்து வருகிறது. பட்டு நூலாலும், பருத்தி நூலாலும் பல்வகைப்பட்ட ஆடைநெய்யும் தொழிலாளர் பழந்தமிழ்

நாட்டில் சிறந்து விளங்கினர் என்பதைச் சிலப்பதிகாரம் முதலிய நூல்களால் அறியலாம்.

கொரநாடு என்பது தமிழகத்திலுள்ள ஓர் ஊரின் பெயராகும். அங்கு நெய்யப்படும் புடவை, 'கொரநாட்டுப் புடவை' என்று வழங்கப்படுகிறது. மயிலாடுதுறை என்னும் மாயூரத்திற்கு அருகே கொரநாடு உள்ளது. கூறைநாடு என்னும் பெயரே 'கொரநாடு' எனமருவி வழங்குகின்றது. கூறை என்பது ஆடையைக் குறிக்கும். ஆனால் முற்காலத்தில் பாட்டிலும் உரையிலும் பயின்ற சொல்லாக அது விளங்குகிறது. பெரியாழ்வார் தம் திருமொழியில்,

"கூறை சோறிவை வேண்டுவ தில்லை"[67]

என்று குறிக்கிறார். சுந்தரரும் தம் தேவாரத்தில்,

"இம்மையே தரும்சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் களையலாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே"[68]

என்கிறார். இறைவனை உள்ளன்போடு வழிபட்டால் இம்மையில் உண்ண உணவும், உடுக்க உடையும் கிடைக்கும் என்பது இப்பாடற் கருத்தாகும்.

இக்காலத்தில் பொன்னாடை போர்த்தும் பழக்கம் தலையெடுத்து வருதலைக் காணலாம். திருமாலுக்குரியது பொன்னாடை.

"பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்க ணெடியோன்"[69]

என்று சிலப்பதிகாரம் திருமாலைப் போற்றுகிறது. பொன் ஆடையைப் பீதாம்பரம் என்றும் கூறுவதுண்டு. பெரியாழ்வாரும் தம் பாசுரங்களில்,

"பீதகச் சிற்றாடை யோடும்"[70]

"பூம்பட்டுக் கொண்ட அரட்டன்"[71]

என்று அவ்வாடைகளைக் குறித்துச் சொல்லக் காணலாம். திருமங்கை யாழ்வாரும் "போர்ப்பதோர் பொற்படம் தந்து போனான்"[72] என்றும் "பட்டுடுக்கும்"[73] என்றும் அவ்வாடைகளைக் குறிப்பர்.

அக்காலத்தில் குழந்தைகளின் நெற்றியில் சுட்டியும், பிறையும் அணிவித்தனர். மூவடம் கோத்த பொன் சங்கிலியும் அணிந்திருந்தனர். ஐம்படைத் தாலியும், புலிப்பல் தாலியும் அவர்கள் கழுத்திற்கு அணி செய்தன. குழந்தைகளின் விரல்களில் சுறாமீனைப் போன்றும், இடபத்தைப் போன்றும் இலச்சினைகள் பொருத்தப்பட்ட மோதிரங்களைப் பூட்டினார்கள். மணிகள் உள்ளிட்ட சதங்கைகள், பொன் இரட்டைச் சரிகள் போன்ற அணிகளையும் அணிந்திருந்தனர். மணியும் பவளமும் கோத்த அரைஞாணை இடையில் அணிந்திருந்தனர்.

மகளிரும் சிறுமியரும் 'காறை' என்றொரு அணியைக் கழுத்தில் அணியலாயினர். இதனை

"மின்னில் பொலிந்த தோர்கார் முகில்போலக்
கழுத்தினிற் காறையொடும்"[74]

என்ற பாசுரத்தால் அறியலாம்.

குழந்தைக் கண்ணனுக்கு அணிவித்த அணிகள் பலவாகும். நெற்றியில் சுட்டி அணிவித்திருக்கிறாள் தாய் யசோதை. நெற்றியில் புரளும் இதனை,

"உச்சி மணிச்சுட்டி"[75]

"தன்முகத் துச்சுட்டி தூங்க"[76]

என்ற பாசுரங்களால் அருளிச்செய்கிறார்.

காதில் பொற்றோடும், மகரக்குழையும், கனகக் கடிப்பும், வைரக் கடிப்பும் அணிந்ததனை.

"என்மணி வண்ணன் இலங்குபொற் றோட்டின்
மேல்"[77]

"வண்ண மெழில் கொள் மகரக் குழையிவை"[78]

"கண்ணுக்கு நன்று மழகு முடைய
கன்கக் கடிப்பு மிவையா"[79]

"வண நன்றுடைய வயிரக் கடிப்பிட்டு
வார்காது தாழப் பெருக்கி"[80]

எனப் பெரியாழ்வார் அடுக்கிக் கூறிச் செல்கிறார்.

மாயோன் மார்பினில் பொன்னாரமும், முத்தாரமும் ஒளி வீசுவதனை,

"ஓதக் கடலி னொளிமுத்தி னாரமும்"[81]

என்பதனால் அறியலாம்.

கழுத்தினில் காறையொடு 'தொடர்' என்னும் அணிகலனையும் அணிந்திருந்ததனை,

"கழுத்தில் தொடர் கட்டி"[82]

என்ற அடிகளில் காட்டுகிறார். மேலும் கண்ணபிரான் ஆமைத்தாலியும், ஐம் படைத்தாலியும், கொழுந்தும் கழுத்தினில் அணிந்திருக்கிறான் என்பதை,

"...ஆமைத் தாலிபூண்ட
அனந்த சயனன்"[83]

"அழகிய ஐம்படையும் ஆரமுங் கொண்டு"[84]

"தாலிக்கொ ழுந்தைத் தடங்கழுத் தில்பூண்டு"[85]

என்ற பாசுரங்களால் புலப்படுத்துகின்றார். கண்ணன் கையில் வரிவளை ஒலிக்கின்றது. காலில் பொன்முகக் கிண்கிணியும், மாணிக்கக் கிண்கிணியும், கழலும் ஒலிக்கின்றன இதனை,

"அங்கைச் சரிவளை"[86]

"பொன்முகக் கிண்கிணி யார்ப்ப"[87]

"மாணிக்கக் கிண்கிணி யார்ப்ப"[88]

"கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப"[89]

என்ற பாசுரங்களால் அறியலாம்.

அரைத்தொடரும், காலில் வெள்ளித் தளையும் அணிந்திருப்பதனை,

"அங்கைச் சரிவளையும் நாணு மரைத்தொடரும்"[90]

"இணைக்காலில் வெள்ளித் தளைநின் றிலங்கும்
கணைக்கால்"[91]

என்ற பாசுரங்களால் புலப்படுத்துகிறார்.

**இசைக் கலை**

பழந்தமிழ் மக்கள் இசைக் கலையையும் அதன் பெருமைகளையும் நன்கு உணர்ந்திருந்தனர். இசையின் அருமையையும் சிறப்பையும் அறிந்தே தமிழர் இசைத்தமிழை முத்தமிழ் இடையே வைத்தனர். தமிழ் இலக்கிய நூல்கள் பல இசைத் தமிழிலேயே உள்ளன. இசையானது கல்மனத்தையும் கரைந்துருகச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது. அன்பைப் பெருக்கி ஆருயிரை வளர்ப்பது இசை, இசையைக் கேட்டு இன்புறாத உயிர்கள் இல்லை என்றே கூறலாம். விலங்குகள், பறவைகள், செடிகள் முதலானவை கூட இசையில் இன்பமடைகின்றன. பால் வேண்டி அழும் இளங்குழந்தையும் இசைவயப்பட்டுப் பாலையும் பசியையும் மறந்து மகிழ்ச்சி அடைகின்றது. இசைக்கு வயப்படாதவர் அன்பற்றவர் என்றே கூறலாம்.

தமிழர்கள் இசைக்கலையில் வல்லவராகத் திகழ்ந்தனர். ஏறக்குறைய இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முன் தோன்றிய தொல்காப்பியத்தில் இசையைப் பற்றிய குறிப்புகளும், இசை பாடுதலையே தொழிலாகக் கொண்ட பாணர் முதலானவர்களைப் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. அந்நூலில் நால்வகை நிலங்கட்கும் வெவ்வேறு வகையான யாழ் அல்லது பண் உண்டு என்று குறிப்பிடப் படுவதால் அக்காலத்தில் தமிழகம் முழுவதும் இசைக்கலை பரவியிருந்த

தென்பதும் மக்களனைவரும் இசையுணர்வு உடையவராய்த் திகழ்ந்தனர் என்பதும் பெறப்படும்.

தெய்வப்புலவர் திருவள்ளுவர் குழல், யாழ், பறை என்னும் இசைக்கருவிகளைப் பற்றியும், பண்களைப் பற்றியும் திருக் குறளில் கூறியுள்ளார். அக்காலத்தில் பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டு யாழ் என நால்வகை யாழ்கள் இருந்தன. தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி; கஞ்சக் கருவி என நால்வகைக் கருவிகள் இருந்தன.

கொடுமையான பண்புடைய ஆறலைக்கள்வர்கள் கூடப் பாலைப் பண்ணிற்கு உருகிக் குழைந்து நிற்பர். அவர்கள் கையில் உள்ள படைகள் நழுவி, மனத்தில் உள்ள கொடுமையும் நழுவி விழுகின்றன என்கிறார் ஒரு புலவர் :

> ''ஆறலை கள்வர் படைவிட வருளின்
> மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை''[92]

என்னும் அடிகள் இதனை உணர்த்தும். பாலைப்பண்ணின் ஆற்றலை இப்பாடற்பகுதி இனிதியம்புகிறது.

சங்கச் செய்யுளாகிய கலித்தொகையில் மதங்கொண்டு திரிந்தயானை பாணன் மீட்டிய யாழிசை கேட்டு மதமடங்கி அசைவற்று நின்றது என்பதை,

> ''காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
> யாழ்வரைத் தங்கி யாங்கு''[93]

என்னும் உவமை வழி அறிவுறுத்துகிறார் ஆசிரியர்.

சில மலர்கள் தம்மீது வண்டுகள் தங்கி இசைபாட மலரும் எனும் உண்மையை

> ''இலையி லஞ்சினை யினவண் டார்ப்ப
> முலையேர் மென்முகை யவிழ்ந்த''[94]

என்னும் குறுந்தொகை அடிகள் நினைவூட்டுகின்றன.

ஆழ்வார் காலத்தில் இசைக் கலை உச்ச நிலை அடைந்து சிறப்புற்றது எனின் மிகையாகாது. இறைவனைப் போற்றிப்

பாடிய சிவனடியார்களும், திருமாலடியார்களும் இக்காலத்தில் பண்ணோடு கூடிய இனிய பனுவல்களையே இயற்றினர். 'நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பிய' திருஞானசம்பந்தர் தொடங்கி நாலாயிரத்தைத் தொகுத்தளித்த நாதமுனிகள் வரை இறையுணர்வு இசைவெள்ளமாகவே பரவிப் பெருக் கெடுத்து ஓடியது. ஆழ்வார்களின் பண்ணோடு கூடிய பாசுரங் கள் தமிழர் இசைக்கலை மரபினை மேலும் வளர்த்துச் சிறப் படைந்தன.

வண்டின் இசையால் கரும்பு கண் (கணுக்கள்) வளரும் என்னும் கருத்தைத் திருமங்கையாழ்வார் தாம் அருளிச்செய்த பெரிய திருமொழியில்,

"கோங்கரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்
குழாவரிவண் டிசைபாடும் பாடல் கேட்டு,
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவ லூர்"[95]

என்று குறிப்பிடுகிறார்.

திருமணக் காலங்களில் இசைக் கருவிகள் ஒலித்தமையை "மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத"[96] என்னும் ஆண்டாள் பாசுரத்தால் அறிகிறோம்.

கண்ணன் குழலோசையில் பசுக்களும், மான்களும் கட்டுண்ட தன்மையைப் பெரியாழ்வார் பல பாசுரங்களில் பாடியுள்ளார்.

"சிறுவி ரல்கள் தடவிப்பரி மாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்பக்
குறுவெ யர்ப்புரு வம்கூட லிப்பக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்

கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்
கவிழ்ந்திறங் கிச்செவி யாட்டகில் லாவே''[97]

என்பது பெரியாழ்வாரின் அருளிச்செயல்களுள் ஒன்று.

''ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையில் பற்றுமிளங் கன்றினமும்
தானுணர்வு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாம் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய''[98]

என்றும்,

''ஆடுமயில் இனங்களுமங் கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி இசைநிறைந்த உள்ளமொடு புள்ளினமும்
மாடுபடிந்து உணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகும்
கூடியவன் கோவலரும் குறைவினையின் துறைநின்றார்''[99]

என்றும் கூறி முல்லைநிலத்தின் இயற்கை வளத்தைச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் பாடுகின்றார்.

பெரியாழ்வார் காலத்தில் இசைக்கலை பெரிதும் வளர்ந்திருந்தது. அவர் பாசுரங்களில் குழல், தண்ணுமை, பறை, இன்னிசை ஆகியன பற்றிய குறிப்புகள் வருகின்றன.

''ஏரா ரின்னிசை மாலை வல்லார்''[100]

''வேயின் குழலூ தி வித்தக னாய்நின்ற
ஆயன்''[101]

''கோவல வாய்க்குழ லூதி யூதி''[102]

''திங்குழல் வாய்மடுத் தூதி யூதி''[103]

''தண்ணுமை யெக்கம்மத் தளி தாழ்பீலி
குழல்களும் கீதமு மாகி யெங்கும்''[104]

"பல்பறை கொட்ட"[105]

என்னும் அவரது பாசுரங்களால் இசை, கருவிகள் பற்றி அறிகிறோம்.

குரவைக்கூத்து என்பது ஒரு பழமையான ஆடல் என்பதைப் பண்டைய இலக்கியங்களின் வாயிலாக உணரலாம். முல்லைநில மக்களாகிய ஆயரிடையே இது பெரிதும் சிறப்புற்றுத் திகழ்ந்தது. கைகோத்து ஆடும் கூத்தைக் குரவைக் கூத்து என்பர். நப்பின்னையுடனும் பலராமனுடனும் கண்ணன் குரவைக் கூத்து ஆடியதாகக் கூறப்படுகிறது.

கண்ணன் கோபியர்களுடன் 'ராசக்ரீடை' என்ற குரவைக் கூத்து நடத்தியதாக வடமொழிப் புராணங்கள் கூறுகின்றன. ஒவ்வோர் ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகத் தோன்றிநின்று கைகோத்து ஆடிய குரவைக் கூத்தே 'ராசக்ரீடை' எனப்படும்.

சங்ககாலத்துப் பொதுமக்கள் வாழ்க்கையில் குரவைக் கூத்திற்குந் தனிச் சிறப்பிருந்தது. பண்டைய நூல்களில் மூன்று கூத்துகள் காணப்படுகின்றன. அவை குடக்கூத்து, பேடு, மல்லாடல் என்பன. குடக்கூத்தென்பது,

"வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணில மளந்தோ னாடிய குடமும்"[106]

என்னும் சிலப்பதிகார அடிகளால் அறியப்படும். கண்ணன் ஆடிய இக்கூத்தினையே,

"குடங்க ளெடுத்தேற விட்டுக்
கூத்தாட வல்லவெங் கோவே"[107]

"குடமாடு கூத்தா"[108]

"கூத்துவந் தாடி"[109]

"கோத்துக் குரவை பிணைந்து"[110]

"மன்றில் குரவை பிணைந்த மால்"[111]

"நீரார் கமலம்போல் செங்கண்மா லென்றொருவன்
பாரோர் கவெல்லாம் மகிழப் பறைகறங்கச்
சீரார் குடமிரண் டேந்திச் செழுந்தெருவே
ஆரா ரெனச்சொல்லி ஆடும் அதுகண்டு"[112]

என்று ஆழ்வார்கள் குறிக்கலாயினர். இவற்றால் கூத்தர்கள் குடங்களிரண்டை யேந்தித் தெருவில் ஆடுவதுண்டென்பதும், அத்தகைய விளையாட்டையே கண்ணன் ஆடினன் என்பதும் அறியப்படும்.

மேலும் கண்ணபிரான் ஆடிய அல்லியத் தொகுதி என்னும் மற்றொரு கூத்தும் உண்டு. இதனை,

"கஞ்சன் வஞ்சங் கடத்தற் காக
அஞ்சன வண்ண னாடிய வாடலுள்
அல்லியத் தொகுதியும்"[113]

என்னும் இளங்கோவடிகளின் கூற்றால் அறியலாம். 'கஞ்சன் வஞ்சத்தின் வந்த யானையின் கோட்டை ஒசித்தற்கு நின்றாடிய அல்லியத் தொகுதி என்னும் கூத்தும்' என்று இதற்கு விளக்கம் தருகிறார் அடியார்க்குநல்லார். தன்னைக் கொல்ல வந்த 'குவலயாபீடம்' என்னும் யானையின் கொம்பை முறித்தபோது கண்ணன் நிகழ்த்தியது இக்கூத்து என்பர். இத்தகைய வரலாறுகட்கெல்லாம் வடநூல்களில் ஆதாரங் காணப்படாமை அறியத்தகும் என்கிறார் மு. இராகவையங்கார்.[114]

அக்காலத்து மகளிர் சிற்றிலிழைத்தலும், சிறுசோறு சமைத்தலும் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

"பொங்கு வெண்மணற் கொண்டு
சிற்றிலும் முற்றத் திழைக்கலுறில்"[115]

"செப்போது மென்முலை யார்கள்
சிறுசோறு மில்லும் சிதைத்திட்டு"[116]

"முற்றிலும் தூதையும் முன்கைம்மேல் பூவையும்
சிற்றி லிழைத்துத் திரிதரு வோர்களை"[117]

"சிற்றில் சிதைத்தெங்கும் தீமை செய்து திரியாமே"[118]

என்னும் பெரியாழ்வார் பாசுரங்கள் இதனைத் தெளிவு படுத்தும்.

**விழாக்கள்**

பக்தியியக்கம் சிறப்புற்றிருந்த பெரியாழ்வார் காலத்தில் மறையவர் நான்மறையோதும் முழக்கத்திற்கும், நாள்தோறும் நடைபெறும் விழாக்கட்கும், திங்கள்தோறும் நடைபெறும் விழாக்கட்கும், ஆண்டு தோறும் நடைபெறும் விழாக்கட்கும் குறைவில்லை. உண்மையான கடவுள் பக்தியும் வழிபாடும் சிறந்திருந்தது. இதனை,

"எண்ணெய் சுண்ண மெதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்தற ளாயிற்றே"[119]
"ஓடு வார்விழு வாருகந் தாலிப்பார்"[120]
"உறியை முற்றத் துருட்டிநின் றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்
செறிமென் கூந்தலவிழத் திளைத்தெங்கும்
அறிவழிந்தனர்"[121]

என்பனவற்றால் அறியலாம்.

ஓணம் என்பது நட்சத்திரங்களில் இருபத்திரண்டாவதாக வருவது. திருவாதிரை, திருவோணம் என நட்சத்திரங்களுக்கு அடைமொழி கொடுப்பதும் உண்டு. தமிழ், மலையாள இலக்கியங்களில் இவ்வோணத்தைப் பற்றிய சான்றுகள் ஆங்காங்குக் காணக் கிடக்கின்றன.

திருமால் உலகத்தே பிறந்த திருவோணமாகிய நன்னாளில் மறவர் களிறுகளை ஒன்றோடொன்று போரிடச் செய்து மகிழ, அதனைக் காணவந்தோர் கள்ளை மிகுதியாகப் பருகி மயங்கி யாண்டும் திரிந்தனர் என்பதை,

"கணங்கொ ளவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய வோண நன்னாட்
கோணந் தின்ற வடுவாழ் முகத்த
சாணந் தின்ற சமந்தாங்கு தடக்கை
மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்"[122]

என்னும் மதுரைக்காஞ்சிப் பகுதியால் அறியலாம். சிலப்பதி காரத்தில் காணப்படும் இந்திரவிழா போலவே ஓணமும் ஒரு பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டது எனலாம்.

இன்றும் சேர நாட்டில் இவ்வோணவிழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. "திருமால் மூவடி மண் இரந்து மாவலியை வென்றபோது அவன் ஒவ்வோர் ஆண்டி லும் திருவோண நட்சத்திரத்தன்று ஒரு நாளாவது கேரள நாட்டையும் மக்களையும் காணவேண்டும் என்று வேண்டிக் கொண்டதை யொட்டி அவன் மக்களைக் காணவரும் நாளாக வும் இவ்விழா நடைபெறுகிறது" என்று கூறுவர்.[123] இன்றைய கேரளப் பகுதிகளில் இவ்விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டு வருகிறது. திருமால் பள்ளிகொண்டுள்ள திருவனந்த புரத்தில் இதனைப் பத்மநாப சுவாமியின் நாளாகவே கருதி ஓணக் கொடியுடன் பலரும் கோவிலுக்குச் செல்வர்.

கோயில் விழாக்கள் மக்கள் கவனத்தை ஈர்த்தன. மக்கள் திருக்கோயில்களுக்குத் தீர்த்த யாத்திரை செல்வது பெருகியது. அக்காலத்தில் திருமாலிருஞ்சோலை புகழ்பெற்ற தீர்த்த யாத் திரைத் தலமாக விளங்கியது.

"அளித்தெங்கும் நாடு நகரமும்
தம்முடைத் தீவினை தீர்க்கலுற்றுத்
தெளித்து வலஞ்செய்யும் தீர்த்த
முடைத்திரு மாலிருஞ் சோலை"[124]
"தென்கொள் திசைக்குத் திலதமாய்
நின்ற திருமா லிருஞ் சோலை"[125]

என்னும் அருளிச்செயல்களே இதனை வலியுறுத்தும்.

இத்தகைய தீர்த்த யாத்திரைகள் மக்கள் ஒருவரோடொரு வர் கலந்து உறவாடுதற்கும் கலாசாரம் பரவுதற்கும் உதவின கங்கையாறு புனிதமானதாகக் கருதப்பட்டது. கங்கைத் கரை யிலுள்ள கண்டம் என்னும் திருநகரைப் பெரியாழ்வார்,

"கங்கை கங்கையென்ற வாசகத் தாலே
கடுவினை களைந்திட கிற்கும்"[126]

என்று பாடுகிறார்.

"தென்னாடும் வடநாடும் தொழநின்ற
திருவரங்கம்"[127]

என்று திருவரங்கம் பெரிதும் போற்றப்படுகிறது.

**பழக்க வழக்கங்கள்**

பெரியாழ்வார் பாசுரங்களில் தமிழ்நாட்டுப் பழக்க வழக்கங்கள் சிலவற்றைக் காணலாம். பிறந்த குழந்தையை நீராட்டிச் சிறு மஞ்சளால் நாக்கு வழித்தலை,

"கையும் காலும் நிமிர்த்துக் கடார நீர்
பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித் தாளுக்கு"[128]

என்னும் பாசுரத்தால் அறிகிறோம். குழந்தையைத் தொட்டி லிட்டுத் தாலாட்டுதலை,

"மாணிக்கங் கட்டி வயிர மிடைகட்டி,
ஆணிப்பொன் னாற்செய்த வண்ணச் சிறுத்
தொட்டில்,
பேணி யுனக்குப் பிரமன் விடுதந்தான்,
மாணிக் குறளனே தாலேலோ,
வைய மளந்தானே தாலேலோ"[129]

முதலான பாசுரங்கள் உணர்த்துகின்றன.

அக்காலத்துத் திருமணத்தில் அரசாணியை வழிபடும் முறை இருந்தது.

"அமரர் பதியுடைத் தேவி
அரசாணி யைவழி பட்டுத்
துமில மெழப்பறை கொட்டித்
தோரணம் நாட்டிடும்"[130]

என்னும் பாசுரம் இதனை அறிவிக்கிறது.

"உன் னைக்காது குத்த
ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார்"[131]

என்பதால் அக்காலத்தில் காதுகுத்தும் பழக்கம் இருந்ததை அறிகிறோம்.

"... திரியை
எரியாமே காதுக் கிடுவன்"[132]

என்பதால் காது குத்தற்குக் காதில் திரியை எரியாமலிடுவது வழக்கமாயிருப்பது பெறப்படுகிறது.

'கனகக் கடிப்பு',[133] 'வைரக் கடிப்பு'[134] என்னும் தொடர்களால் பொற்கடுக்கன், வைரக் கடுக்கன் முதலியன அக்காலத்தில் அணியப்பட்டது என்று தெரிகிறது.

"எண்ணெய் புளிப்பழங் கொண்டிங்
கெத்தனை போதுமி ருந்தேன்
நண்ண லரிய பிரானே!
நாரணா! நீராட வாராய்"[135]

"மஞ்சளும் செங்கழு நீரின்
வாசிகை யும்நறு சாந்தும்,
அஞ்சன மும்கொண்டு வைத்தேன்"[136]

என்பவற்றால் நீராடுதற்கு எண்ணெய், புளிப்பழம், மஞ்சள், செங்கழுநீர் முதலியவை பயன்பட்டமையைக் குறித்துள்ளார் ஆழ்வார். வாசச் சாந்தும் மையும் நீராடிய பின் அணியும் பொருள்களாகும்.

குழல்வாரக் காக்கையை அழைத்தல், கோல் கொண்டுவா எனல் முதலிய பழக்கங்களையும் பாசுரங்கள் காட்டுகின்றன.

"என்னையு மெங்கள் குடிமுழு தாட்கொண்ட,
மன்னனை வந்துகுழல் வாராய்அக் காக்காய்"[137]

என்னும் பாசுரம் குழல்வாரக் காக்கையை அழைக்கும் வகையில் அமைந்தது.

"சங்கம் பிடிக்கும் தடக்கைக்குத் தக்கநல்
அங்க முடையதோர் கோல்கொண்டு வா"[138]

என்பது 'கோல்கொண்டுவா' எனும் பாசுரம்.

சிறுவர்கள் 'பூச்சிகாட்டி' விளையாடும் முறையையும் ஆழ்வார் அறிவிக்கிறார்.

"அத்தன்வந் தப்பூச்சி காட்டுகின்றான்"[139]

என்னும் பாசுரம் இதனைத் தெளிவாக்குகிறது.

சண்பகம், மல்லிகை, பாதிரி, செங்கழுநீர், புன்னை, குருக்கத்தி, இருவாட்சி, கருமுகைப்பூ முதலியன அக்காலத்து அணியத்தக்க மலர்களாகக் கருதப்பட்டன.[140]

### சிற்பக்கலை முதலியன

பண்டைத்தமிழ் நாட்டில் சிற்ப நூலை அறிந்த புலவர்கள் நாள் குறித்து, நாழிகை பார்த்து நுட்பமாக நூலை நேரே பிடித்துத் திசைகளைக் குறித்து அத்திசைகளில் நிற்கும் தெய் வங்களையும் வழிபட்டுப் புகழினையுடைய அரசர்க்கொப்ப மனைகளையும், வாயில்களையும், மண்டபங்களையும் வகுத் தமைத்தனர். இதனை,

"பொருதிறஞ் சாரா வரைநா ளமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து"[141]

என்பதனால் அறியலாம்.

சங்க காலத்திலும் அதற்குப் பின்னரும் தமிழ் நாட்டில் அமைக்கப்பட்ட கட்டிடங்கள் செங்கற்களாலும் மரத்தினா லும் செய்யப்பட்டது. பெரியாழ்வார் காலத்தில் மாளிகைகள் உயர்ந்து விளங்கின என்பதைப் பல பாசுரங்கள் அறிவிக் கின்றன.

"சந்திரன் மாளிகை சேரும்
சதுரர்கள் வெள்ளறை"[142]
"மஞ்சு தவழ்மணி மாட
மதில்திரு வெள்ளறை"[143]
"மதியை மாடம் தீண்டும் குறுங்குடி"[144]
"மன்னுதண் பொழிலும் வாவியும் மதிளும்
மாடமா ளிகையும் மண்ட பமும்,
தென்னன்தொண் டையர்கோன் செய்தநன்
மயிலை"[145]
"வண்ண நன்மணி யும்மரகத
முமழுத்தி நிழலெழும்
திண்ணைசூழ் திருக்கோட் டியூர்"[146]
"வண்டுக ளித்திரைக்கும்பொ ழில்சூழ்
வருபுனல் காவிரித் தென்ன ரங்கன்"[147]
"கன்னிநன் மாமதிள் சூழ்தரு பூம்பொழில்
காவிரித் தென்ன ரங்கம்"[148]

முதலான பாசுரங்கள் கட்டிடச் சிறப்பினை நன்கு எடுத்தியம்பு கின்றன. இவற்றால் அக்காலத்து நகரங்கள் மாட மாளிகையும், அழகிய மண்டபங்களும் உடையனவாய்த் திகழ்ந்தன வென்றும், அவை மதியத்தைச் சென்று தீண்டுகின்ற அளவிற்கு வானளாவி உயர்ந்திருந்தன என்றும், மேகங்கள் ஊர்ந்து செல்லக்கூடிய அளவிற்கு அழகிய உயர்மதிள்களை உடையதாய் விளங்கின என்றும், அம்மாடங்கள் எல்லாம் திண்ணைகள் சேர்ந்து சூழப்பெற்றனவாய் அமைந்திருந்தன என்றும் அறியலாம். திண்ணை மணியும் மரகதமும் அழுத்தப்பெற்று நிழல்மிக்கதாக விளங்கியது.

இத்தகைய அழகிய கட்டிடங்களில் சிறந்த ஓவியங்கள் இருந்திருக்க வேண்டும். 'எழுதணி கடவுள்'[149] என்றும், "காழ்புனைந்தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப் பாவையும் பலியெனப் பெறாஅ"[150] என்றும் அகநானூற்று அடிகள் சங்ககாலச் சுவர் ஓவியங்களைச் சுட்டுகின்றன.

"சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர், உலகளந்த
மூர்த்தி யுருவே முதல்"[151]

என்னும் பொய்கையாழ்வாரின் பாசுரம் சுவரில் கடவுளின் உருவம் வரைந்து வழிபட்டதைக் குறிக்கிறது. இடைக்காலத்தில் உருவ வார்ப்புத் தொழில் பற்றிய குறிப்பு ஒன்று,

"மழையே! மழையே! மண்புறம்
பூசியுள் ளாய்நின்ற,
மெழுகூற்றி னாற்போல் ஊற்றுநல்
வேங்கடத் துள்நின்ற"[152]

என்னும் பாசுரத்தின் உவமையிலிருந்து அறியப்படுகின்றது.

**பெயரிடுதல்**

தமிழ்நாட்டில் மக்களுக்கு வழங்கும் பெயர்கள் பெரும்பாலும் தெய்வப் பெயர்களாகவே விளங்கின. தாங்கள் வழிபடும் தெய்வங்களின் பெயர்களை மக்களுக்கு வழங்குவது தமிழ்நாட்டின் தொன்றுதொட்டு வரும் வழக்கமாகும்.

சங்க நூற்களில் கிடைக்கும் புலவர் பெயர்களும், அரசர் பெயர்களும் பெரும்பாலும் மையக் கடவுளரின் பெயர்களைப் பற்றி இடம்பெற வில்லை.

"ஊரும் பெயரு முடைத்தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி யவையவை பெறுமே"[153]

என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்குப் பேராசிரியர் "நான்கு சாதியாரும் பிறந்த ஊரும் அவர்தம் பெயரும் அவர் சாதிக்கு உரித் தென்றற் கேற்ற கருவியும் யாருஞ் சார்த்தப்பட்டு அவை அவை பெறுப" என்று உரையெழுதினர். மேலும் பேராசிரியர், "இம்மூன்றும் வரையறுத்துச் சொல்லப்படா. எல்லாச் சாதியார்க்கும் ஒப்பச் செல்லு மென்பது கருத்து; எற்றுக்கு? இவை சாதி பற்றி வேறுபடாப் பொருளாகலின் ஊரும் பெயரு மென்பன: உறையூர் ஏணிச்சேரி முடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், மதுரை அறுவை வாணிகன் இள வேட்டன்,

அம்பர் கிழான் நாகன்'' என உதாரணம் காட்டுவர். எனவே கடவுளர் பெயர்களை மக்களுக்கிட்டு வழங்கும் முறை அக்காலத்தில் பெரும்பான்மையும் இருந்ததில்லை எனலாம். பக்தி தலைதூக்கிய காலத்தில் இவ்வழக்கம் ஏற்பட்டது.

மானிட சாதியில் தோன்றிய ஒருவருக்கு வேறொரு மானிடரின் பெயரையே வழங்கினால் பயனில்லை. மறுமையில் யாதொரு நன்மையும் பெற முடியாது. ஆதலால் கடவுள் திருப்பெயராகிய கோவிந்தன், மாதவன் என்னும் பெயரை இட்டு அழைத்தால் ஆளுடைய நாரணனைப் பெற்ற அன்னை நரகத்தை அடையமாட்டாள் என்று பெரியாழ்வார் கூறுகிறார். இதனைத் தமது திருமொழியில்,

''மானிட சாதியில் தோன்றிற்றோர் மானிட
சாதியை,
மானிட சாதியின் பேரிட் டால்மறு மைக்கில்லை,
வானுடை மாதவா கோவிந் தாவென்
றழைத்தக்கால்
நானுடை நாரணன் தம்மன் னைநர கம்புகாள்''[154]

என்று பாடுகிறார்.

''மண்ணில் பிறந்து மண்ணாகும் மானிடப்
பேரிட்டு, அங்கு
எண்ணமொன் றின்றி யிருக்கு மேழை மனிசர்காள்,
கண்ணுக் கினிய கருமுகில் வண்ணன் நாமமே
நண்ணுமின், நாரணன் தம்மன் னைநர
கம்புகாள்''[155]

என்று மற்றொரு பாட்டில் வலியுறுத்திக் கூறுகிறார். இத்திருமொழி முழுதுமே நாரண நாமத்தை இடுமாறு பேசுகிறது.[156] மேற்கூறிய பாசுரத்தில் குறிப்பிட்டவாறு பின்வந்தோர் மக்க குு இறைவன் பெயரை இட்டு வழங்கினர்.

''மேதக்க வெந்தை பெயரனை யாங்கொள்வேன்''[157]
என்று மருதக்கலியிலும்,

"அகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்"[158]

என்று ஐங்குறுநூற்றிலும் பாட்டன் பெயரை மகற்கிடுதலைக் காணலாம். அந்தப் பாட்டன் பெயர் இறைவன் திருநாமங்களில் ஒன்றாய் இருந்தால் பின்னும் சிறப்புடைத்தென்று பெரிதும் கருதித் தற்போதும் அம்முறையை மக்கள் பின்பற்றுவதைக் காணலாம்.

"முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற
புதல்வன்"[159]

என்னும் கலியடியின் வாயிலாகப் பாட்டன் பெயரைச் சிறு குழந்தைகட் கிடுதல் மரபென்பது தெளியப்படுகிறது.

பெரியாழ்வார் பாசுரங்களின் வாயிலாக அக்கால மக்களின் கலை, நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் முதலியவற்றை நன்கு அறியமுடிகிறது. மக்களின் உணவும், உடைச் சிறப்பும் பிற ஆரவாரத் தன்மையும் நாகரிகம் எனப்படாமல், அவர்களின் உள்ள உயர்வே நாகரிகம் எனப்படும்.

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"[160]

என்பர் திருவள்ளுவர். இத்தகைய நாகரிக மேம்பாடுற்ற இனிய சமுதாயத்தைப் பெரியாழ்வார் பாசுரங்களின் வழி அறிந்து மகிழலாம்.

## குறிப்புகள்

1. தொல், பொருள். அகத். 5
2. தொல். பொருள். அகத். 20
3. தொல். பொருள். களா. 90
4. பரி. 15/14–15
5. பரி. திரட்டு, 4-5
6. பெரியாழ். திரு. 264/3-4
7. புறம். 390
8. சிலப்பு. 15/120–121
9. பெரியாழ். திரு. 114
10. ,, 123
11. ,, 239
12. ,, 227
13. ,, 186/3
14. ,, 217
15. ,, 129
16. ,, 156
17. ,, 248/3
18. ,, 256
19. ,, 17
20. ,, 245
21. திருப். 28
22. பெரியாழ். திரு. 298
23. திருப். 7/3-4
24. பெரியாழ். திரு. 231
25. திருவாய். 3087/3-4
26. கலி. 114/19-21
27. பெரியாழ். திரு. 70

28. பெரியாழ். திரு. 331/3-4
29. பெரி. திரு. 960
30. நாச்சி. 556
31. பெரியாழ். திரு. 295
32. ,, 294
33. நாச்சி. 619
34. ,, 625/3-4
35. பெரியாழ். திரு. 300/3-4
36. நாச்சி. 505
37. ,, 507
38. ,, 510
39. திருவாய். 3276
40. ந. சுப்பு ரெட்டியார், 'பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் ப. 17
41. பெரியாழ். திரு. 365
42. ,, 366
43. ,, 360
44. ,, 403/3-4
45. திருவாய். 3359/3–4
46 ,, 3362/2-3
47. ,, 3187
48 ,, 3124
49 பாண்டியர் செப்பேடுகள் பத்து, ப. 70.
50. ,, ,, ,, ப. 66.
51. பெரியாழ். திரு. 369
52. இறை. அகப்., நூற்பா 1, உரை
53. திருப். 17
54. திருக்கு. 388
55. திருவாய். 3047

56. பெரியாழ். திரு. 344
57. ,, 361
58. திருவாய். 3064
59. ,, 3065
60. ,, 3068
61. பெரியாழ். திரு. 168
62. ,, 211
63. ,, 294
64. ,, 369
65. திருப்பல். 10
66. பெரியாழ். திரு. 436/3
67. ,, 436/2
68. சுந். தே. 340
69. சிலம்பு, காடுகாண்காதை, 50—51.
70. பெரியாழ். திரு. 88
71. ,, 121
72. பெரிய. திரு. 1796/2
73. திருநெடுந். 2062
74. பெரியாழ். திரு. 88/3
75. ,, 51/2
76. ,, 54/1
77. ,, 77/2
78. ,, 40/3
79. ,, 140/4
80. ,, 142
81. ,, 49
82. ,, 109/2
83. ,, 87/3
84. ,, 48/2
85. ,, 172/2

86. பெரியாழ். திரு. 47/2
87. ,, 54/2
88. ,, 75
89. ,, 42/2
90, ,, 47/2
91. ,, 25/3-4
92. பொருநரா. 21-22
93. கலி. பாலை 2
94. குறுந். 254
95. பெரிய. திரு. 1141/3-4
96. நாச்சி. 561
97. பெரியாழ். திரு. 282
98. பெரிய புராணம், ஆனாய நாயனார் புராணம் 30.
99. ,, ,, ,, 31.
100. பெரியாழ். திரு. 233/3
101. ,, 120/3
102. ,, 257
103. ,, 262
104. ,, 254
105. ,, 14/3
106, சிலம்பு. கடலாடு காதை, 54-55
107. பெரியாழ். திரு. 188
108. ,, 207/3
109. ,, 115
110. ,, 143/2
111. பெரி. திரு. 1962/2
112. சிறிய திரு. 11-13
113 சிலம்பு. கடலாடு காதை. 46-49
114. மு. இராகவையங்கார், 'ஆராய்ச்சித் தொகுதி', பக். 66-67

115. பெரியாழ். திரு. 288
116. ,, திரு. 194
117. ,, 41
118. ,, 235/2
119. ,, 13/3-4
120. ,, 14
121. ,, 16
122. மதுரைக்காஞ்சி 590-594
123. ஆய்வுக்கோவை, தொகுதி 3
124. பெரியாழ். திரு. 454/3-4
125. திருவாய். 3736/3
126. பெரியாழ். திரு. 391/3
127. ,, 422/2
128. ,, 18
129. ,, 44
130. ,, 299/3-4
131. ,, 139/3-4
132. ,, 140/3
133. ,, 140/4
134. ,, 142
135. ,, 152/3-4
136. ,, 155/3-4
137. ,, 162
138. ,, 173
139. ,, 124
140. ,, 2/7ஆம் திருமொழி
141. நெடுநல். 75-78
142. பெரியாழ். திரு. 192/3
143. ,, 197/3

144. பெரி. திரு 1803/4
145. ,, 1077
146. பெரியாழ். திரு. 362
147. ,, 212
148. ,, 245
149. அகம். 167/15-17
150. அகம். 369
151. முதல் திருவந். 2095
152. நாச்சி. 604
153. தொல், பொருள், மரபியல் 619
154. பெரியாழ். திரு. 384
155. ,, 387
156. ,, 4ஆம் பத்து, 6ஆம் திருமொழி
157. கலி. 81/35
158. ஐங்குறு. 403/3
159. கலி 75/24-25
160. திருக்கு. 580

# பெரியாழ்வார் பாசுரங்களில் கவிதை நலம்

## கவிதை

கவிதையின் அடிப்படை வாழ்க்கையின் திறனாய்வே. உண்மையும் ஆழமும் மிகுதியாகப் பெற்று விளங்குவது கவிதையின் சிறப்பு. உலகத்திலேயே இலத்தீன் மொழிக்கு இணையாகப் பக்திக் கவிதைகளையுடைய மொழி தமிழ் எனப் போற்றப்படுகிறது. இதில் பிற கவிதைகளைப் போலல்லாமல் தாமாகவே வந்தமையும் எதுகை மோனைகளும், உவமைகளும், கற்பனைகளும் இடம்பெறுகின்றன.

மனிதனுக்குப் புலப்படாத ஒரு நுண்ணிய ஆற்றலே உணர்ச்சி எனப்படுவது. உணர்ச்சியற்ற யாவரும் உயிருள்ளவராகக் கருதப்பட மாட்டார். அதே போன்று உணர்ச்சியற்ற இலக்கியமும் சிறந்த இலக்கியமாகக் கருதப்படுவதில்லை. உணர்ச்சியின் அடிப்படையிலேயே கவிதை தோன்றுகின்றது. தான் பெற்ற உணர்ச்சியைப் பிறரும் பெறவேண்டும் என்று எண்ணுகின்றவர்களே இலக்கியத்தைப் படைக்கின்றனர். உணர்ச்சியின் காரணத்தால் இலக்கியம் கலையாகிறது. கலை வாழ்வாகிறது. உள்ளதை உள்ளவாறு எடுத்துக் கூறின் உணர்ச்சி தோன்றுவதில்லை. உள்ளதை உணர்ச்சியுடன் கூறும்பொழுதுதான் பிறர் உள்ளத்தைத் தூண்ட முடியும். உணர்ச்சியைத் தூண்டுதற்கே கற்பனை, வடிவம், உவமை முதலிய அழகுகள் பயன்படுகின்றன. உணர்ச்சிக் கூறுகள் இலக்கியங்களில் பலவகையாகக் காணப்படுகின்றன. உணர்ச்சிதான் கவிதைக்கு உயிர் நாடி.

இலக்கியத்தைப் படைக்கும் கவிஞர் அனைவரும் கருத்துகளை உள்ளவாறே கூறுவதில்லை. புலவர்கள் கற்பனை நயத்துடன் கூறும்போது அவர்கள் உள்ளத்தில் நுண்ணிய பல ஒப்புமைக் காட்சிகள் தோன்றுகின்றன.

அவர்கள் அவற்றைத் தம் கவிதைகளில் அழகுணர்ச்சியுடன் விளக்கிப் பாடல்களை இயற்றுகின்றனர். உவமைகளை அமைக்குந் திறனை ஒருவரிடமிருந்து மற்றொருவர் கற்றறிய இயலாது. அது புலவர் உள்ளத்திலிருந்து தானே கிளர்ந் தெழக் கூடியது. புலமையின் அளவு கோலாக உவமை விளங் கும்.

**ஆழ்வார்தரும் உவமைகள்**

மனிதன் சிந்திக்கத் தொடங்கிய காலத்திலிருந்தே உவமை யும் தோன்றியிருக்க வேண்டும். உலகியலில் இதைக் காணலா மெனினும் கவிதையில் மிகவும் சிறப்பாகப் போற்றப்படுவது. உவமை பாடலுக்கு அணியாக விளங்குவதுடன் பொருட் புலப் பாட்டினையும் தருகிறது. பக்திக் கவிதைகளை அனுபவிப் பதற்குத் தன்னை மறக்கும் நிலை வேண்டும். இவ்வகையில் ஆழ்வார்கள் கொண்ட அன்பு நெறியையே கவிதைகளாக உவமை அணிநலன்களோடு வழங்கியுள்ளதைக் காண்கிறோம். எண்ணியதை எண்ணியவாறு உணர்த்துதற்கு உவமைகளும், உருவகங்களும் பெரிதும் துணையாகின்றன, ஆழ்வார்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடாத்தியவர்களாதலால் இவர்கள் படைத்த உவமைகள் பெரும்பாலும் இயற்கையை நுணுகி அறிந்த பான்மையைக் காட்டுவனவாக விளங்கு கின்றன.

பெரியாழ்வார் பாசுரங்களில் எண்ணற்ற உவமைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில:

"செக்கரிடை நுனிக் கொம்பில் தோன்றும்
சிறுபிறை முளைபோல"[1]

"மின்னில் பொலிந்ததோர் கார் முகில்போலக்
கழுத்தினிற் காறையொடும்"[2]

"கடுஞ்சேக் கழுத்தின் மணிக்குரல் போல்"[3]

"வெண்புழுதி மேற்பெய்து கொண்டளைந்ததோர்
வேழத்தின் கருங்கன்றுபோல்"[4]

"மின்னியல் மேகம் விரைந்தெதிர் வந்தாற்போல்"[5]

"செங்கம லப்பூவில் தேனுண் ணும் வண்டேபோல்
பங்கிகள் வந்துன் பவளவாய் மொய்ப்ப'[6]
"உரகமெல்லணை யான்கையிலுறை
சங்கம்போல்மட அன்னங்கள்"[7]
"பக்கங் கருஞ்சிறுப் பாறை மீதே
அருவிகள் பகர்ந்தனைய,
அக்கு வடமிழிந் தேறித் தாழ"[8]
"திரைநீர்ச் சந்திர மண்ட லம்போல்
செங்கண்மால் கேசவன்தன்
திருநீர் முகத்துத் துலங்கு சுட்டி"[9]
"மலைபுரைதோள் மன்னவரும்"[10]
"செப்பிள மென்முலைத் தேவகி"[11]
"முத்தனைய முறுவல்"[12]
"மின்னனைய நுண்ணிடையார்"[13]
"வண்டொத் திருண்டகுழல் வாராய்"[14]
"புண்ணிற் புளிப்பெய்தா லொக்குந் தீமை"[15]
"ஆலைக்க ரும்பின் மொழி யனைய
அசோதை"[16]
"பேடை மயிற்சாயல் பின்னை மணாளா"[17]
"வல்லினுண் ணிதழன்ன ஆடை"[18]

என்பன போன்ற உவமைத் தொடர்கள் அவர்தம் பாசுரங்களில் அமைந்திருத்தலைக் காணலாம். இவற்றுள் சில மரபானவை; பழமையானவை. இருப்பினும் சொல்ல வந்த கருத்திற்குப் பொருந்த அமைந்தவை.

பெரியாழ்வார் பாசுரங்களில் உருவகங்களும், முரண் தொடர், இரட்டைக் கிளவி, அடுக்குத் தொடர் முதலியனவும் இடம்பெற்றுள்ளன.

"அட்டுக் குவிசோற்றுப் பருப் பதமும்
தயிர்வா வியும்நெய் யளறும்"[19]

"செப்பா டுடைய திருமா லவன்தன்
செந்தா மரைக்கை விரலைந் தினையும்
கப்பா கமடுத் துமணி நெடுந்தோள்
காம்பா கக்கொடுத் துக்கவித் தமலை"[20]

"கடுவாய்ச் சினவெங் கட்களிற் றினுக்குக்
கவள மெடுத்துக் கொடுப்பானவன்போல்,
அடிவா யுறக்கை யிட்டெழப் பறித்திட்
டமரர் பெருமான் கொண்டுநின் றமலை"[21]

என்பவற்றால் ஆழ்வாரின் உருவகச் சிறப்பை அறியலாம்.

"கரிய குழல்செய்ய வாய்முகத்துக்
காகுத்த நம்பீ"[22]

என்பதில் முரண்தொடை அமைந்துள்ளது

"கன்னற் குடம்திறந் தாலொத் தூறிக்
கணகண சிரித்துவந்து"[23]

"தன்னிய லோசை சலன்சல னென்றிட"[24]

என்ற பாசுரங்களில் இரட்டைக் கிளவி அமைந்து இனிமை பயக்கக் காண்கின்றோம்.

"வருக வருக வருக இங்கே
வாமன நம்பீ"[25]

என்னும் பாசுரத்தில் அடுக்குத் தொடர் விரைவுப் பொருளில் வந்து அழகு சேர்க்கிறது.

**ஒருசொல் எதுகை**

ஒரே சொல் அல்லது சொற்றொடரே சீராக அமைந்த எதுகை ஆழ்வார் பாசுரங்களில் அநேகமாய்க் காணப் படுகின்றன.

அப்பண்பினைக் கீழ்வரும் பெரியாழ்வார் பாசுரத்தில் காணலாம்:

"ஆயிரம் தோள்பரப்பி
முடியாயிர மின்னிலக,
ஆயிரம் பைந்தலைய
அனந்தசயன னாளும்மலை,
ஆயிர மாறுகளும்
சுனைகள்பல வாயிரமும்,
ஆயிரம்பூம் பொழிலுமுடை
மாலிருஞ் சோலையதே"[26]

பாடலின் நான்கு அடிகளிலும் ஒருசொல் எதுகை முழுமையாக அமைந்து அழகூட்டக் காண்கிறோம்; இது சொற்பொருட் பின்வருநிலையாகவும் அணிநலம் பயக்கின்றது.

**அந்தாதி**

பெரியாழ்வார் அந்தாதித் தொடையாகவும் பாசுரங்களை அருளிச் செய்துள்ளார். 'அந்த முதலாத் தொடுப்பது அந்தாதி' எனப்படும். அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், சீரானும், அடியானும், மற்றையடிக் காதியாகத் தொடுப்பது அந்தாதித் தொடை என வழங்கப்பெறும். இவ்வாழ்வார் தம் திருமொழியின் இரண்டாம் பத்து மூன்றாம் திருமொழியின் பன்னிரண்டு பாசுரங்களையும் அந்தாதித் தொடையாகவே அமைத்துள்ளார்.

**இயற்கை வருணனை**

நீர்வளமும் நிலவளமும் மிக்க திருக்கோட்டியூரின் சிறப்பினைப் பாடுகிறார் பெரியாழ்வார். கால்வாய் நீர்களில் இளமை பொருந்திய வாளை மீன்கள் ஆமைகளின் முதுகின் மேல் குதித்துக் கொண்டும் நன்மலர்களை உழக்கிக் கொண்டும் களிப்புடன் விளையாடுவதைக் காண்கிறார். இவ்வழகிய காட்சி இயற்கை வருணனைப் பாடலாக இறையுணர்வடிப் படையில் வெளிப்படுகின்றது;

"ஆமையின்முது கத்திடைக்குதி
கொண்டுதூ மலர் சாடிப்போய்,
தீமைசெய்திள வாளைகள்விளை
யாடுநீர்த்திருக் கோட்டியூர்"[27]

என்று ஆழ்வார் பாடி மகிழ்கின்றார். மேலும்,

"சீதநீர்புடை சூழ்செழுங்கழ
னியுடைத்திருக் கோட்டி யூர்"[28]

என்றும் கூறுகின்றார்.

"அணிபொழில்
சேல்கள் பாய்கழனித் திருக்கோட்டியூர்"[29]

என்று மற்றொருபாட்டில் மீனின் செயலைப் பாடுகின்றார் ஆழ்வார்.

சோலைகளின் நெருங்கிய கிளைகளில் தங்கிய குயில்கள் இசைப்பது கண்ணபிரானின் சிறப்பினைப் பாடுவதாகவே காட்சியளிக்கின்றது ஆழ்வாரின் மனக்கண்ணிற்கு. எனவே,

"கொம்பினார்பொழில் வாய்க்குயிலினம்
கோவிந்தன்குணம் பாடுசீர்,
செம்பொனார்மதில் சூழ்செழுங்கழ
னியுடைத்திருக் கோட்டியூர்"[30]

என்று பாடுகின்றார்.

ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் திருத்தலத்தினைப் பெரியாழ்வாரும் ஆண்டாளுமே மங்களாசாசனம் செய்துள்ளனர். இவ்விருவரும் பல திருமொழிகளை அருளிச் செய்திருப்பினும் இவ்வூரைப் பற்றி இரண்டே பாசுரங்கள் பாடியுள்ளனர்.

"மின்னனைய நுண்ணிடையார்
விரிகுழல்மேல் நுழைந்தவண்டு,
இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்
இனிதமர்ந்தாய்"[31]

என்று பெரியாழ்வார் பாடுகின்றார். அவருடைய திருமகளோ

"மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூருறை வான்"[32]

என்று குறிக்கிறார். இந்த இரண்டு பாசுரங்களிலும் வில்லி புத்தூரின் இயற்கைச் சூழ்நிலையைக் காண்கிறோம்.

பெரியாழ்வார் திருமாலிருஞ்சோலையைக் குறிப்பிடுகையில் அதன் மலைச்சிறப்பை,

"குலமலை கோலமலை
குளிர்மாமலை கொற்றமலை,
நிலமலை நீண்டமலை
திருமாலிருஞ் சோலையதே"[33]

என்றே கூறுகிறார். திருமாலிருஞ் சோலையின் இயற்கை வளங்களிலும் வனப்புகளிலும் பெரியாழ்வார் திருமாலின் பேரழகினைக் காண்கிறார்.

அருவியின் பெருக்கு ஆறுகளாகவும், சுனைகளாகவும் காட்சி அளிப்பதனை,

"சேலுக ளாநிற்கும் நீள்சுனை
சூழ்திரு மாலிருஞ் சோலையெந்தாய்"[34]

என்று புலப்படுத்துகிறார்.

கண்ணன் என்னும் தெய்வத்தினைப் பெரியாழ்வார் சோலை மலையில் காண்கின்றார். இக்கண்ணபிரானின் கைகளும், சக்கரமும், பொன்னாடையும் செக்கர் வானம் போன்று காட்சியளிக்கின்றது:

"சக்கர மும்தடக் கைகளும்
கண்களும் பீதக வாடையொடும்,
செக்கர் நிறத்துச் சிவப்புடை
யாய்! திரு மாலிருஞ் சோலையெந்தாய்![35]

என்பது ஆழ்வார் அருளிச்செயல்.

இயற்கையிலேயே இறைவனைக் கண்டவர் ஆழ்வார். குன்றுகளின் உச்சியிலும், வானவீதியில் படியும் மேகங்களிலும், நீலத்திரைக் கடலிலும், சுனைகளில் மலரும் குவளை மலர்களிலும் அவன் திருமேனியைக் காண்கிறார் ஆழ்வார். இதனை,

"குன்றாடு கொழுமுகில்போல்
குவளைகள்போல் குரைகடல்போல்,
நின்றாடு கணமயில்போல்
நிறமுடைய நெடுமால்"[36]

என்னும் பாசுரத்தால் குறிப்பிடுகிறார்.

திருமாலிருஞ்சோலை மலையிலுள்ள கொன்றை மரங்கள் இதழும் நரம்புமாக மலர்களைச் சொரிகின்றமை வள்ளல்கள் பொன் மோதிரங்களையும், பொற்காசுகளையும் வழங்குவது போன்றுள்ளது என்பதனை,

"பொருப்பிடைக் கொன்றைநின்று
முறியாழியுங் காசுங்கொண்டு
விருப்பொடு பொன்வழங்கும்
வியன்மாலிருஞ் சோலையதே"[37]

என்னும் பாசுரத்தால் பெரியாழ்வார் அருளிச் செய்கிறார்.

விடியற்காலையில் திருமாலிருஞ்சோலையில் வண்டுகள் ஒலிப்பது திருமாலின் ஆயிர நாமங்களையும் பண் இசைத்துப் பாடுவது போலிருந்தது என்பதனை,

"அறுகால் வரிவண் டுகளா
யிர நாமஞ் சொல்லி,
சிறுகாலைப் பாடும் தென்திரு
மாலிருஞ் சோலையே"[38]

என்கிறார்.

புன்னையும், செருந்தியும், வேங்கையும், கோங்கும் வரிசை வரிசையாக நின்று பொன்னிறமுள்ள பூக்களைச் சொரியும் திருமாலிருஞ் சோலை இயற்கைக் காட்சியினை,

"புன்னை செருந்தியொடு
புனவேங்கையும் கோங்கும்நின்று,
பொன்னரி மாலைகள்சூழ்
பொழில்மாலிருஞ் சோலையதே"[39]

என்று பெரியாழ்வார் அருளிச் செய்கிறார்.

விஷ்ணுவையே எப்போதும் தம் சித்தத்தில் வைத்திருக்கும் பெரியாழ்வாருக்கு வானளாவ ஓங்கியிருக்கும் தாமரையைக் காண்கின்ற போதெல்லாம் திருமாலின் உலகளந்த சேவடியைச் சேவித்தாற் போல் இருக்கும். செந்நெற் பயிர்கள் கதிர் கனத்தாலே தலை வணங்கியிருக்கும் வயலைக் காணும்போது வணக்கமே வடிவெடுத்தாற் போன்ற பாகவதர்களைச் சேவித்தாற் போல இருக்கும். இதனை

"உரம்பெற்ற மலர்க்கமல முலகளந்த
சேவடி போலுயர்ந்து காட்ட,
வரம்புற்ற கதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்
தலைவணங்கும் தண்ணரங்கமே"[40]

என்கிறார்.

திருக்குளத்தினை அழகு செய்யும் செந்தாமரை மலர்கள் திருமாலின் திருமுகத்தையும், கருநீல மலர்கள் திருமாலின் நிறத்தையும் போன்று காட்சியளித்ததனை,

"திருமுகமாய்ச் செங்கமலம்
திருநிறமாய்க் கருங்குவளை,
பொருமுகமாய் நின்றலரும்
புனலரங்கம் என்பதுவே"[41]

என்று பாடுகிறார் ஆழ்வார்.

"குரவரும்பக் கோங்கலரக்
குயில்கூவும் குளிர்பொழில் சூழ்
திருவரங்க மென்பதுவே
என்திருமால் சேர்விடமே"[42]

என்ற பாசுரத்தில் திருவரங்கத்தின் பொழிலழகு காணப் படுகிறது.

அந்தி மயங்கும் வேளையில் வண்டுகள் மாலையில் மலரும் மல்லிகை மலர்களின் மேல் வீற்றிருந்து தேனைப் பருகத் தொடங்கின. எம்பெருமான் புகழ் பாடிய வண்டுகள் அந்த மகிழ்ச்சியைச் சங்குகளில் வைத்து ஊத வேண்டுமென்று மல்லிகை மலர்களையே வெண்சங்குகளாகப் பயன்படுத்தி யமையைப் பெரியாழ்வார்,

"எல்லியம்போ திருஞ்சிறைவண்
டெம்பெருமான் குணம்பாடி,
மல்லிகைவெண் சங்கூதும்
மதிலரங்க மென்பதுவே"[43]

என்று அருளுகிறார். இக்கருத்தைப் பொன்னேபோல் போற்றிய புகழேந்திப் புலவரும் தம் 'நளவெண்பா'வில்

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கரும்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது"[44]

என்று எடுத்தாண்டுள்ளார்.

மலைகள் நடுங்க நிலம் இடிந்து விழுமோ என அஞ்சுமாறு கரைகளிலுள்ள மரங்களை முறித்துக்கொண்டு கடலும் கலங்குமாறு வரும் கங்கையாற்றின் விரைவை,

"தடவரை யதிரத் தரணிவிண் டிடியத்
தலைப்பற்றிக் கரைமரஞ் சாடி,

கடலினைக் கலங்கக் கடுந்திழி கங்கைக்
கண்டமென் னும்கடி நகரே''[45]

எனப் பாடியுள்ளார். ஆற்று வெள்ளம் விரைந்து பாய்வதைத் தம் கவிதைச் சிறப்புடன் வருணிக்கின்றார்.

கண்ணபிரான் பசுக்களுக்குப் புல்லும் நீரும் நல்கி வளர்த்தமையால் அவனுக்குக் கோவர்த்தனன் என்னும் திருநாமம் உண்டு. இந்தத் திருநாமத்தை இம்மலைக்கு இட்டு வழங்கினன். இதனைப் பெரியாழ்வார்,

''குரவில் கொடிமுல் லைகள்நின் றுறங்கும்
கோவர்த் தனம்''[46]

என்று வருணிக்கிறார். இத்திருமொழிப் பாசுரங்களில் மலையின் வருணனையும், கண்ணன் மலையெடுத்த எளிமையும் கலந்து காணப்படுகின்றன.

மலையிலுள்ள பெண்யானை யொன்று தன் கன்றினைச் சிங்கக் குட்டியொன்று நலியும்பொருட்டுச் சீற்றம்கொண்ட அளவில் அது தன் கன்றினைத் தன் நான்கு கால்களினுள்ளே அடக்கி மறைத்துக்கொண்டு அச்சிங்கக் குட்டியை எதிர்த்துப் போராடுவதனை,

''இழவு தரியா ததோரீற் றுப்பிடி
இளஞ்சீ யம்தொடர்ந் துமுடு குதலும்,
குழவி யிடைக்கா லிட்டெதிர்ந் துபொரும்
கோவர்த் தனமென்னும் கொற்றக் குடையே''[47]

என்னும் பாடலால் உணர்த்துகிறார்.

மலைவாழ் குறவர்கள் தமக்கு அன்பர்களான குறப்பெண்களின் கண்கள் கொல்லையில் பரந்திருக்கக் கண்டு அவர்களின் பார்வையினால் அவற்றைத் தம் கொல்லையை அழிக்கவந்த மான்கள் எனக்கருதி, அவற்றின் மீது அம்பெய்தித் துரத்த எண்ணித் தன் விற்களை வளைப்பதனை,

"தம்மைச் சரணென்றதம்பா வையரைப்
புனம்மேய் கின்றமா னினங்காண் மினென்று
கொம்மைப் புயக்குன் றர்சிலை குனிக்கும்
கோவர்த் தனமென்னும் கொற்றக் குடையே"[48]

என்னும் பாசுரத்தால் அறியலாம்.

காடுகளில் அலைந்து திரியும் ஒரு யானையானது கரை போன்று உயர்ந்து காட்சியளிக்கும் ஒரு மேட்டு நிலத்தைத் தன் கொம்புகளால் குத்துகின்றது. அதனால் ஒரு கொம்பு முறியப் பெற்று மதநீர் ஒழுகிற்று. மதநீர் ஒழுகப்பெற்ற ஆற்றாமையால் அது தன் துதிக்கையை உயரத்தூக்கி அண்ணாந்து நிற்கும் போது வானத்தில் காணப்பெற்ற இளம் பிறைச் சந்திரனைத் தான் இழந்த கொம்பாக மயங்கி அதனைப்பற்றிக் கொள்ள விரும்பிற்று. இதனை,

"கானக் களியா னைதன் கொம் பிழந்து
கதுவாய் மதஞ்சோ ரத்தன்கை யெடுத்து,
கூனல் பிறைவேண்டி அண்ணாந்து நிற்கும்
கோவர்த் தனமென்னும் கொற்றக் குடையே"[49]

என்னும் பாடலால் அறிகிறோம். இப்பாடலில் ஆழ்வாருடைய கற்பனை நயத்தையும் காண்கிறோம்.

மேகங்கள் மழை பொழிவது கடல் நீரினைக் குடங்களினின்றும் சொரிவது போல் காட்சியளிக்கின்றது. அம்மலை முகடுகளில் வெண்மேகங்கள் சென்று தங்கியிருப்பது அம்மலையின் நெற்றி நரைவிட்டதுபோல் தோன்றுவதை,

"முடியே றியமா முகிற்பல் கணங்கள்
முன்னெற் றிநரைத் தனபோல, எங்கும்
குடியே றியிருந் துமழை பொழியும்
கோவர்த் தனமென்னும் கொற்றக் குடையே"[50]

என்னும் பாசுரத்தால் அறிகிறோம்.

இந்த மலையைக் கண்ணன் தூக்கிய நிலையினை ஆழ்வார் வருணிக்கும் திறன் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாகும். கண்ணன் தன் திருத்தோள்களைக் குடையின் காம்பாகவும் தன்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருக்கையில் உள்ள ஐந்து விரல்களைக் குடைக்காம்படியிலுள்ள கிளைக் கொம்புகளாகவும் கொண்டு மலையைக் குடையாகக் காத்தான். அதனை,

"செப்பா டுடைய திருமா லவன்தன்
செந்தா மரைக்கை விரலைந் தினையும்
கப்பா கமடுத் துமணி நெடுந்தோள்
காம்பா கக்கொடுத் துக்கவித் தமலை"[51]

என்று புலப்படுத்துகிறார். கண்ணபிரான் தன்னந்தனியாக ஏழு நாள்கள் மலையைத் தாங்கி இருந்தும் அவனுடைய இயற்கையழகும் மாறப் பெறவில்லை. அவன் வாட்டமும் அடையவில்லை. அவனுடைய திருக்கரங்களும் நோவு எடுக்கவில்லை. இந்நிகழ்ச்சி ஓர் இந்திரசாலம் போல் நடைபெற்றது என்பதனை,

"கொடியே றுசெந்தா மரைக்கை விரல்கள்
கோலமு மழிந் திலவா டிற்றில,
வடிவேறு திரு வுகிர்நொந் துமில
மணிவண் ணன்மலை யுமோர்சம் பிரதம்"[52]

என்னும் பாசுரத்தால் அருளிச் செய்கிறார். நம்மாழ்வாரும் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த நிகழ்ச்சியை,

"உண்ண வானவர் கோனுக் காயர்
ஒருப்ப டுத்த அடிசி லுண்ட தும்,
வண்ணமால் வரையை யெடுத்து மழைகாத்ததும்

எண்ணுந் தோறுமென் னெஞ்செரி வாய்மெழு
கொக்கு நின்றே"[53]

என்னும் பாசுரத்தில் ஆழங்கால்பட்டுத் தீயிடைப்பட்ட மெழுகுபோல் உருகுகின்றார்.

**கண்ணன் காட்சி இன்பம்**

உள்ளத்தின் உணர்ச்சியைக் கவிதையில் வெளிப்படுத்துவதில் தான் கவிஞரின் உணர்த்தும் திறன் வெளியாகிறது. இலக்கியத்தில் பல்வேறு வகையான உணர்ச்சிகள் இடம்பெற்றாலும் அச்சம், துயரம் முதலிய உணர்ச்சிகளையுடைய இலக்கியம் விரும்பிக் கற்கப்படுகிறது எனலாம். ஆழ்வார் பாசுரங்கள் முழுவதும் பக்தி உணர்ச்சியை வெளிப்படுத்துவனவாம்.

பெரியாழ்வார் தாம் காண்கின்ற கண்ணன் காட்சியில் கிளர்ச்சி பெற்று நிற்கிறார். கண்ணனின் குறும்பும் செயல்களும் மட்டுமல்லாது அவன் திருமேனித் தோற்றத்திலும் முழுமையாக ஈடுபடுகிறார். அவர்

''நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்'
நாக்கு வழித்துநீ ராட்டுமிந் நம்பிக்கு,
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்,
மூக்கு மிருந்தவா காணீரே,
மொய்குழலீர் வந்து காணீரே''[54]

என்று அருளிச் செய்கிறார். குழந்தையின், 'காட்சி இன்பம்' எந்த அளவுக்கு ஆழ்வாரை அழுந்தி அனுபவிக்கச் செய்தது என்பதற்கு இப்பாசுரம் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இப்பாசுரமானது தாம்பெற்ற அனுபவத்தை ஒரு தாய்க்குள்ள பெருமித உணர்ச்சி மேலிடப் பாடியதாகும்.

மேலும்,

''பாலொடுநெய்தயிரொண் சாந்தொடு சண்பகமும்
பங்கயம் நல்லகருப் பூரமும் நாறிவரக்
கோலந றும்பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளிமுளைப் போல்சில பல்லிலக
நீலநிறத் தழகா ரைம்படை யின்நடுவே
நின்க்னி வாயமுத மிற்றுமு றிந்துவிழ,

ஏலுமறைப் பொருளே ஆடுக செங்கீரை
ஏழுல கும்முடையாய்! ஆடுக ஆடுகவே''[55]

என்கின்றார். இப் பாசுரத்திலும் கற்பனையுடன் காட்சியனு பவம் வெளிப்படுவதைக் காணலாம்.

குலசேகர ஆழ்வாரும் தேவகி புலம்புவது போலவும், இராமனைப் பிரிந்து தசரதன் ஆற்றாது புலம்புவது போலவும் பாடிய பாடல்கள் உணர்ச்சியின் எல்லையில் நின்று பாடப் பெற்றவை யென்பதை ஒப்பு நோக்கலாம். உணர்ச்சியை வெளிப்படுத்தும் கவிதைக்கு உணர்ச்சியை வெளியிடத்தக்க வடிவமைப்பு வேண்டும். ஆழ்வார் பாசுரங்களுக்கு இவ்வகையில் பெரும்பாலும் விருத்தம் பொருத்தமாகப் பயன்படுகின்றது. குலசேகராழ்வார் தேவகி புலம்பும் நிலையில்,

''முழுதும் வெண்ணெ யளைந்துதொட் டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்,
எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற் கெள்கும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்தசெவ் வாயும்,
அழுகையு மஞ்சி நோக்குமந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்,
தொழுகை யுமிவை கண்ட அசோதை
தொல்லை யின்பத் திறுதிகண் டாளே''[56]

என்று பாடுகின்றார். மேலும் இராமனைப் பிரிந்து தசரதன் புலம்பும் நிலையில்,

''வெவ்வாயேன் வெவ்வுரைகேட் டிருநிலத்தை
வேண்டாதே விரைந்து, வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி,
நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையும்
இளங்கோவும் பின்பு போக,
எவ்வாறு நடந்தனையெம் இராமாவோ!
எம்பெருமான் என்செய் கேனே''[57]

என்று பாடுகின்றார். இவ்வாறு பாடிய ஆழ்வாரின் துன்ப உணர்ச்சி நிலை பெருமளவில் இன்றும் படிப்போரை ஆட்கொள்வதைக் காணலாம். குலசேகராழ்வார் தேவகியாகவும், தசரதனாகவும் நின்று பாடிய பாசுரங்களில் நம் பெரியாழ்வாரின் 'ஒட்ட உணர்தல்' என்ற நிலையைக் காணலாம்.

**கற்பனை நலம்**

கலைகளின் சிறப்பிற்கு இன்றியமையாப் பண்பாக விளங்குவது கற்பனையாகும். கவிதைக்கு அழகூட்டுவது கற்பனை. புலன்கள் நேராக ஒரு பொருளை நுகராத நிலையிலும் அப்பொருளை நினைவிற்குக் கொண்டு வந்து அப்பொருளிடத்து மீண்டும் நுகர்ச்சியை ஏற்றவல்ல ஆற்றலாக அமைவது கற்பனை.

பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாகக் கற்பனை செய்து அதன் வாயிலாக அவ்வின்ப நுகர்ச்சியைக் கவிதையில் இயற்றிப் பிறருக்கும் உணர்த்துவதனை,

"சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி,
கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த,
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்,
பாதக் கமலங்கள் காணீரே
பவளவா யீர்வந்து காணீரே"[58]

என்று தொடங்குகின்ற பாசுரங்களில் காண்கிறோம். இப்பாடல்களில் குழந்தைக்குத் தாயாக நிற்கும் கற்பனை உணர்ச்சி நன்கு வெளிப்படுகிறது. கண்ணன் செய்த தீம்புகளால் அயலார் கூறும் முறையீடும் கற்பனையே. இவையெல்லாம் அறிந்தவற்றை அடிப்படையாகக் கொண்டு தோன்றியதே ஆகும். கற்பனை என்பது உலகில் இல்லாத பொருளைப் படைப்பது மட்டுமன்று.

கண்ணனைக் கன்று மேய்ப்பதற்காகக் காட்டிற்கு அனுப்பி விட்டுப் பின்னர் வருந்தும் உளநிலையினை உணர்வோடு தந்திருப்பதை.

''குடையும் செருப்பும் கொடாதே தாமோ தரனைநான்
உடையும் கடியன ஊன்றுவெம் பரற் களுடை
கடியவெங் கானிடைக் காலடி நோவக் கன்றின்பின்
கொடியேன் என்பிள்ளையைப் போக்கினேன் எல்லே
பாவமே''[59]

என்னும் பாசுரத்தில் காணலாம். இதில் தாயின் புலம்பலைக் கூறும்போது கற்பனையும் விஞ்சி உணர்ச்சி நிற்பதையும் காண்கின்றோம்.

குலசேகராழ்வார் இராமனைப் பிரித்து தசரதன் புலம்பும் நிலையில்

''மெல்லணைமேல் முன்துயின்றாய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்டுயிலக் கற்றனையோ
காகுத்தா! கரிய கோவே''[60]

என்று பாடுகிறார். இதில் கற்பனை இன்பம் விளங்கக் காணலாம்.

**அகப்பொருள் மரபுகள்**

பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், குலசேகராழ்வார், ஆண்டாள் முதலானோர் பாடல்களில் அகப்பொருள் மரபுகள் சிறந்துள்ளன.

ஓர் ஆணும் பெண்ணும் கூடி இன்பம் நுகர்ந்து பின் ஊரும் உலகமும் அறியத் திருமணம் புரிந்து சான்றோர் போற்ற வாழும் உலகியல் வாழ்க்கை பற்றிய பொருள்களை எல்லாம் உள்ளடக்கிக் காண்பதே அகப்பொருள் என்பது தெளிவாகும்.

"ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்திற்குப் பின்னர் அவ்விருவரும் ஒருவருக் கொருவர் தத்தமக்குப் புலனாக 'இவ்வாறிருந்தது' எனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத் துணர்வே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாதலின், அதனை அகம் என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகம் என்றது ஓர் ஆகுபெயராம்"[61] என்பதனால் அறியலாம். இறைவனாகிய தலைவனைத் தம் நெஞ்சில் இறுத்தித் தாமும் அவனுடன் கலந்து, எல்லையிலா உவகைகொண்டு அந்தத் தலைவனின் பலவாகிய குணங்களைக் கூறி நெஞ்சுருகப் போற்றுதற்கு ஆழ்வார்களுக்கு அகத்துறைப் பாடல்களும் ஓர் உத்தியாயிற்று.

> "சங்க காலத்தில் சிறப்புற்றிருந்த இயற்கை நெறியின் ஓர் அமிசமான உலகியற் காதல், பக்திப் போர்வையிலே மீண்டும் தலைகாட்டுகிறது. புலவர்கள் தங்கள் இதயங்களைத் திறந்து, இயல்பாக எழும் காதலுணர்ச்சிகளைக் கடவுள் பேரில் வெளியிடுகின்றனர். கோகுலத்திலே, பிருந்தா வனத்திலே, கண்ணன் கோபிகைகளுடன் செய்த லீலைகள், ஆழ்வார்கள் பக்திக் காதலைப் பாடும்போது, அடிப்படையாக அமைந்து அப்பாடல்களுக்கு இயற்கைத் தன்மையை அளிக்கின்றன"[62]

என்னும் கூற்று நோக்கத்தக்கது.

கண்ணனைக் குழந்தையாகக் கண்டு கனிந்துருகிய பெரியாழ்வாரின் தாய்மை உள்ளம் அவனைக் காதலனாகவும், தன்னைக் காதலியாகவும் கொண்டும் சுவை சேர்க்கின்றது. காலின் பின்வரும் கண்ணனைக் கண்டு கன்னியர் காமுறல்,[63] மாயன்மேல்மகள் மாலுறு கோலம் தாயவள் கூறல்,[64] மாயவன் பின்சென்ற மகளைத் தாயவள் உன்னி அதவுதல்,[65] ஆகியன அகப்பொருள் பாடல்களாகும். கண்ணனிடம் தன்னை இழந்து மேனி வாடிய மகளுக்குத் தாய் இரங்கல், தலைவன் பின்சென்ற மகளுக்காகப் புலம்பல் என்னும் துறைநிலைகள் இங்குப் பொருந்துகின்றன.

சமயப் பாக்களில் இடம்பெறும் அகப்பொருட் பாடல்களின் தலைவன் இறைவன். ஆகவே, தலைவன் கூற்றாக வரும் பகுதிகள் அரிதாகவும், தலைவி, தோழி, தாயர் ஆகியோர் கூற்றாக வரும் பாடல்கள் மிகுதியாகவும் காணப்படுகின்றன.

அருளாளர்களின் பாடல்கள் ஆன்மாக்கள் இறைவனை அடைந்து இன்புறுவதையே குறிக்கோளாகக் கொண்டவை. எனவே, தலைவனை யடைய விரும்பும் தலைவியின் நிலை இவற்றில் விரிவாகக் கூறப்படும். தோழி, தாயர் கூற்றாக வரும் பாக்களும் தலைவியின் உள்ள நிலையை விளக்குவன வாகவே உள்ளன. சமயச் சான்றோர்களின் இறையனுபவம் சிற்றின்பக் காதற் பாக்களாக வெளிவந்து, பேரின்பத் தேன் சொரியும் பக்தி மலர்களாகக் காட்சியளிக்கின்றன.

தாய் சொல்லுவது போல் வடிவெடுத்தவை 'தாய்ப் பாசுரம்" என்றும், தலைவி கூறுவது போல் உருவெடுத்தவை 'தலைவி பாசுரம்' என்றும், தோழி கூறுவது போல் வெளிவந்தவை 'தோழி பாசுரம்' என்றும் பெயர்களைப் பெறும். இவ்வாறு மூவகையாகப் பெயர்பெறும் கூற்றுகள் நிகழ்ந்து பாசுரங்கள் வெளிப்பட்டாலும் பாசுரங்களைப் பாடுவோர் ஆழ்வார்களே யாவர்.

கண்ணன் தன்னைப் பலவாறு அழகுசெய்து கொண்டு குழலூதுவது இசைபாடுவது போல் மேற்கொண்டு, தன் தோழருடன் பெரிய ஓலக்கமாகச் சூழ்ந்து திருவாய்ப்பாடி மீண்டுவரும் அழகைக் கண்ட இடைப்பெண்கள் அவன் திறத்தில் ஆழ்ந்து ஈடுபட்ட காட்சியைப் பெரியாழ்வார்,

"தழைகளும் தொங்கலும் ததும்பி யெங்கும்
தண்ணுமை யெக்கம்மத் தளிதாழ் பீலி,
குழல்களும் கீதமு மாகி யெங்கும்
கோவிந்தன் வருகின்ற கூட்டங் கண்டு,
மழைகொலோ வருகின்ற தென்று சொல்லி
மங்கைமார் சாலக வாசல் பற்றி,

நுழைவனர் நிற்பன ராகி எங்கும்
உள்ளம் விட்டூண் மறந்தொழிந் தனரே"[66]

என்று புலப்படுத்துகின்றார்.

"கண்ணனின் சேர்க்கையால் ஆயர் மங்கையர் அடைவது ஈறிலின்பம். அவர்கள் கூட்டுறவால் அவன் அடைவது ஆனந்தம். இங்ஙனம் ஒருதலைக் காமமின்றி, இருதலையும் ஒரே இன்பவெள்ளம் பெருகிற்று. ஆயர் மகளிருக்கும் மாயோனுக்கும் இத்தகைய தொடர்பு எக்காலத்தும் உண்டு"[67]

என்பர். எனவே, இடைக்காலத்தில் தோன்றிய பெரியாழ்வார் அந்த ஈறில் இன்பக் காட்சியை,

"என்று மிவனையொப் பாரை நங்காய்!
கண்டறி யேன்ஏடி வந்து காணாய்,
ஒன்றும் நில்லா வளைகழன் றுதுகில்
ஏந்திள முலையு மென்வச மல்லவே"[68]

என்று எடுத்துக்காட்டுகின்றார். இப்பகுதியில் தாய் நிலையில் நின்று பாடும் பாடல்களாக நான்கு பாடல்கள் காணப்படுகின்றன."

ஆழ்வார் தாம் ஒரு தாயின் தன்மையில் நின்று, கண்ணன் கன்று மேய்ந்து மீண்டுவரும் காட்சியை,

"வருகையில் வாடிய பிள்ளை கண்ணன்
மஞ்சளும் மேனியும் வடிவும் கண்டாள்,
அருகேநின் றாளென்பெண் நோக்கிக் கண்டாள்
அதுகண் டிவ்வூரொன் றுபுணர்க் கின்றதே"[70]

என்று பாடுகிறார். கண்ணன் காட்டில் கன்றுகளை மேய்த்து விட்டுத் தன் தோழர்களுடன் மீண்டு வருகையில் பெண் சற்று உற்று நோக்கினாள் என்னும் நயத்தைக் காட்டுகிறார். காணுதல், நோக்குதல் என்னும் இரு சொற்களுக்கும் ஒரு சிறிது வேறுபாடுள்ளது. இதனை,

"யானோக்கும் காலை நிலனோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்"[71]

என்கிறார் திருவள்ளுவர்.

"புணர் துணையோ டாடும் பொறியலவ னோக்கி
யிணர் ததையும் பூங்கான லென்னையு நோக்கி"[72]

என்னும் அடிகளால் சிலப்பதிகாரம் கூறுகிறது.

"...கோட்டெ டருத்தம் செய்த நோக்கம்
எங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே"[73]

என்று சீவக சிந்தாமணியும் கூறுகிறது. பெரியாழ்வார் தாய் நிலையில் நின்று, தன் மகள் நோக்கினைக் கூறுகையில் அதில் ஒரு நோக்கம் இருப்பதனைப் புலப்படுத்துகின்றார். வாட்ட முற்றிருந்த அஞ்சனவண்ணன் திருமேனியை இந்தப்பெண் பொதுவாகக் கண்டாள்; அதாவது குறிப்பாக நோக்கினாள்; அதனையே காரணமாகக் கொண்டு ஆயர் சேரியில் உள்ளவர்கள் இருவரிடையேயும் ஒரு தொடர்பினை ஏறிட்டு அலர் தூற்றப் புணர்க்கின்றனர் என்று தாய் கூறுகின்றாள். குறிப் புணர்தல் என்னும் அகக் கண்ணோட்டம் இங்குத் தெளிவு படுத்தப் படுதலோடு, அந்தத் தாய்வழி 'ஊர் ஒன்று புணர்த்தல்' (அலர்) என்னும் அகமரபினைப் படைத்துக் காட்டுவதையும் காணலாம்.

கண்ணனின் மேனியழகினைத் தன் மகள் பார்த்து அறிவிழந்தாள் என்று ஒரு தாய் கூறுவதாகப் பெரியாழ்வார்,

"கோலச் செந்தா மரைக்கண் மிளிரக்
குழலூதி இசைபாடிக் குனிந்து ஆயரோடு
ஆலித்து வருகின்ற ஆயப் பிள்ளை
அழகு கண்டென் மகளயர்க் கின்றதே"[74]

என்று எடுத்துக்காட்டுகின்றார். மேலும் தலைவனைக் கண்டு கருத்தழியும் போது கைவளை கழலப்பெறுவதனை,

"இந்திரன் போல்வரு மாயப் பிள்ளை
எதிர்நின் றங் கினவளை யிழவே லென்ன,
சந்தியில் நின்று கண்டீர் நங்கை
தன்துகி லொடுசரி வளைகழல் கின்றதே"[75]

என்று கூறுகின்றார். கைவளை கழலப் பெறுவது இங்குக் காட்டப்பெறும் ஓர் அகமரபாகத் தோன்றுகின்றது.

கண்ணனது வடிவழகினை ஒரு பெண் கண்டு விருப்புற்று, அவன் வரும்வழியில் விலங்கி நில்லாமல் அவனுக்கு எதிர்முக மாக நின்று தனது சங்கு வளைகள் கழலப்பெற்று, உடலும் இளைக்கப் பெற்றாள் என்பதனை,

"அலங்காரத் தால்வரு மாயப் பிள்ளை
அழகுகண் டென்மக ளாசைப் பட்டு,
விலங்கிநில் லாதெதிர் நின்று கண்டீர்
வெள்வளை கழன்று மெய்ம்மெலி கின்றதே"[76]

என்கிறார். இதுவும் தாய்ப்பாசுரமே.

ஏழாந் திருமொழி முழுவதும் தாய்ப்பாசுரமாகவே அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. மணிவண்ணன் மேல் மாலுற்ற தன் பெண் மிக இளம்பருவத்தினள் என்னும் எண்ணம் மீதூரப் பெற்றுத் தாய் புலம்புவதாக இத்திருமொழி காணப்படுகிறது.

"வாயில் பல்லு மெழுந்தில
மயிரும் முடிகூ டிற்றில"[77]

என்றும்,

"செய்ய நூலின் சிற்றாடை
செப்பி னுடுக்கவும் வல்லளல்லள்,
கையி னிற்சிறு தூதை
யோடிவள் முற்றில் பிரிந்துமிலள்"[78]

என்றும் அவள் இளமையைப் பாடுகின்றது பாசுரம். தன் பெண்ணைத் தோழியரே ஆழியானிடம் கொண்டுபோய் அகப் படுத்தி விட்டனர் என்று எண்ணுகின்றாள் தாய். 'மூழை உப்பு அறியாது' என்ற முதுரைக் கேற்பச் சுவை ஒன்றும் (இன்பச்சுவை) அறிய வல்லமையற்றவளாய்த் தன் பெண் விளங்குகின்றாள். ஆகவே பேதையாகிய அவளைத் தோழிகள் பல சூழ்ச்சிகள் செய்து, விளையாட அழைத்துச் சென்று, 'ஆழியான்' என்று சிறப்புற்ற ஒருவராலும் ஆழநிலை காண வொண்ணாத கீழாற்றில் தள்ளி அதிலே அகப்படுத்திவிட்டனர் என்று தாய் முறையிட்டு வருந்துகின்றாள்.[79] இவ்வாறு மாயவன் மேல் மகள் மாலுறு கோலம் தாயவள் கூறும் திறத்தில் தாய், தோழி, தலைவி ஆகிய அகமாந்தரின் பங்கும் பண்பும் ஒருசேர உணரக் கிடக்கின்றன.

நாடும் ஊரும் அறிய வெளிப்படையாக வீட்டைவிட்டுச் சென்று, நல்ல துழாய் அலங்கல் சூடிய நாரணன் செல்லும் இடமெல்லாம் தேடித் திரிகின்றாள் தலைவி. இவள் நற்குடிக் குக் கேடு சூழ்வார் பலர் இருக்க, இவருக்கு வேண்டியவராயி ருக்கின்ற சிலர்,

"...கேசவ னோடிவளை,
பாடி காவலி டுமி
னென்றென்று பார்தடு மாறினதே"[80]

என்று கூறும் வகையில் இவளைக் கொண்டு போய்க் காவலிடுங் கள் என்று கூறினர்.

ஆனால் 'இற்செறியுங்கள்' என்று யாரும் கூறவில்லையே என்று தாய் எண்ணினாள். 'இற்செறித்தல்' என்னும் பண்டைய வழக்கு முறையை இணைத்து நோக்குவான் வேண்டிப் 'பாடி காவல்' என்னும் தொடர் சிறப்புற அமைக் கப்படுகிறது. அதனால் சிறைகாப்பும் பயனில்லை என்பதும் அடுத்துக் கூறப்படுகின்றது.

இத்தாய் தன் மகளின் நெற்றிக்கு அணியாகப் பட்டத்தைக் கட்டியும், காதுக்குப் பொற்றோடு இட்டும், காலுக்குப் பாடகமும், சிலம்பும் அணிவித்தும் அவள் விருப்பத்திற்கேற்ப வளர்த்தெடுத்தாள். ஆயினும் இவள் தன்னோடு இருக்க மாட்டாமல், 'பூவைப் பூவண்ணா' என்று கண்ணபிரானை வாய்விட்டு அழைக்கிறாள் என்று மாயவன் மேல் தன்மகள் மாலுற்ற நிலையைத் தாய் எடுத்துக் கூறுகின்றாள்.[81]
மேலும்,

"கேசவா வென்றும் கேடிலீ
 யென்றும் கிஞ்சுக வாய்மொழியாள்,
வாச வார்குழல் மங்கை
 மீரிவள் மாலுறு கின்றாளே"[82]

என்னும் பாசுரத்தில் அத்தாயின் பரிவும் பிரிவும் சிறப்பாக விளக்கப்படுகின்றன.

சங்க இலக்கியங்களிலும், இடைக்கால இலக்கியங்களிலும் காணாத அளவிற்கு ஆழ்வார் பாடல்களாகிய பக்தி இலக்கியங்களில் தலைவன் பால் பித்தேறிய பெண்ணின் இயல்புகள் காட்சியளிக்கின்றன.
இதனை,

"காறை பூணும் கண்ணாடி
 காணும்தன் கையில் வளைகுலுக்கும்,
கூறை யுடுக்கு மயர்க்கும்தன்
 கொவ்வைச் செவ்வாய் திருத்தும்,
தேறித் தேறிநின் றாயிரம்பேர்த்
 தேவன் திறம்பி தற்றும்,
மாறில் மாமணி வண்ணன்
 மேலிவள் மாலுறு கின்றாளே"[83]

என்று வரும் பெரியாழ்வார் பாசுரத்தால் அறியலாம். இப்பாசுரம் அவர்தம் பெண்கொடியாள் ஆண்டாளின் திருச்செயல்களை மனக்கண்முன் கொண்டு நிறுத்திப் பாடுவது

போல் தோன்றுகிறது. நற்றாய் இரங்சலாக அமைந்த இப் பாடல் ஆழ்வார் தம் மனநிலையினையே வெளிப்படுத்துவதா கக் கூறலாம். பகற்குறி, இரவுக்குறி ஆகியவை குறித்து, குறி யிடத்து வந்து காத்து நின்ற தலைவனின் நிலையைச் சங்கப் பாடல்கள் சுவையாகக் காட்டுகின்றன; இங்குத் தலைவன் இறைவனாதலின் அந்த மாமணி வண்ணன் மேல் மாலுற்ற மங்கையின் செயல்கள் சிறப்பாகக் காட்டப்பெறுகின்றன.

அறத்தொடு நிற்றல் என்னும் துறை களவின் எல்லைக்குள் நிகழ்வதைக் குறிக்கும் ஒரு செயலாகும். களவின்கண் கூடிய தலைவனும் தலைவியும் அறத்திற்கு மாறுபடாத நிலையில் நிற்றலே அறத்தொடு நிற்றலாகும்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் இரண்டே நூற் பாக்களில் அறத்தொடு நிற்றல் இடம் பெறுகின்றது. இவற்றுள் தோழி அறத்தொடு நிற்கும் மரபினை,

"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி என்ப"[84]

என்னும் நூற்பாவால் அறியலாம். மற்றொன்று அறத்தொடு நிற்றல் எழுவகைப்படும் என எடுத்துரைப்பதாகும்.[85]

தலைவன், தலைவி என்னும் இருவரும் இயற்கைப் புணர்ச் சியாகிய முதற்காட்சியில் ஒருவரையொருவர் சந்தித்த முறைமை தூய அன்பொடு பொருந்திய அறத்தின் பாற்பட் டதே என்பதனை அறிவுறுத்தல் களவு வெளிப்படுத்தலின் நோக்கமாகும். ஆதலால் அங்ஙனம் வெளிப்படுத்தும் முறை யினை அறத்தொடு நிற்றல் என்பர் தொல்காப்பியர்.

ஈண்டு, இத்திருமொழியில் அறத்தொடு நிற்றல் ஒரு புதுப் பொலிவுடன் தோற்றுவதை,

"கைத்தலத் துள்ள மாடழியக்
கண்ணா லங்கள் செய்து, இவளை
வைத்து வைத்துக் கொண்டென்ன

வாணிபம் நம்மை வடுப்படுத்தும்,
செய்த்த லையெழு நாற்றுப்
போலவன் செய்வன செய்துகொள்ள,
மைத்த டமுகில் வண்ணன்
பக்கல் வளர விடுமின்களே''[86]

என்னும் இப்பாடலில் காணலாம். இது தாயை நோக்கி உறவினர் கூறுவது போல் தாய் தானே கூறுவதாகும். கையிலுள்ள பணத்தைச் செலவழித்து இவளுக்குத் (தலைவி) திருமணத்தைச் செய்து இவளைக் காத்து வருவதனால் ஒரு பயனும்ஏற்படாது. அதற்கு மாறாகத் தனக்கு வடுவை உண்டாக்குவாள் என்று கூறுகின்றாள். அதனைக்கேட்ட சுற்றத்தார் வயலிலே வளர்ந்த நாற்றை அவ்வயலுக்குரியவன் தன் விருப்பத்திற்கேற்றவாறு பயன்படுத்திக் கொள்வது போல இவளையும் தலைவனாகிய அவன் தான் செய்ய நினைத்தவற்றைத் தடையறச் செய்து கொள்ளுமாறு கருமுகில் வண்ணனாகிய அக்கண்ணனிடத்தில் இவளைக் கொண்டு போய்ச் சேர்த்துவிடுங்கள் என்று கூறினர், தாயும் அதற்கு உடன்பட்டாள்.

உலகியலுக்கு ஒத்த நிலையில் இக்கூற்று அமைந்திருப்பது சிறப்பாகும். ஒருவன் தன் நிலத்தில் விட்ட நாற்றைத் தன் விருப்பத்திற்கு ஏற்றவாறு பயன்படுத்திக் கொள்வது போல கண்ணபிரானும் தனது உடைமையை (இவளைத்) தன் எண்ணப்படிப் பயன் படுத்திக் கொள்ளுமாறு அவ்விடத்தில் கொண்டு சேர்த்துவிடுங்கள் எனச் செய்ய வேண்டிய செயலை வரையறை செய்தனர் என்பது குறிப்பாகும். மேலும் அவர்கள்

''மருத்து வப்பதம் நீங்கினா
ளென்னும் வார்த்தை படுவதன்முன்,
ஒருப்ப டுத்திடு மின்இவளை
உலகளந் தானி டைக்கே''[87]

என்று கூறுகின்றனர். அதாவது, மருத்துவன் ஒருவன் தான் செய்யும் மருந்தில் பதம்பார்த்துச் செய்யாவிடில் அது முருகிக் கெட்டுக் கைதவறிப் போவதுபோல், இவள் பாதம் பார்த்துச்

செய்யாமை யாலேயே இவள் கைகழிந்து போயிடும் என்ற பழிச்சொல் பிறப்பதற்குமுன் இவளை வரைவுபடுத்த வேண்டும் என்பது நன்கு வலியுறுத்தப்படுகின்றது.

அலருக்கு அஞ்சி வரைவு முனைதல் இங்கு அகத்துறைக் குறிப்பாக அமைந்திருப்பதைக் காணலாம்.

நற்றாயானவள் தன் மகள் இளமையிலேயே கண்ணன் மாட்டு மாலுற்றிருக்கும் திறத்தை எடுத்துக் கூறி, அவனோடு சேர்த்து வைக்கும்படி இரங்கிக் கூறுவதாக ஏழாம் திருமொழி அமைந்துள்ளது. எட்டாந் திருமொழி, தலைவனுடன் சென்ற மகளைக் குறித்துத் தாய் பலவாறு வருந்திக் கூறுவதாக உள்ளது. இது உடன் போக்குப் பகுதியினைச் சேர்ந்ததாகும்.

களவுமணம் கொண்டார் நிலையைத் தோழி அறத்தொடு நிற்பதால் தமர் அறிந்து அவர்தம் திருமணத்திற்கு ஒருப்பட்டு கற்பு வாழ்க்கையில் புகச்செய்வர். சில சமயங்களில் தலைவியின் தமர் அவளை இற்செறித்து, அவளுடைய களவொழுக்கத்தினைத் தடை செய்வாராயின், தலைவி தலைவனுடன் அவன் ஊருக்குப் பிறர் அறியாவகையில் தனித்துச் செல்லுதலும் உண்டு; இதனை 'உடன் போக்கு' என்பர்.

இத் திருமொழியில்,

"வேடர் மறக்குலம் போலே
வேண்டிற்றுச் செய்தென் மகளைக்
கூடிய கூட்டமே யாகக்
கொண்டு குடிவாழுங் கொல்லோ?"[88]

என்றதனால் களவுமணம் (கந்தர்வ மணம்) கூறப்பட்டிருத்தலின் உடன் போக்குக் குறிப்பு வலியுறுத்தப்படுகிறது. ஆகவே உடன்போக்கிற் சென்ற தலைவியைக் குறித்துத் தாய் வருந்தி, மேலும் அவன் மனையிலேயே தன் மகளை வரைந்துகொண்டு இல்வாழ்க்கைப் படுத்தினானே என்று இரங்கிப் பலவாறாக வருந்திய தன்மையை இந்தப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. "தலைவன் பின் சென்ற மகளைக் குறித்துத் தாய் பலபடி உன்னி ஏங்குதல்" என்று துறைப்பொருள் அமைந்திருக்கின்

றது. தாய் ஒருத்தியின் அரற்றலை இத்திருமொழி சிறப்பாகக் கூறுகிறது.

"இல்லம் வெறியோடிற் றாலோ
என் மகளை யெங்கும் காணேன்"[89]

என்று தாய் தன் இல்லமானது வெறிச்சென்று இருக்கின்ற நிலையை எடுத்துக் கூறுகின்றாள். உடன் போக்கிற் சென்ற தன் மகளைத் தேடியும் ஓரிடத்திலும் காணாதவளாகி 'மல்லரை யட்டவன் பின் போய் வடமதுரைக் கருகிலுள்ள திருவாய்ப் பாடியில் புகுந்தனளோ அறியேன்' என்று தாய்வருந்துகின்றாள். பிற அக இலக்கியத் தாயருக்கும் இத் திருமொழித் தாய்க்கும் ஒரு வேறுபாடு காணப்படுகிறது. இத்தாய்க்குத் தன் மகள் சென்றவிடம் தெரியவில்லையே தவிர, அவளைக் கொண்டு போனவன் கண்ணனே என்று தெளிகின்றாள். அவள் 'மல்லரை யட்டவன்'[90], 'நாராயணன்'[91] என்றெல்லாம் பல பெயர் கூறி அந்த மாயவன்பின் சென்றாள் என்று தெளிந்தவள் இத்தாய்.

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்
வதுவே"[92]

எனக் கற்புநெறி மணமுறைக்குத் தொல்காப்பியர் இலக்கணம் கூறுகிறார். இந் நெறியினை,

"குமரி மணஞ்செய்து கொண்டு
கோலஞ்செய் தில்லத் திருத்தி,
தமரும் பிறரு மறியத்
தாமோ தரற்கென்று சாற்றி,
அமரர் பதியுடைத் தேவி
அரசாணி யைவழி பட்டு,
துமில மெழப்பறை கொட்டித்
தோரணம் நாட்டிடுங் கொல்லோ?"[93]

என்னும் பெரியாழ்வார் பாசுரத்தின் தாய்க்கூற்றின் வழி அறியலாம்.

உடன் செல்லும் தலைவியை இடைவழியின் கண் கண்ட தமர் அவர்தம் அன்பின் முதிர்ச்சி கண்டு மீள்வர். தலைவன் உலகறியத் திருமணம் செய்து கொள்வான். தமர் முன்வரா நிலையில் தலைவனே தன் ஊரில் தலைவியை உலகறிய மணம் செய்து கொள்வதும் உண்டு. இம்முறையையெல்லாம் பெரியாழ்வார் திருமொழி இங்கு எடுத்துக் காட்டுகிறது.

பெரியாழ்வார் தாய்நிலையில் நின்று வருந்துவதனை

"ஒருமகள் தன்னை, யுடையேன்
உலகம் நிறைந்த புகழால்,
திருமகள் போல வளர்த்தேன்
செங் கண்மால் தான்கொண்டு போனான்,
பெருமக ளாய்க்குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமக ளைக்கண்டு கந்து
மணாட்டுப்பு றம் செய்யுங் கொல்லோ"[94]

என்னும் பாசுரத்தால் காணலாம். இத்திருப்பூட்டு ஏற்றமிகு பாட்டாகும். பெரியாழ்வார் தாம் வளர்த்தெடுத்த ஆண்டாளைத் திருவரங்கன் ஆட்கொண்ட பின்பாடியதாகும். இதனைத் தொடர்ந்த சில பாடல்களிலும் பெரியாழ்வார் தாய் நிலையில் நின்று வருந்திப் புலம்புகின்றார்.

இப்பாடல்களை நோக்கும்போது,

"ஒருமக ளுடையேன் மன்னே யவளும்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு
பெருமலை யருஞ்சுர நெருநற் சென்றனள்"[95]

என்று வருந்தும் நற்றிணையில் கூறப்படும் தாய் நினைவுக்கு வருகின்றாள்.

தலைவி உடன்போகிய வழித் தலைவியின் தாய்க்குப் பெருந்துயரம் ஏற்படுகிறது. அவள் தலைவியின் பண்புகளை

எண்ணிப் பார்க்கின்றாள். அவளுடைய நெஞ்சக் கிழியில் குழவிப் பருவம் முதல் தவழ்ந்து மொழிபயின்று, தளர்நடை இட்டு வளர்ந்ததும் பிறவும் தோன்றுகின்றன. மேலும் அவள் உள்ளத்தில் தலைவியின் உணவும், உடையும், உரையும், விளை யாட்டும் உருக்கொண்டு நிற்கின்றன. அகக்கண்ணில் காணும் தாயின் சிறந்த அறிவு இத் திருமொழியில் அவற்றை உருப் படுத்தி வெளியிடுகின்றது.

அவள் பிரிவை நினைக்குங் காலத்துத் தலைவியின் நினை யும் உடன் தோன்றுகின்றது. இதனை,

> ''குடியில் பிறந்தவர் செய்யும்
> குணமொன்றும் செய்திலனந்தோ,
> நடையொன்றும் செய்திலன் நங்காய்!
> நந்தகோ பன்மகன் கண்ணன்,
> இடையிரு பாலும்வ ணங்க
> இளைத்திளைத் தென்மக ளேங்கி,
> சடைகயி றேபற்றி வாங்கிக்
> கைதழும் பேறிடுங் கொல்லோ'[96]

என்று தாய் தன்மன வருத்தத்தை அயல்வீட்டிலுள்ள ஒருத்தி யிடம் கூறுகின்றாள். ''நற்குடியில் பிறந்தவர்கள் பெண்களை முறையிலே வரைந்துகொண்டு வெளியிற் கொண்டு போவ தில்லை என்றொரு சம்பிரதாயமுண்டு; அங்ஙனம் செய்திலன் இக்கண்ணபிரான்,'[97] என்கிறாள்.

இனி, உலகத்திற்குப் பொதுவான நடத்தை முறை சில உண்டே; அவையும் செய்திலன்; அதற்கு மாறாக வீட்டிற்குக் கொண்டுபோய்த் தயிர் கடைய வைத்ததனால் அவள் கைகள் காய்ப்புக் காய்த்து விடுமே என்று வருந்தினாள்.

ஈண்டு, 'தவிந்த பருவத்தில் செல்லாது வெதிர் நெல் விளையும் வேனில் வெங்காலத்தில் கொண்டுதலைக் கழிந் தானே' என்று மனம் வெதும்புகின்ற அகநானூற்றுத் தாய் கண்முன் நிற்கின்றாள்.[98]

பெரியாழ்வார் தாய்நிலையில் நின்று பேசும்போது, ''என் மகள் கிழக்கு வெளுப்பதற்குமுன் உறக்கத்தை விட்டொழிந்து, பின் வெண்ணிறத் தோய்தயிர் தன்னைக் கடையும்படியான சக்தியைத் தான் உடையளோ? செந்தாமரைக் கண்ணனாகிய உலகளந்த பெருமான் என்மகளை முறைகேடான இழி தொழில்களில் ஏவிச்செய்து அவளுடைய பெருமை குலையும் படிச் செய்வனோ; அன்றி அவள் பெருமைக்குத் தக்கவாறு திருவுள்ளம் பற்றுவனோ? அறியேன்'[99] என்று வருந்தினார். மேலும்,

''மாயவன் பின்வழி சென்று
வழியிடை மாற்றங்கள் கேட்டு,
ஆயர்கள் சேரியி லும்புக்
கங்குத்தை மாற்றமு மெல்லாம்,
தாயவள் சொல்லிய சொல்லைத்
தண்புது வைப்பட்டன் சொன்ன
தூய தமிழ்பத்தும் வல்லார்
தூமணி வண்ண ற்கா ளாரே''[100]

என்னும் பாடலால் ஆயர்பாடியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் பெரியாழ்வார் தாமே அத்தாயாகித் தூய தமிழில் அமைத்துள்ளதை அறியலாம்.

### யாப்பமைதி

பெரியாழ்வார் பாசுரங்களின் நடையழகிற்கு அவர் அமைத்துக்கொண்ட யாப்பமைதியும் துணைசெய்துள்ளது.

பெரியாழ்வார் ஒரு திருப்பல்லாண்டும், நாற்பத்து மூன்று திருமொழிகளையும் பாடியுள்ளார்.

திருப்பல்லாண்டின் முதற்பாடல் குறள்வெண்செந்துறை என்னும் யாப்பில் அமைந்தது. முதலடியில் அறுசீரும், இரண்டாமடியில் எழுசீருமாக விளங்குகிறது அந்தப் பல்லாண்டு. அடுத்து வருகின்ற பதினொரு பாடல்களும் அறுசீர் ஆசிரிய விருத்தங்களாகப் பாடப் பெற்றுள்ளன.

குறள்வெண்செந்துறை, அறுசீர் ஆசிரிய விருத்தம், கலித்தாழிசை, எண்சீர் ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்துறை, எழுசீர் ஆசிரிய விருத்தம், சந்தக் கலிவிருத்தம் ஆகிய பாவினங்களில் தம் பாடல்களை அமைத்துள்ளார் பெரியாழ்வார்,

பெரியாழ்வார் புனைந்த பாக்களின் யாப்பு நோக்கில் ஆய்ந்தால் கீழ்க்காணும் செய்திகளை அறியலாம்.

1) பெரியாழ்வாரால் மிகுதியாகப் பாடப்பெற்ற பாவினங்கள் அறுசீர் ஆசிரிய விருத்தமும் (104 பாசுரங்கள்), கலித்தாழிசையும் (104 பாசுரங்கள்) ஆகும்.

2) எண்சீர் விருத்தம் (83), கலிவிருத்தம் (74), கலிநிலைத்துறை (51), எழுசீர் விருத்தம் (45) ஆகியவை ஆழ்வார் பயன்படுத்தியுள்ள பிற யாப்பு வடிவங்கள். குறள்வெண் செந்துறையில் ஒரே ஒரு பாட்டுத்தான் பாடியுள்ளார்.

3) ஆழ்வார் பாடிய கலிவிருத்தங்களுள் 'நாவ காரியம்' என்னும் திருமொழி மட்டும் 'சந்தக் கலிவிருத்தம்' எனப்படுகிறது.

4) கலித்தாழிசை அமைந்த திருமொழிகள் பத்து: ஒவ்வொன்றின் இறுதியிலும் ஒரு கலிவிருத்தம் அமைந்துள்ளது. (இதனைக் கொச்சகக் கலிப்பா என்றும் கூறலாம்).

5) கலிப்பாவின் இனங்களான (அ) கலித்தாழிசை (104), ஆ) கலிவிருத்தம் (84), (இ) கலித்துறை (51) ஆக-240 பாடல்கள்-- ஆகிய இம்மூன்றில் ஆழ்வாரின் பாடல்களுள் செம்பாதி அமைந்துள்ளமையைக் காண்கிறோம்.

6) ஆசிரியப்பாவின் இனங்களான (அ) அறுசீர் ஆசிரிய விருத்தம் (104), (ஆ) எழுசீர் ஆசிரிய விருத்தம் (45), (இ) எண்சீர் ஆசிரிய விருத்தம் (84) ஆகிய மூன்றிலும் 233 பாடல்கள் உள்ளன.

7) ஆழ்வாரின் காலத்தில் இப்பாவினங்களுக்கு இருந்த செல்வாக்கினை இவற்றால் அறியலாம்.

8) வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நான்கு பாடல் வகைகளும் ஆழ்வாரால் பயன்படுத்தப் பெற வில்லை என்பது கருதத்தக்கது.

9) பாவகைகளுக்கு இருந்த செல்வாக்கை விடப் பாவினங் களுக்கு இருந்த செல்வாக்கும் இதனால் புலப்படுகிறது.

10) கலித்தாழிசைகள் அனைத்தும் 'நாலடிமேல் வைப்பு' என்று சொல்லத்தக்க வகையில் இறுதியில் ஐந்தாவதாக மடக் கடி பெற்று வருகின்றன.

11) முதலாழ்வார்கள் மூவர், திருமழிசை ஆழ்வார், திரு மங்கை ஆழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் பயன்படுத்திய வெண்பாவினைப் பெரியாழ்வார் அறவே பயன்படுத்தவில்லை ஆனால் கலித்தாழிசை முதலிய பாடல்களில் மிகுதியான அள விற்கு வெண்டளை வருமாறே பாடியுள்ளார்.

12) விருத்தங்களைக் கூர்ந்து நோக்கினால் அன்று வழங்கிய பல்வேறு வடிவங்களை அறிய முடியும்.

13) பெரியாழ்வார் பாடியனவற்றுள் திருப்பல்லாண்டும், 43 திருமொழிகளுமே நமக்குக் கிடைத்துள்ளன. இவை ஐந்து பத்துக்களாக அமைந்துள்ளன. இறுதிப்பத்தில் நான்கு திரு மொழிகளே உள்ளன. ஒவ்வொரு பத்தும் ஒரே வகையில் அமையாமல் பாடல் வகைகள் கலந்தே வந்துள்ளன.

**அறுசீர் விருத்தம்**

அறுசீர் விருத்தத்திலேயே சில வேறுபட்ட ஓசையமைப்பு களை ஆழ்வார் பாடிக் காட்டியுள்ளார்.

"ஏடு நிலத்தி லிடுவதன் முன்னம்வந் தெங்கள் குழாம் புகுந்து"[101]

என்னும் பாடல்

மா, மா, விள, காய், மா, காய்

என்னும் வாய்பாட்டில் தொடங்குகிறது. இப்பாசுரத்தில் பெரிதும் வெண்டளை பயின்றுவரக் காண்கிறோம்.

"செக்க ரிடை நுனிக் கொம்பில் தோன்றும் சிறுபிறை முளைபோல்"[102]

என்னும் பாடல்,

மா, விள, மா, மா, விள, காய்

என்னும் வாய்பாட்டில் தொடங்குகிறது.

'காறை பூணும் கண்ணாடி காணும்தன் கையில் வளைகுலுக்கும்"[103]

என்னும் பாசுரம்,

மா, மா, காய், காய், மா, காய்

என்னும் வாய்பாட்டில் தொடங்குகிறது.

"மரவடியைத் தம்பிக்கு வான்பணையும் வைத்துப்போய் வானோரர் வாழ"[104]

என்னும் பாசுரம்,

காய். காய், காய், காய், மா, மா

என்னும் வாய்பாட்டில் தொடங்குகிறது.

இங்ஙனம் பல வேறுபட்ட சந்தங்களை அறுசீர் விருத்தத்தில் அமைத்துப் பாடுகிறார் நம்மாழ்வார்.

**எழுசீர் விருத்தம்**

எழுசீர் விருத்தத்தால் அமைந்த திருமொழிகள் நான்கு. இவற்றில் உள்ள நாற்பத்தைந்து பாடல்களில் இரண்டு குறிப்பிடத்தக்க சந்த வேறுபாடுகளைக் காண்கிறோம்.

"தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் தடித்தவெம் தாச ரதிபோய்"[105]

என்னும் பாசுரம்,

விள, மா, விள, மா, விள, மா, மா

என்னும் வாய்பாட்டில் அமைந்துள்ளது.

"கடியார் பொழிலணி வேங்கட வாகரும் போரே றேநீ யுகக்கும்"[106]

என்னும் பாசுரம்,

மா, விள, மா, விள, மா, மா, மா

என்னும் வாய்பாட்டில் அமைந்துள்ளது.

**எண்சீர் விருத்தம்**

எண்சீர் விருத்தத்தில் அமைந்துள்ள திருமொழிகள் எட்டு. இவற்றிலும் பலவேறு சந்த அமைப்புகள் காணப்படுகின்றன. கீழே காணும் இரண்டனைக் குறிப்பாகச் சுட்டலாம்.

''உய்ய வுலகுபடைத் துண்ட மணிவயிறா
ஊழிதோ றூழி ஆலி னிலையதன்மேல்''[107]

என்னும் பாசுரம்,

மா, விளம், மா, காய்,
விள, காய், மா, காய்

என்று வாய்பாடு பெறுகிறது. இப்பாடலில் 2, 4, 6, 8, ஆகிய சீர்கள் காய்ச்சீர்களாகவும், ஏனையவை மா அல்லது விளச் சீர்கள் ஆகவும் அமைந்துள்ளன.

''வருக வருக வருக இங்கே
வாமன நம்பீ வருக இங்கே''[108]

என்னும் பாசுரத்தில்

மா, மா, மா, மா,
மா, மா, மா, மா

என்னும் வாய்பாடு தொடக்கத்தில் அமைந்துள்ளது. இடையிடையில் விளச்சீரும் காய்ச்சீரும் இவ்வமைப்பில் கலந்து வருதலுண்டு.

**கலிவிருத்தம்**

நாற்சீர் நான்கடியாக வருவது கலிவிருத்தம் எனப்படும். இதில் சந்த வேறுபாடுகள் சிலவற்றை ஆழ்வார் கையாள்கிறார்.

''வண்ண மாடங்கள் சூழ்திருக் கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்''[109]

என்று தொடங்குவது முதற் பத்தின் முதல் திருமொழியில் உள்ள முதற்பாடல். இதில் பெரும்பான்மை அடிதோறும் நான்கு ஈரசைச் சீர்கள் இடம்பெறும்; ஒரோவழி மூவசைச்சீரும் வருதல் உண்டு. மாடங்கள், கோட்டியூர் என்பன அவ்வாறு வந்தவை.

"அரவணையாய்! ஆயரேறே! அம்மமுண்ணத் துயிலெழாயே
இரவுமுண்ணா துறங்கிநீபோய் இன்றுமுச்சி
கொண்டதாலோ"[110]

என்னும் கலிவிருத்தப்பாசுரத்தில்

காய், காய், காய், காய்
காய், காய், காய், காய்,

என்னும் வாய்பாடு அமையக் காணலாம்.

"மாவலி தன்னுடைய மகன்வாணன் மகவிருந்த
காவலைக் கட்டழித்த தனிக்காளை கருதும்மலை"[111]

என்னும் கலிவிருத்தம்,

விளம், காய், காய், காய்,
விளம், காய், காய், காய்

என்னும் வாய்பாட்டில் அமைந்துள்ளது.

இத்தகைய சந்த வேறுபாடுகள் பாடலுக்கு எழில் ஊட்டுவனவாகும்; சொல்லப்படும் பாடுபொருளுக்கு ஏற்ப இந்த வேறுபாடுகள் அமைந்துள்ளன என்பதும் இங்குக்கருதத்தக்கது.

**அலகிடுதலில் வேறுபாடு**

ஆழ்வார் பாடல்களுள் சில வேறுபட்ட பாவினங்களைச் சார்ந்தனவாக அலகிட்டுக் கூறவும் இடமுண்டு.

(அ) "கடல்கடைந் தமுதங்கொண்டு
கலசத்தை நிறைத்தாற்போல்,
உடலுருகி வாய்திறந்து
மடுத்துன்னை நிறைத்துக்கொண்டேன்"[112]

என்னும் பாடல் நாற்சீர் நான்கடியாகப் பதிப்பிக்கப்பட்டுக் கலி விருத்தமாகச் சுட்டப்படுகிறது, மயிலை மாதவதாசன் பதிப்பில். இதனையே,

"கடல்கடைந் தமுதங் கொண்டு கலசத்தை நிறைத்தாற் போல்
உட லுருகி வாய்தி றந்து மடுத்துன்னை நிறைத்துக்
கொண்டேன்"[113]

என்று ஐந்து சீராக அடிதோறும் அலகிற்குக் கலித்துறையாகக் கொள்வதுமுண்டு.

(2) "நாவகாரியம் சொல்லிலாதவர்
நாடொறும்விருந் தோம்புவார்,
தேவகாரியம் செய்துவேதம்
பயின்றுவாழ்திருக் கோட் டியூர்"[114]

என்பதனைச் சந்தக் கலிவிருத்தம் என்பர் மயிலை மாதவ தாசன். ஆனால் இதனையே,

"நாவ காரியம் சொல்லி லாதவர்
நாடொ றும்விருந் தோம்புவார்
தேவ காரியம் செய்து வேதம்
பயின்று வாழ்திருக் கோட்டியூர்"[115]

என்று பிரித்து எழுசீர் விருத்தமாகவும் கொள்ளலாம்.

(3) "அரவணையாய் ஆயரேறே அம்மமுண்ணத்
துயிலெழாயே"[116]

என்பது கலிவிருத்தமாகக் குறிக்கப்படுவது. இதனையே

"அரவ ணையாய் ஆய ரேறே அம்ம முண்ணத்
துயிலெ ழாயே"

என்று பிரிப்பின் எண்சீர் விருத்தமாகும்.

(4) "வெண்ணெய் விழுங்கி வெறுங்க லத்தை
வெற்பிடை யிட்டத னோசைகேட்கும்"[117]

என்பது பெரியாழ்வார் பாடியுள்ள பாலக்கிரீடைப் பாசுரம். இது மயிலை மாதவதாசன் பதிப்பில் எண்சீர் ஆசிரிய விருத்தமாகக் குறிக்கப்பட்டுள்ளது. இதனையே,

''வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை
வெற்பிடை யிட்டத னோசைகேட்கும்''[118]

என்று அறுசீர் விருத்தமாய்க் கொள்ளுதலும் உண்டு. எண்சீர் விருத்தமாகக் கொள்ளுதலே நேரிது.

பெரியாழ்வார் பாடல்கள் அனைத்தும் எதுகை, மோனை முதலிய தொடையழகுகளும் பெற்றுவிளங்குகின்றன.

பாட்டின் கருத்தும் பாட்டின் ஓசையும் பருந்தும் நிழலும் போல ஒன்றோடொன்று தொடர்புடையனவாக விளங்கி யாண்டும் நலம் சேர்க்கின்றன.

பெரும்பாலான பாடல்களில் இறைவனை முன்னிலைப் படுத்திப் பாடியனவாகவே பாட்டுக்கள் அமைந்துள்ளன.

'சீதக்கடல்' என்னும் இரண்டாவது திருமொழி பாதாதி கேசமாக அமைந்து, கண்ணனின் பாதம் முதல் குழல் வரை புனைந்து பாடுவதாக விளங்குகிறது.

ஒரே ஈற்றுச் சொல் அல்லது தொடர் கொண்டு முடிவன வாகப் பல திருமொழிகள் அமைந்துள்ளன.
அடையாளம் (3-10). கண்டாருளர் (4-1), திருமாலிருஞ் சோலையே (4-2), நரகம் புகாள் (4-6), அரங்கத் தரவணைப் பள்ளி யானே (4-10) ஆகியன இதற்குச் சான்றுகளாம்.

**நடையியல்**

புலவர்கள் தம் கருத்தை வெளிப்படுத்தும் முறைகளில் அவர்தம் நடை சிறப்பிடம் பெறுவதைக் காணலாம். நடை என்பது புலவர்களின் சொல்லாட்சித் திறனை மட்டும் வெளிப் படுத்துவதாகாது. கவிஞன் தன் உணர்வுகளைக் கற்பவர் எளி

தில் உணரும் வண்ணம் வெளிப்படுத்துவதே நடையின் நோக்கமாகும்.

புலவர்கள் தாம் எழுதப் புகுமுன் தமக்கென ஒரு நடையை வரையறுத்துக் கொண்டு செய்யுள் இயற்றுவதில்லை. அவர்களின் உணர்வு வழிச்சொற்கள் இயற்கையாக வந்தமைந்து நடை யழகு அமைகின்றது. இயல்பான அவர் தம் நடையினைக் கண்டு அது இன்னாருடைய நடை என்று கற்றவர் எளிதில் அறியலாம். ஆதலின் புலவர்களை அடையாளம் காட்டும் சிறப்புடையதாக நடையழகு அமைகிறது.

ஆழ்வார்கள் அனைவரும் இனிய தமிழில் பக்திப் பாசுரங்களைப் பாடியுள்ளனர். ஒவ்வோர் ஆழ்வாரும் வெவ்வேறு நடையில் பாசுரங்களை அமைக்கின்றனர். பெரியாழ்வாரும் தமக்கென ஒரு நடைச்சிறப்பைக் கொண்டு பாசுரங்களை அமைக்கிறார்.

### அ) கருத்து விளக்கம்

கவிஞர்கள் தம் கருத்தை வெளிப்படுத்தும் போது அவற்றைத் துய்ப்பார் பெரிதும் பயன்பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் செய்யுள்களை அமைக்கின்றனர். அதனை வலியுறுத்த அவர்கள் ஏற்புடைச் சொற்களை எடுத்தாளுதல் இன்றியமையாததாகும். துய்ப்பார் மனத்தில் அவை நன்கு பதிதல் வேண்டும். இத்தகைய நடையியல்பினை,

"மானிட சாதியில் தோன்றிற்றோர் மானிட சாதியை
மானிட சாதியின் பேரிட் டால்மறு மைக்கில்லை,"[119]

என்ற பாசுரத்தில் காணலாம். இவ்வரிகள் மானிட சாதியின் சிறுமையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. தம் கருத்தினை விளக்க மேற்கொள்ளும் இவ்வெளிய நடை ஆழ்வார் தம் பாசுரத்தின் வழி வெளிப்படுகின்றது.

### ஆ) உணர்ந்தமை வெளிப்படுத்தல்

தாம் பெற்ற இன்பத்தினைப் பிறரும் உணரும் பொருட்டுப் பாடல்களை அமைத்தவர்கள் ஆழ்வார்கள். இறை

யருளை உணர்ந்த அவர்கள் அதனை வெளிப்படுத்தும் திறன் இறைவனாலேயே ஏற்பட்டது என்ற எண்ணம் உடையவர் களாய் விளங்கினர். பெரியாழ்வார் அவ்விறையருளை உணர்ந்ததற்குக் காரணமான பக்திச் சுவையைத் தாம் அனுப வித்த தன்மையை,

"காலு மெழா கண்ண நீரும்நில்
லா உடல் சோர்ந்து நடுங்கி, குரல்
மேலு மெழாமயிர்க் கூச்சு
மறாஎன தோள்களும் வீழ்வொழியா"[120]

எனக் குறிப்பிடுகிறார். இப்பாடலில் பக்திச் சுவையைக் காட்டும் நடையழகு சிறப்புடையதாக அமைகிறது.

**இ) சொற்சிலம்பம்**

ஒரு பொருளின் சிறப்பை எடுத்துக்காட்ட அதன் பல் வேறு குணங்களை அடுக்கிக் கூறுதல் இயல்பாகும். இவ் வகையிலும் ஒருவிதநடையழகு அமையும். பெரியாழ்வார் இந்நடையினைக் கையாள்வதை,

"குலமலை கோலமலை
குளிர்மாமலை கொற்றமலை,
நிலமலை நீண்டமலை
திருமாலிருஞ் சோலையதே"[121]

என்னும் தொடர்களால் அறியலாம். மேலும்,

"குன்றாடு கொழு முகில்போல்
குவளைகள்போல் குரைகடல்போல்,
நின்றாடு கணமயில்போல்
நிறமுடைய நெடுமாலூர்"[122]

என்னும் பாசுரத்தில் உவமைகளை அடுக்கி அமைக்கும் வரி களும் இக்கருத்தை வலியுறுத்துகின்றது.

நடையில் அமையும் வடிவங்களே கற்போர்க்குப் பெரிதும் இன்பம் பயப்பனவாகும். தெளிந்த நடையுடைய இலக்கியம்

எக்காலத்தும் மக்களால் போற்றப்பெறும். தெளிந்த நடை என்பது எளிமை, இனிமை, புதுமை, தெளிவு, உணர்ச்சி முதலியவற்றைக் குறிக்கும்.

"ஒரு புலவரின் நடை அவருடைய உள்ளத்தின் இயல்பை ஒட்டி அமைவதாகும். அவருடைய உள்ளத்தில் தெளிவு இருந்தால் நடையில் எளிமை விளங்கும். அவருடைய உள்ளத்தில் ஆர்வம் மிகுதியானால் நடையில் ஆற்றல் மிகுதியாகும்"[123] என்பர். அதுவே உயர்ந்த நடையாகவும் அமையும். அருஞ் சொற்களைக் கொண்டு அமையும் நடை கடுநடை என்று பெயர்பெறுமன்றி உயர்ந்த நடையாகாது. "அருஞ்சொற்களை மிகுதியாகக் கையாளாமலே உயர்ந்த இலக்கியத்தைப் படைத்தல் பெரும்புலவர்க்கே இயலும்"[124] என்பர் மு.வ. இச்சிறப்பு பெரியாழ்வார் பாசுரத்தில் அமைவதனை,

"திருவடி தன் திருவுருவும் திருமங்கை
மலர்க்கண்ணும் காட்டி நின்று
உருவுடைய மலர்நீலம் காற்றாட்ட
ஓசலிக்கு மொளிய ரங்கமே"[125]

என்பதனால் காணலாம்.

**க) நடையில் எளிமை**

நடையில் எளிமை என்பதற்கு எளிய சொற்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம் முதலியவற்றைக் கொள்ளலாம். அவ்வகையில் பெரியாழ்வார் பாசுரங்களில் வழக்குச் சொற்கள் மிகுந்திருக்கக் காண்கிறோம். அவருடைய கருத்துக்களை வெளிப்படுத்தும் ஆற்றலின் எளிமையை இது காட்டுகிறது.

இலக்கியம் செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டுதான் அமையவேண்டும் என்பதில்லை. இதனை ஆழ்வார் பாசுரங்களின் வழி நன்கறியலாம். கண்ணனைச் சீராட்டி வளர்க்கும் யசோதையின் கூற்றாய் வரும் பாசுரங்களில் பெரியாழ்வார் பெரிதும் பேச்சு மொழிகளையே எடுத்தாளுகின்றார். இதனை,

"துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய,
அப்பன்வந் தப்பூச்சி காட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்"[126]

என்ற பாசுரத்தால் அறியலாம். இவ்வரிகளில் பேச்சுமொழியின் தன்மையை நடையில் அமைத்துக் காட்டும் திறனைப் பெரியாழ்வாரிடம் காணலாம்.

"சீரொன்று தூதாய்த் துரியோ தனன்பக்கல்"[127]

என்ற அடி எளிதானது. பொருளில் மயக்கம் யாதும் இல்லை. ஆயினும் இவ்வடியில் மோனை இல்லையென்பது உணரத்தக்கது. மோனையை ஏற்கக் கூடியதாய் உள்ள சொற்களில் 'துரியோதனன்' என்பது ஒன்றுதான் இருந்தது. வையாபுரிப் பிள்ளை அவர்கள் இதனைப் பற்றி எழுதும்போது,

> "ஆகவே துரியோதனன் என்பது திரியோதனன் என்று கண்டேன். பின்னர் பெரியாழ்வார் திருமொழி ஓலைச்சுவடிகளை ஒத்திட்டுப் பார்த்தபோது மூன்று பிரதிகளில் 'திரியோதனன்' என்ற பாடமே அகப்பட்டது. இவ்வழக்கு முற்காலத்து நூல்களில் பல இடங்களில் காணலாம். தற்காலத்திலுங்கூட ஒரு சிலர் திரியோதனன் என்று கூறுகிறார்கள்.
>
> பெரியாழ்வார் 'திரியோதனன் பக்கல்' என்றுதான் அருளிச்செய்திருக்க வேண்டும். திரியோதனன் என்ற தமிழ்ப்பாடம் பிழை என்று கருதி வடமொழி வல்லவர்கள் 'துரியோதனன்' என்று திருத்தி விட்டார்கள்"[128]

என்று கூறுகிறார்.

இதனால் சாதாரண மக்கள் பேசும் மொழியை அல்லது சொல்லை ஒதுக்கிவிடுதல் கூடாது என்பது புலப்படுகிறது. மேலும் கல்யாணம் என்ற சொல்லை அறியாதவர்கள் இருக்க முடியாது. இதை நமது சமுதாயத்தில் பாமர மக்கள் 'கண்ணாலம்' என்று கூறுகிறார்கள். சென்னை நகரில் இச் சொல்லை அடிக்கடி கேட்கிறோம். பாரதியாரும்,

"பிறன் கண்ணாலம் செய்துவிட்ட பெண்ணை"[129]

என்று பாடியுள்ளார். இதற்கு முன்பு பெரியாழ்வாரும் தம் திருமொழியில்,

"பெருப்பெ ருத்தகண் ணாலங்கள்செய்து"[130]

என்று அருளிச் செய்திருக்கின்றார். மேலும்,

"கண்ணாலஞ் செய்யக் கறியும் கலத்த
தரிசியு மாக்கி வைத்தேன்"[131]

என்ற பாசுரத்தாலும்,

"கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக்
கைப்பிடிப்பான்"[132]

என்ற நாச்சியார் திருமொழியாலும் அறியலாம். பெரியாழ்வார் போன்ற பெரியோர்கள் வழங்கிய சொல்லைப் 'பிழை' என்று கூற யாரும் துணிய மாட்டார்கள். ஒரு காலத்து மக்கள் பேச்சு வழக்கில் வழங்கிவரும் சொற்களே அக் காலத்துத் தோன்றிய நூல்களில் பெரும்பாலும் கொள்ளத் தக்கன என்று அறியலாம்.

பக்திப் பரவசத்தால் திருமாலைப் பாடிப் பரவுதலையே தம் பேறாகக் கருதியவர்கள் ஆழ்வார்கள். அவ்வழியில் பெரியாழ்வாரும் திருமாலின் திருநாமங்களைப் புகழ்ந்து பாடுவதில் இன்பம் அடைகின்றார்.

"நேரா அவன்தம்பிக் கேநீ ளரசீந்த,
ஆரா வமுதனைப் பாடிப்பற
அயோத்தி வேந்தனைப் பாடிப்பற"[133]

என்னும் பாசுரத்தில் எளிமை இன்பம் வெளிப்படுகிறது.

### உ) நடையில் இனிமை

தமிழ் என்பதற்கு இனிமை என்ற பொருளுண்டு. ஆழ்வார் தம் பாசுரங்களைத் 'தமிழ்மாலை' என்றே குறிப்பிடுவதனை,

"பொன்திகழ் மாடப், புதுவையர் கோன்பட்
டன்சொல்,
இன்தமிழ் மாலை வல்ல வர்க்கிட ரில்லையே"[134]

என்னும் பாசுரத்தால் அறியலாம். இவ்வினிமையை அவர் இறைவன்பால் கொண்ட பக்தியின் வாயிலாகவும், அவன் செய்தஅருளின் வாயிலாகவும் அனுபவிக்கின்றார். இவ்வனுபவம் அவருடைய நடையிலும் வெளிப்படுகின்றது.

### ஊ) நடையில் தெளிவு

சொற்கள் எளிமையாக அமையினும் உள்ளத்தில் தெளிவும் குழப்பமின்மையும் இருந்தாலன்றி நடை தெளிவுற அமையாது. திருமால் வேதங்களாலும் தேடற்கரியவன். தம்மை உணர்ந்து பக்தி செய்பவர்க்கு அருளும் பான்மையன். இவ்வுண்மையை உணர்ந்தவர் பெரியாழ்வார். இத்தெளிவை வெளிப்படுத்த,

"பொன்னைக்கொண் டுரைகல்மீதே
நிறமெழ உரைத்தாற்போல்,
உன்னைக்கொண்டென் நாவகம்பால்
மாற்றின்றியுரைத்துக் கொண்டேன்
உன்னைக்கொண் டென்னுள்வைத்தேன்
என்னையு முன்னிலிட்டேன்"[135]

என்னும் பாசுரமானது பிறரும் எளிதில் உணரும்வண்ணம் அமைகிறது. இது, இறையனுபவத்தின் தெளிவைக் காட்டுகிறது.

### எ) நடையில் உணர்ச்சி

கவிஞர்களின் கருத்துக்கள் உணர்ச்சியின் காரணமாகச் செய்யுள் வடிவம் பெறுகின்றன. ஆழ்வார்களின் பாடல்கள் பக்திச்சுவை உணர்வால் அமைந்தவையாகும். பெரியாழ்வாரின் பாசுரங்களிலும் பலவிதமான உணர்ச்சிப்

பெருக்குகள் செய்யுள் நடையில் வெளிப்படுகின்றன. கன்றின் பின் போக்கிய அன்னையின் கூற்றாகத் தொடங்கும்,

"அஞ்சன வண்ணனை ஆயர் கோலக் கொழுந்தினை,
மஞ்சன மாட்டி மனைகள் தோறும் திரியாமே,
கஞ்சனைக் காய்ந்த கழலடி நோவக் கன்றின்பின்
என்செயப் பிள்ளையைப் போக்கினேன் எல்லே
பாவமே"[136]

என்னும் திருமொழியின் பாசுரங்களிலும், யசோதையின் கூற்றாய்த் தொடங்கும்,

"சிலைக் குதம்பை ஒருகா தொருகாது
செந்நிற மேல்தோன் றிப்பூ,
கோலப் பணைக்கச்சும் கூறை யுடையும்
குளிர்முத் தின்கோ டாலமும்,
காலிப் பின்னே வருகின்ற கடல்வண்ணன்
வேடத்தை வந்து காணீர்,
ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்!
நானேமற் றாரு மில்லை"[137]

என்னும் திருமொழியின் பாசுரங்களிலும் இத்தகைய உணர்ச்சி வெளிப் பாட்டினைக் காணலாம். மேலும்,

"உறகல் உறகல் உறகல்
ஒண்சுட ராழியே! சங்கே,
அறவெறி நாந்தக வாளே!
அழகிய சார்ங்கமே! தண்டே"[138]

என்ற பாசுரம் ஆழ்வார் உணர்ச்சியை அமைக்கும் நடைச் சிறப்பிற்கு எடுத்துக்காட்டாகும்.

**ஏ) வாய்மொழி இலக்கியத் தாக்கம்**

பெரியாழ்வார் பாசுரங்களில் ஒலிவடிவம், சொல் அமைப்பு, கருத்துவிளக்கம் [illegible]

வாய்மொழி இலக்கியத்தின் தாக்கத்தினை வெளிப்படுத்து கின்றன. 'ஆரோ ஆரிராரோ' எனத் தாலாட்டில் அமையும் ஒலிக்குறிப்பு இலக்கிய வடிவம் காணும்போது, 'தாலோ தாலேலோ' என்று அமைகின்றது. 'அச்சோவச்சோ' என்னும் ஒலிக்குறிப்புச் சொல்லும், 'அப்பூச்சி' காட்டுகிறான் என்ற சொல்லும் திரும்பத் திரும்ப வரும் ஒலிவடிவத்திற்குச் சான் றாக அமைகின்றன. சொற்றொடர் திரும்பத் திரும்ப வந்து அமையும் போக்கினை,

"சங்குவில் வாள்தண்டு சக்கர மேந்திய
அங்கைக ளாலே வந் தச்சோ அச்சோ
ஆரத் தழுவாய்வந் தச்சோ அச்சோ"[139]
"அப்பன்வந் தப்பூச்சி காட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்"[140]

என்னும் பெரியாழ்வாரின் பாடல்களில் காணலாம். இவை வெவ்வேறு பாசுரங்களில் அமையினும் சொற்றொடர்கள் மீண்டும் வந்து வாய்மொழி இலக்கியக் கூற்றினை விளக்குவ தைக் காட்டுகின்றன.

வாய்மொழி இலக்கியங்களில் உள்ள மற்றொரு சிறப்பு, மீண்டும் மீண்டும் வரும் கருத்து விளக்கமாகும். கருத்தினை விளக்கும் பொருட்டாக, அவை திரும்பத் திரும்ப அமையும். கண்ணனின் அழகை அனுபவிக்கும் யசோதை ஒவ்வொரு உறுப்பின் எழிலையும் எடுத்துக் கூறி, ஏனையோரையும் அழைத்துக் காட்டுவதனை,

"தோள்க ளிருந்தவா காணீரே
சுரிகுழ லீர்வந்து காணீரே"[141]
"கைத்தலங் கள்வந்து காணீரே
கனங்குழை யீர்வந்து காணீரே."[142]

எனவரும் பாசுரங்களில் தம் கருத்தை வலியுறுத்த மீண்டும் மீண்டும் ஒரே தொடர் அமைவதைக் காணலாம்.

பெரியாழ்வார் நடையின் இயல்புகளுள் சொற்கள் திரும்பத் திரும்ப வருதலும் ஒன்றாகும்.

**ஐ) உரையாடல் நடை**

பெரியாழ்வார் பாசுரங்களில் உரையாடல் நடையும் அமைகின்றது. இதனை மூன்றுவகைப் படுத்தலாம்.

1) தன் கூற்றாய் ஆழ்வார் வினவி அவரே விடை கூறும் முறையில் அமையும் திருமொழி.

2) கண்ணனைப் பற்றி ஆயர்பாடி மகளிரின் முறையீடும், அதற்கு யசோதையின் பதிலாக அமையும் திருமொழிகள்.

3) கண்ணனைக் காதுகுத்த யசோதை அழைக்க, அதற்குக் கண்ணனின் மறுப்புரையும், யசோதை வேண்டுதலும் ஆக அமையும் திருமொழி.

இவற்றில் நாடக நலன் அமைந்து சிறத்தலைக் காணலாம்.

**ஒ) அடுக்கி வரும் சிறப்புநடை**

புலவர்கள் தாம் பாடும் பொருளைப் பலவாகப் பாடினும் அவர்கள் எண்ணமெல்லாம் ஒன்றிலேயே சிறப்புடன் ஈடுபட்டு நிற்கும். அவர்களுடைய நினைவு நடையிலும் வெளிப்பட்டு நிற்கும். அம்முறையில் பெரியாழ்வார் தம் பாசுரங்களில் இறைவனின் சிறப்பைக் கூறும் சிறப்புப் பெயர்களை அடுக்கிப் பாடுவதனை,

"செருவாளும் புள்ளாளன், மண்ணாளன்,
செருச்செய்யும் நாந்தக மென்னும்
ஒருவாளன், மறையாள னோடாத
படையாளன், விழுக்கை யாளன்,
இரவாளன், பகலாளன், எனையாளன்,

ஏழுலகப் பெரும்புர வாளன்,

திருவாளன்"[143]

என்ற பாசுரத்தில் காண்கிறோம். இதில் ஆழ்வாரின் சிறந்த நடையழகு பொலிகிறது.

**கற்பார் மனம் கவர்ந்தவர்**

பெரியாழ்வார் பாசுரங்கள் பற்றிய இவ்வாய்வால் சங்கப் பாடல்களில் அமைந்துள்ள இயற்கை வருணனைகள், அகப் பொருள் மரபுகள், அணிநலங்கள் முதலியன ஆழ்வார் பாசுரங்களில் போற்றப்பட்டு வந்துள்ளமையை நம்மால் காண முடிகின்றது. மேலும் ஆழ்வாரின் பக்திப் பாடல்கள் கற்றவர்களும் மற்றவர்களும் சேர்ந்து பாடுதற்கு எளிதாய் அமைந்திருந்தமையையும் அறிகிறோம். எளிய நடையுடன், இனிய சந்தமும் சேர்ந்தமையால் ஆழ்வார் பாடலால் தமிழிலக்கியத்தில் ஒரு மாறுதலும் ஏற்பட்டது எனலாம். பண்டைத் தமிழிலக்கியங்களில் வரும் அகப்பொருட் செய்திகளில் சிலவற்றைப் பெரியாழ்வார் பொருத்தி மிகச் சிறப்பாகவும் சுவை மிக்கதாகவும் தம் பாடல்களைப் படைத்துள்ளார். நடையியற் சிறப்பாலும், யாப்பு நலத்தாலும், பக்திக் கனிவாலும் கற்பார் மனத்தைக் கவர்ந்து ஈர்க்க வல்லன பெரியாழ்வாரின் திருப்பாசுரங்கள் எனின் அது மிகையாகாது.

## பெரியாழ்வார் பாசுரங்களில் கவிதை நலம்

### குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | பெரியாழ். | திரு. | 87 |
| 2. | ,, | | 88/3 |
| 3. | ,, | | 92/3 |
| 4. | ,, | | 94 |
| 5. | ,, | | 97/3 |
| 6. | ,, | | 98 |
| 7. | ,, | | 363 |
| 8. | ,, | | 93 |
| 9. | ,, | | 95 |
| 10. | ,, | | 119/1 |
| 11. | ,, | | 123 |
| 12. | ,, | | 129/4 |
| 13. | ,, | | 133 |
| 14. | ,, | | 168/4 |
| 15. | ,, | | 202/3 |
| 16. | ,, | | 206/4 |
| 17. | ,, | | 246/3 |
| 18. | ,, | | 255 |
| 19. | ,, | | 264 |
| 20. | ,, | | 269 |
| 21. | ,, | | 267 |
| 22. | ,, | | 203/2 |
| 23. | ,, | | 89 |
| 24. | ,, | | 97/2 |
| 25. | ,, | | 203 |
| 26. | ,, | | 358 |
| 27. | ,, | | 364 |
| 28. | ,, | | 370 |

29. பெரிய. திரு. 1847
30. பெரியாழ். திரு. 368
31. ,, 133
32. நாச்சி. 549
33. பெரியாழ். திரு. 353/3-4
34. ,, 457/4
35. ,, 459/3-4
36. ,, 410
37. ,, 349/3-4
38. ,, 345/3-4
39. ,, 351/3-4
40. ,, 419/3-4
41. ,, 404/3-4
42. ,, 406/3-4
43. ,, 409/3-4
44. நளவெண்பா 97
45. பெரியாழ். திரு. 399/3-4
46 ,, 274/2
47. ,, 265/3-4
48. ,, 266/3-4
49. ,, 268/3-4
50. ,, 273/3-4
51. ,, 269
52. ,, 273
53. திருவாய். 3220
54. பெரியாழ். திரு. 37
55. பெரியாழ். திரு. 72
56. பெருமாள் திரு. 715
57. பெருமாள் திரு. 731
58. பெரியாழ். திரு. 23
59. ,, 242
60. பெருமாள் திரு. 732

61. தொல். பொருள். நூற்பா 1, நச். உரை.
62. ஆ. வேலுப்பிள்ளை, 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்', ப. 105
63. பெரியாழ். திரு. 254-263.
64. ,, 286–296
65. ,, 297-306
66. ,, 254
67. கிருஷ்ணவேணி அம்மையார், 'வில்லிபுத்தூர் விளக்கு'. ப. 123.
68. பெரியாழ். திரு. 257/3-4
69. ,, 256, 260, 261, 262
70. ,, 256/3-4
71. திருக்குறள். 1094.
72. சிலம்பு. 7/31
73. சீவக. 1971/3–4
74. பெரியாழ். திரு. 260/3-4
75. ,, 261/3-4
76. ,, 262/3-4
77. ,, 287/1
78. பெரியாழ். திரு. 286/2-3
79. ,, 289
80. ,, 290/3-4
81. ,, 291
82. ,, 292/3-4
83. ,, 293
84. தொல். பொருள். நூற்பா 203.
85. மே. நூல், நூற்பா 204.
86. பெரியாழ். திரு. 294
87. ,, 295/3-4
88. ,, 302

| | | | |
|---|---|---|---|
| 89. | பெரியாழ். | திரு. | 297/3 |
| 90. | ,, | | 297/4 |
| 91. | ,, | | 298/3 |
| 92. | தொல். பொருள். நூற்பா | | 140 |
| 93. | பெரியாழ். | திரு. | 299 |
| 94. | ,, | | 300 |
| 95. | நற். | | 184 |
| 96. | பெரியாழ். | திரு. | 304 |
| 97. | ,, | | |
| 98. | அகம். | | 145 |
| 99. | பெரியாழ். | திரு. | 305 |
| 100. | ,, | | 306 |
| 101. | திருப்பல். | | 4/1 |
| 102. | பெரியாழ். | திரு. | 87/1 |
| 103. | ,, | | 293/1 |
| 104. | ,, | | 412/1 |
| 105. | ,, | | 391 |
| 106. | ,, | | 247/1 |
| 107. | ,, | | 64/1 |
| 108. | ,, | | 203 |
| 109. | ,, | | 13/1-2 |
| 110. | ,, | | 128/1 |
| 111. | ,, | | 352/1-2 |
| 112. | ,, | | 466/1-2 |
| 113. | ,, | | 466/1-2 |
| 114. | ,, | | 360/1-2 |
| 115. | ,, | | 360/1–2 |
| 116. | ,, | | 128/1 |
| 117. | ,, | | 202/1 |

118. பெரியாழ். திரு. 202/1
119. ,, 384/1-2
120. ,, 457/1-2
121. ,, 353/3-4
122. ,, 410/1-2
123. மு. வரதராசன். 'இலக்கியத் திறன்', ப. 238
124. மே. நூல், ப. 244
125. பெரியாழ். திரு. 412/3-4
126. ,, 123/3-4
127. ,, 176/1
128. எஸ். வையாபுரிப் பிள்ளை, 'இலக்கிய விளக்கம்', ப. 126.
129. பாரதியார் கவிதைகள். கண்ணன் பாட்டு. 12. கண்ணன்-என் காதலன். பாடல் 9/2
130. பெரியாழ். திரு. 295
131. நாச்சி. 615
132. ,, 615
133. பெரியாழ். திரு. 316/3-4
134. ,, 243/3-4
135. ,, 467
136. ,, 234
137. ,, 244
138. ,, 451
139. ,, 98/3-4
140. ,, 123/4
141. ,, 33/4
142. ,, 34/4
143. ,, 421

# முடிவுரை

தமிழகத்தில் வைணவம் மிகத் தொன்மை வாய்ந்த சமயம் என்பதற்கு வேதங்களும், இதிகாச புராணங்களுமே மிகச் சிறந்த சான்றுகளாகும். தொல்காப்பியத்தில் திருமாலைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என் நீரல்வகையாகப் பகுத்து இவ்வுலகத்தை நானிலம் என்று வழங்கியபோதே, இங்குத் திருமால் வழிபாடும் தோன்றியது. முல்லை நில மக்கள் திருமாலை வழிபட்டனர். எனவே, அதற்கு முன்னரே திருமால் வழிபாடு இருந்திருக்க வேண்டும் என்று புலனாகிறது.

முல்லைநில மக்கள் வணங்கி வந்த இந்தத் திருமால் வழிபாடு தொல்காப்பியர் காலத்து மற்றைய நிலத்துக் கடவுளர் வழிபாடுகளிலும் சிறப்புற்றிருந்தது என்று கூறலாம். சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம் முதலிய காப்பியங்களிலும் திருமால் வழிபாட்டைப் பற்றி விளக்கங்கள் காணப்படுகின்றன. திருமால் தலங்களில் திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை முதலியவை மிகத் தொன்மையான தலங்களாகும். திருமால் வழிபாட்டிற் சிறந்த பெரியோரைப் பாகவதர் என்னும் பெயரால் பண்டைத் தமிழர் வழங்கலாயினர். திருமாலுக்கு அடிமைத் தொழில் செய்யும் 'இல்லறத்தாரை அடியார் என்றும், முற்றத் துறந்த துறவிகளைப் பகவர் என்றும் அழைத்தனர்.

பரிபாடலில் திருமாலைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. எனவே இடைக்கால வைணவ வளர்ச்சிக்குப் பரிபாடல் வழிவகுத்தது என்பதும், ஆழ்வார்களின் பாசுரங்கள் அருளிச் செய்யப்பட்டமைக்கு அது பெரிதும் துணைபுரிந்தது என்பதும் அறியப்படுகின்றன.

பரிபாடற் புலவர்கள் பிற்காலத்துத் தோன்றிய ஆழ்வார்களுக்கு வழிகாட்டிகளாக விளங்கினர். நாலாயிர திவ்ய பிரபந்தம் பரிபாட லுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இத்தகைய புகழ்பொருந்திய வைணவ சமயம் களப்பிரர் ஆட்சிக் காலத்தில் பெரிதும் செல்வாக்குப் பெறாது மங்கலாயிற்று. பின்னர் ஆழ்வார்கள் தோன்றி அச்சமயத்திற்குப் புத்துயிர் அளித்தனர்.

ஆழ்வார்களுள் பெரியாழ்வார் தலைசிறந்தவர் ஆவார். இவர் தமிழிற் பெரும் புலமையும் கவிபாடும் திறமும் பெற்றிருந்தார்.

சங்கப் பாடல்களில் காணப்பெறும் இயற்கை வருணனைகள், காதல் மரபுகள் முதலியன ஆழ்வார் பாசுரங்களிலும் போற்றப்பட்டு வந்துள்ளமையைக் காண்கிறோம். ஆழ்வாரின் பக்திப் பாடல்கள் கற்றவரோடு மற்றவரும் பாடுதற்கு ஏற்ற முறையில் எளிதாய் அமைந்துள்ளன. பக்தி இயக்கக் காலத்தில் இசை ஏற்றம் பெற்றது.

பக்தி இயக்கத்தின் செல்வாக்கு, கவிஞர்களின் உள்ளத்தைக் கவரலாயிற்று. காதலால் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களின் தொகுதியே நாலாயிர திவ்ய பிரபந்தமாகும்.

ஆழ்வார்கள் இறைவனையே கவிக்குரிய பொருளாகக் கருதினர். கவிதை இறைவனை வழிபடுதற்கே அமைய வேண்டுமென்பது ஆழ்வார்களின் குறிக்கோளாகும். பக்தி நெறி சமூதாய ஒற்றுமைக்கு வழிவகுத்தது. இவ்வாழ்வார்களின் பக்திப் பாடல்களே கம்பரின் காப்பியப் புதுமைக்கு வழிகாட்டின எனலாம்.

கருமயோகம், ஞானயோகம், பக்தி, பிரபத்தி என்னும் நான்கு நெறிகளில் ஒன்றாகவே பக்தியைக் குறிப்பிடுகின்றனர். மறுமை நோக்கி இம்மை இன்பங்களைத் துறந்து உடலை வருத்திக் காடும், மலையும் திரித்தலைந்து தவம் செய்வதிலும்

பக்தியாகிய மனநிலையை வளர்த்தலே சாலச் சிறந்தது என ஆழ்வார்கள் கருதினர்.

ஆழ்வார் பாசுரங்களில் மற்றக் கவிதைகளைப் போலன்றித் தாமாகவே வந்தமையும் எதுகை மோனைகளும், உவமைகளும், கற்பனைகளும் இடம்பெறுதலைக் காண்கிறோம். இறைவனிடம் கொண்ட அன்புநெறியே கவிதைகளாகக் காட்சியளிக்கின்றன.

பெரியாழ்வாரின் அருளிச் செயல்களில் சிறந்த இயற்கை வருணனைகளைக் காணலாம். இவர் தம்மைத் தாயாகவும் இறைவனைக் குழந்தையாகவும் ஆயப் பிள்ளையாகவும் கொண்டு அனுபவித்ததே யன்றி, அகப்பொருள் துறைகளின் கருத்துகளையும் அமைத்துப் பல சுவைமிக்க பாசுரங்களைப் பாடியுள்ளார்.

சமயப் பாக்களின் குறிக்கோள் ஆன்மாக்கள் இறைவனை யடைந்து இன்புறுதலாகும். பக்தி இலக்கியங்களில் மானிடக் காதல் தெய்வீகக் காதலாகக் காட்சியளித்தலைக் காண்கிறோம். இவ்வகப்பொருள் துறையமைந்த பாசுரங்களைக் கற்கும்பொழுது அவை இன்பம் நல்குவதுடன் பண்டைய சங்க இலக்கியங்களில் பெரியாழ்வாருக்கு இருந்த பயிற்சியையும் அறிவிக்கின்றன.

பெரியாழ்வார் காலத்து நால்வகைச் சாதிப் பாகுபாடுகள் இருந்தன. மறையவர் வேள்வி இவற்றினர். அவர் காலத்துத் தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்கள் சிலவற்றை அவர்தம் பாசுரங்கள் தெரிவிக்கின்றன.

பெரியாழ்வார் பெரும்புலவர் மட்டுமல்லர்; உலக அறிவும் அனுபவமும் சாலச் சிறந்து விளங்கியவர் என்பதை அவருடைய அருளிச் செயல்களினின்று அறியலாம்.

பெரியாழ்வார் பாசுரங்களின் வாயிலாக வைணவ சமய உண்மைகள் பலவற்றையும் அறியமுடிகிறது. வைணவ சமயத் தத்துவப்படி இறைவனுக்குப் பரத்துவம், வியூகம், விபவம்,

அந்தர்யாமித்துவம், அர்ச்சை எனப்படும் ஐந்து நிலைகள் உள்ளன. இவற்றுள் அர்ச்சை என்பது திருக்கோயில்களில் காணப்படும் உருவ வடிவமாகும். எந்த நிலையில் இருப்பினும் இறைவன் ஒருவனேயாவான். அனைவருக்கும் எளிதாகக் கிடைக்கும்படி இருப்பது அர்ச்சைநிலை. இதுவே ஆழ்வார்கள் அனைவரின் உள்ளத்தையும் கவர்ந்த நிலையாகும்.

இறையன்பில் உயர்ந்த நிலை பிரபத்தி நிலையாகும். இது முற்றிலும் இறைவனின் திருத்தாள்களைச் சரணடைதலாகும். ஆழ்வார்கள் அனைவரும் பிரபத்தி நெறியையே வலியுறுத்திக் கூறுவதால் ஆழ்வார்களை 'பிரபத்தர்கள்' என்று கூறுவர்.

தமிழகத்தில் மிகத் தொன்மையும் புகழும் வாய்ந்த வைணவ சமயம் இன்று மிகச் சிறந்து வாழ்தலைக் காணலாம். இன்றைய வைணவ சமய வளர்ச்சிக்கு ஆழ்வார்களும், ஆசாரியர்களும் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. அவர்களுள் சிறப்புமிக்கவராகிய பெரியாழ்வாரின் பாசுரங்கள் வழிபாட்டு நெறியினையும், சமய உண்மைகளையும் தெளிவாகத் தெரிவிப்பன. இவற்றுடன் கவிதை நலங்களையும் தம்மகத்தே கொண்டு விளங்குவன.

பெரியாழ்வாருக்கு வைணவ உலகம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது.

# பெரியாழ்வார் பாசுரங்கள்

## பாவினம்

| திருமொழி எண் | தலைப்பு | பாவினம் | பாடல்கள் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | பல்லாண்டு | குறள்வெண்செந்துறை | 1 | 6/7 சீர் |
| 2. | அடியோம் | 6 சீர் ஆசிரியவிருத்தம் | 11 | வெண்டளை |
| 1. | வண்ணமாடங்கள் | கலிவிருத்தம் | 10 | ,, |
| 2. | சீதக்கடல் | கலித்தாழிசை | 20 | வெண்டளை |
| | | கலிவிருத்தம் | 1 | |
| 3. | மாணிக்கங் | கலித்தாழிசை | 9 | |
| | கட்டி | கலிவிருத்தம் | 1 | |
| 4. | தன்முகத்துச்சுட்டி | கலிநிலைத்துறை | 10 | |
| 5. | உய்யவுலகு | எண்சீர் விருத்தம் | 11 | வெண்டளை |
| 6. | மாணிக்கக் | கலித்தாழிசை | 10 | ,, |
| | கிண்கிணி | கலிவிருத்தம் | 1 | |
| 7. | தொடர்சங்கிலி | அறுசீர் விருத்தம் | 11 | |
| 8. | பொன்னியற் | கலித்தாழிசை | 10 | ,, |
| | கிண்கிணி | கலிவிருத்தம் | 1 | |

| திருமொழி எண் | தலைப்பு | பாவினம் | பாடல்கள் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 9. | வட்டு நடுவே | கலித்தாழிசை<br>கலிவிருத்தம் | 9<br>1 | ,, |
| 1 | மெச்சூது | கலித்தாழிசை<br>கலிவிருத்தம் | 9<br>1 | ,, |
| 2. | அரவணையாய் | கலிவிருத்தம் | 11 | |
| 3. | போய்ப்பாடு | எழுசீர் விருத்தம் | 13 | |
| 4. | வெண்ணெ யளைந்த | அறுசீர் விருத்தம் | 10 | ,, |
| 5. | பின்னை மணாளன் | கலித்தாழிசை<br>கலிவிருத்தம் | 9<br>1 | ,, |
| 6. | வேலிக்கோல் வெட்டி | கலித்தாழிசை<br>கலிவிருத்தம் | 9<br>1 | வெண்டளை |
| 7. | ஆனிரை மேய்க்க | அறுசீர்விருத்தம் | 10 | |
| 8. | இந்திரனோடு | ,, | 10 | |
| 9. | வெண்ணெய் விழுங்கி | எண்சீர்விருத்தம் | 11 | |
| 10. | ஆற்றிருந்து | கலித்தாழிசை<br>கலிவிருத்தம் | 9<br>1 | ,, |
| 1. | தன்னே ராயிரம் | எழுசீர்விருத்தம் | 11 | |
| 2. | அஞ்சனவண்ணனை | கலிநிலைத்துறை | 10 | |
| 3. | சிலைக்குதம்பை | எழுசீர்விருத்தம் | 10 | |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | தழைகளும் | எண்சீர் விருத்தம் | 10 | |
| 5. | கட்டுக்குவிசோற்று | ,, | 11 | |
| 6. | நாவலம் பெரிய | ,, | 11 | |
| 7. | ஐய புழுதி | அறுசீர் விருத்தம் | 11 | |
| 8. | நல்லதோர் தாமரை | ,, | 10 | |
| 9. | என்னாதன் | கலித்தாழிசை | 10 | வெண்டளை |
| | | கலிவிருத்தம் | 1 | |
| 0 | நெறிந்த கருங்குழல் | கலிவிருத்தம் | 10 | |
| 1. | கதிராயிரம் | கலிநிலைத்துறை | 10 | |
| 2. | அலம்பா வெருட்டா | ,, | 11 | |
| 3. | உருப்பிணி நங்கை | கலிவிருத்தம் | 11 | |
| 4. | நாவ காரியம் | சந்தக்கலிவிருத்தம் | 11 | |
| 5. | ஆசைவாய்ச் சென்ற | எண்சீர் விருத்தம் | 10 | |
| 6. | காசும் கறையுடை | கலிநிலைத்துறை | 10 | |
| 7. | தங்கையை மூக்கும் | எழுசீர் விருத்தம் | 11 | |
| 8. | மாதவத்தோன் | கலிவிருத்தம் | 10 | |
| 9. | மரவடியை | அறுசீர் விருத்தம் | 11 | |
| 0. | துப்புடையாரை | எண்சீர் விருத்தம் | 10 | |
| 1. | வாக்குத் தூய்மை | ,, | 10 | |
| 2. | நெய்க்குடத்தை | அறுசீர் விருத்தம் | 10 | |
| 3. | துக்கச் சுழலை | ,, | 10 | |
| 4 | சென்னியோங்கு | கலிவிருத்தம் | 11 | |
| 44 | | | 47? | |

## பாவினப் பாகுபாடு

| எண் | பாவினம் | ம.மா.பதிப்பு | பழம்பதிப்பு | பாடல்கள் |
|---|---|---|---|---|
| 1. | குறள் வெண்செந்துறை | | | 1 |
| 2. | அறுசீர் விருத்தம் | 10 | 14 | 104 |
| 3. | கலிவிருத்தம் | 6 | 3 | 63 |
| 4. | கொச்சகக் கலிப்பா | | | 10 |
| 5. | கலித்தாழிசை | 10 | 10 | 104 |
| 6. | கலிநிலைத்துறை | 5 | 6 | 51 |
| 7. | எண்சீர் விருத்தம் | 8 | 7 | 84 |
| 8. | எழுசீர் விருத்தம் | 4 | 4 | 45 |
| 9. | சந்தக் கலிவிருத்தம் | 1 | | 11 |
| | | 44 | 44 | 473 |

* 2 – 3 ஆகிய திருமொழிகள் அந்தாதி அமைப்பில் உள்ளன.
* ம. மா. பதிப்பு—மயிலை மாதவதாசன் பதிப்பு குறிப்பிடுவது.
* பழம்பதிப்பு—அண்ணங்கராசாரியரின் பழம்பதிப்புகுறிப்பிடுவது.

## துணை நூற் பட்டியல்

**இலக்கியம்-இலக்கணம்**

அகநானூறு, கே. ராஜகோபாலையங்கார் பதிப்பு, கம்பர் விலாசம், சென்னை, ருதிரோத்காரி ஆண்டு.

அஷ்ட பிரபந்தம், வை. மு. கோ. உரை, சென்னை, நள ஆண்டு.

ஆசாரிய ஹிருதயம், மணவாள மாமுனிகள் அருளிச் செய்த வியாக்கியானத்தின் பகுதி 3-4, தமிழாக்கம், சென்னைப் பல்கலைக்கழகம், 1965.

இலக்கண விளக்கம், பொருளதிகாரம்-பாட்டியல், கோபாலையர் பதிப்பு, தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு, 1974.

இறையனார் அகப்பொருள், கழகம், சென்னை, 1960.

ஐங்குறுநூறு, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1920.

கம்பராமாயணம், பால காண்டம், வை. மு. கோ. உரை, சென்னை, 1957.

கம்பராமாயணம், யுத்த காண்டம், உ. வே சா. நூல் நிலையம், சென்னை, 1962.

கம்பராமாயணம், சுந்தர காண்டம், வை.மு. கோ. உரை, சென்னை, 1939.

கல்லாடம், காஞ்சி இரமாநந்த யோகிகள் உரை, சென்னை, 1911

கலித்தொகை, காசி விசுவநாதன் செட்டியார் வெளியீடு, கழகம், சென்னை, 1955.

கலிங்கத்துப் பரணி, ஆ. வீ. கன்னைய நாயுடு உரை சென்னை, 1949.

குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு, காசிமடம் வெளியீடு, கபீர் அச்சுக்கூடம், சென்னை, 1952

குருபரம்பரை, அழகியநம்பிதாசர் இயற்றியது, ஸ்ரீ ஆனந்தவிநாயகர் அச்சகம், ஸ்ரீவைகுண்டம், 1968

குறுந்தொகை, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1962.

சிரீவசனபூஷணம், (வியாக்கியானத் தமிழாக்கம்: பி. ஆர். புருஷோத்தம நாயுடு), கபீர் அச்சகம், சென்னை, 1970.

சிலப்பதிகாரம், உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1920.

சீவக சிந்தாமணி, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1949.

சுவாமிநாதம், செ. வை. சண்முகம் (ப-ர்), அண்ணா மலைப் பல்கலைக்கழகம், 1955.

சேக்கிழார் பிள்ளைத்தமிழ், சி. ஜெகந்நாதாசாரியார் பதிப்பு,

சேந்தன் திவாகரம், கழக வெளியீடு, சென்னை, 1958.

திரிகடுகம், புன்னைவனநாத முதலியார் உரை, கழகம், சென்னை, 1936.

திருக்குறள், பரிமேலழகர் உரை, கழகம், சென்னை, 1964.

திருக்கோவையார், சோமசுந்தரனார் உரை, கழகம்' சென்னை, 1970.

திருப்பாவை, அண்ணங்கராசாரியார் திவ்யார்த்த தீபிகை, சென்னை, 1960.

திருவருட்பா, ஆறாவது திருமுறை, வள்ளலார் பதிப்பகம், சென்னை, 1964.

திருவாசகம், நீ. கந்தசாமி பிள்ளை பதிப்பு, அண்ணா மலைப் பல்கலைக் கழகம், 1964.

திருவிளையாடற் புராணம், ந. மு. வே. நாட்டார் உரை, கழகம், சென்னை, 1965.

திவ்ய பிரபந்தம், முதலாயிரம், வையாபுரிப் பிள்ளை பதிப்பு, சென்னை, 1955.

தேசிகப் பிரபந்தம், வேதாந்த தேசிகர் செய்தது, 1905 (பிற செய்திகள் இல்லை).

தேவாரம், (சம்பந்தர்), கழகம், சென்னை.

,, (சுந்தரர்), தருமையாதீனம், தருமபுரம், 1964.

,, (திருநாவுக்கரசர்), கழகம், சென்னை, 1960.

தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம்பூரணம், கழகம், சென்னை, 1972.

தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், கழகம் சென்னை, 1953.

தொல்காப்பியம், அகத்திணையியல்-புறத்திணையியல், நச்சினார்க்கினியம், கழகம், சென்னை, 1947.

நம்பியகப்பொருள், கா. ர. கோவிந்தராச முதலியார் குறிப்புரை, கழகம், சென்னை, 1943.

நளவெண்பா, எல். ஸ்ரீநிவாச ஐயர் பதிப்பு, உ. வே. சா. நூல்நிலையம், சென்னை, 1960.

நற்றிணை, பின்னத்தூர் நாராயண சாமி ஐயர் உரை, சென்னை, இராட்சச வருடம்.

நாலாயிர திவ்ய பிரபந்தம், மயிலை மாதவதாசன் பதிப்பு, மணலி லஷ்மண முதலியார் வெளியீடு, சென்னை, 1962.

பகவத் கீதை, சித்பவானந்தர் பதிப்பு. திருப்பராய்த்துறை தபோவனம் பிரசுராலயம், எலமலூர், 1957.

பத்துப்பாட்டு, உ. வே. சா. பதிப்பு, சென்னை, 1918.

பதிற்றுப்பத்து, உ.வே. சா. பதிப்பு, சென்னை, 1920.

பரிபாடல், உ. வே. சா. பதிப்பு, 1935.

பழமொழி நானூறு, இராசமாணிக்கம் பிள்ளை உரை, கழகம், சென்னை, 1954.

பன்னிரு பாட்டியல், கா ர. கோவிந்தராச முதலியார் பதிப்பு, கழகம், 1949.

பிங்கல நிகண்டு, கழகம், சென்னை, 1968.

புறநானூறு, உ.வே.சா. பதிப்பு, சென்னை, 1894.

புறப்பொருள் வெண்பா மாலை, பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழகம், சென்னை, 1965.

பெரிய திருமொழி, 1, 2 ஆம் பத்துக்கள், அண்ணங்கராசாரியர் திவ்யார்த்த தீபிகை, சென்னை, 1927.

பெரிய புராணம் முதற்காண்டம், கு. சுப்பராயநாயகர் உரை, சூளை சைவ சமய பக்த ஜனசபை, சென்னை, 1893.

பெரியாழ்வார் திருமொழி, அண்ணங்கராசாரியர் திவ்யார்த்த தீபிகை, சென்னை, 1962.

மங்களாம்பிகைப் பிள்ளைத்தமிழ், தியாகராச செட்டியார் பதிப்பு, திரிசிரபுரம், விபவ வருடம்

மணிமேகலை, உ.வே,சா. பதிப்பு, சென்னை, 1931.

முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், கழகம், சென்னை, 1958.

முமுட்சுப்படி, கிருஷ்ணசாமி ஐயங்கார் பதிப்பு, திருச்சி, (ஆண்டு இல்லை)

யாப்பருங்கல விருத்தி, கழகம், சென்னை, 1973.

வெண்பாப்பாட்டியல், இரத்தினவேல் முதலியார் பதிப்பு, சென்னை, 1900.

**பிற நூல்கள்**

அருணாசலம், ப., 'பக்தி இலக்கியம்', தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1973.

இராகவையங்கார், மு., 'ஆழ்வார்கள் காலநிலை' (முதற் பகுதி), பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி, (ஆண்டு இல்லை).

,, 'ஆராய்ச்சித் தொகுதி', பாரி நிலையம், சென்னை, 1964.

,, 'தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி', தமிழ்ச் சங்கத்துப் பிரசுரம், மதுரை, 1922.

இராமாநுச தாதாசாரியார், 'வரலாற்றில் பிறந்த வைணவம்', சாரங்கபாணி தேவஸ்தானம், கும்பகோணம், 1973.

கிருஷ்ணவேணி அம்மையார், எஸ்., 'வில்லிபுத்தூர் விளக்கு', லிபர்டி அச்சகம், சென்னை, 1959.

சார்ங்கபாணி, இரா., 'பரிபாடல் திறன்', மாருதி பிரஸ், சென்னை, 1977.

சுப்பிரமணிய பிள்ளை, கா., 'பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியர் பொருளதிகாரக் கருத்து', தமிழ்நெறி விளக்கப் பதிப்பகம், சேலம், (ஆண்டு இல்லை).

சுப்புரெட்டியார், ந, 'பாண்டியநாட்டுத் திருப்பதிகள்', சுப்பிரமணிய பிள்ளை பதிப்பு, சென்னை, 1971.

,, 'தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை', ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை,

ஞானசுந்தரம், 'வைணவ உரையாசிரியர்கள்' கட்டுரை, 'தமிழ் இலக்கியக் கொள்கை', தொகுதி-1, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

செயராமன், ந.வீ., 'இலக்கண ஆய்வுக் கோவை', இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1980.

,, 'சிற்றிலக்கியச் செல்வம்', மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1978.

,, 'சிற்றிலக்கியத் திறனாய்வு', இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1980.

,, 'பாட்டியலும் இலக்கிய வகைகளும்', இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1981.

தேசிகவிநாயகம் பிள்ளை, 'மலரும் மாலையும்', பாரி நிலையம், சென்னை, 1954.

தேசிகன், ரா. ஸ்ரீ., 'கவிதைக்கலை' (இரண்டாம் பாகம்), பாரதி தமிழ்ச்சங்கம், கல்கத்தா, 1969.

நாமக்கல் கவிஞர், 'நாமக்கல் கவிஞர் பாடல்கள்', தணிகை உலகநாதன் பதிப்பு, லிப்கோ, சென்னை,

பரமசிவானந்தம், அ. மு., 'எல்லோரும் வாழ வேண்டும்', தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை, 1962.

பாரதியார், 'பாரதி நூல்கள்', சென்னை அரசாங்க வெளியீடு, சென்னை, 1954.

புருஷோத்தம நாயுடு, பி. ஆர்., 'புலமைப் பரிசு', பாரி நிலையம், சென்னை, 1971.

மறைமலையடிகள், 'மாணிக்கவாசகர் காலமும் வரலாறும்', கழகம், (இரண்டாம் பகுதி) சென்னை, 1930.

வரதராசன், மு., 'இலக்கியத் திறன்', பாரி நிலையம், சென்னை, 1959.

,, 'தமிழ் இலக்கிய வரலாறு', சாகித்திய அகாடமி, புதுதில்லி, 1972.

வரதராஜ அய்யர், இ. எஸ்., 'தமிழ் இலக்கிய வரலாறு', அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், 1957.

வேலுப்பிள்ளை, அ., 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்', 1969.

வையாபுரிப்பிள்ளை, எஸ்., 'அகராதி நினைவுகள்', தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1959.

,, 'இலக்கிய விளக்கம்', தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1958.

## தொகுப்பு நூல்கள்

'ஆய்வுக் கோவை', இந்தியப் பல்கலைத் தமிழாசிரியர் மன்றம்-ஐந்தாவது கருத்தரங்கு, தமிழ்த்துறை, மாநிலக் கல்லூரி, சென்னை, 1980.

'தமிழ் இலக்கியக் கொள்கை', (ச.வே. சுப்பிரமணியன்-தா. வே. வீராசாமி: பதிப்பாசிரியர்கள்), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1975.

'மதுரைத் தமிழ்ச்சங்க மலர்', பி.டி. இராசன் பொன் விழாக் குழு வெளியீடு, மதுரை, 1958.

'ஸுதர்சனர் பதில்', இரண்டாம் சதகம், ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார், திருச்சி, 1979.

'தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்' க. காந்தி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. முதற் பதிப்பு. டிசம்பர் 1980.

"A Chief feature of modern Vaishnavism derived from this system is the doctrine of "Prapatti" or absolute self-surrender".

Dr. S. Radhakrishnan

ரத்தம்
வடியும்
காயத்தை
விட
ஊமைக் காயத்தில்தான்
வலி
அதிகம்.

அந்த வலியை
ஆற்றிக்கொள்ள
அருந்தொண்டாற்றியது ...
அற்புத
பெரியாழ்வார்
போன்ற
ஆழ்வார்கள்
வளர்த்த
அருமையான
வைணவ மதம்
ஒன்றுதான்

கவியரசு கண்ணதாசன்

---

பரணி வெளியீடு
சென்னை - 600 012
☎ : 6427730